ஓம்

# ஒளவையார்

அருளிச்செய்த

# திருக்குறள்

மூலமும் உரையும்





பி. நா. சிதம்பர முதலியார் பிரதர்ஸ்

மதராஸ் : மதுரை : திருநெல்வேலி ஜங்ஷன்

பதிப்புரிமை] 1939 [விலை அணா 12.

ஓம்



ஔவையார்

அருளிச்செய்த

# திருக்குறள்

## மூலமும் உரையும்

திரு. D. தீனதயாளு, B. A., அவர்கள்

பல ஏட்டுப் பிரதிகளைக் கொண்டு

பரிசீலனை செய்து எழுதிய உரையுடன்

பி. எல். அருணாசல முதலியார் & பிரதர்ஸ்,
15, படவட்டம்மன் கோயில் தெரு,
பிரம்பூர் பேரக்ஸ் போஸ்டு, சென்னை.

பதிப்புரிமை] 1939 [விலை அணா 12.

# முன்னுரை

வேதம் வேதாகமம் முதலிய சாஸ்திரங்களிற் பலவற்றுள் தந்திரநூல் ஒன்று. அவற்றுட் டலைசிறந்தது ஔவைக் குறள் என்பது உலகப் பிரசித்தம். இந்நூலுக்குப் பலவுரைகள் இருப்பினும் சிற்றுரை ஒன்று எழுதித் தருக என எனது நண்பர் சென்னை வித்தியாரத்நாகர அச்சியந்திரசாலைத் தலைவர் ஸ்ரீமான் P. N. உலோக நாத முதலியார் அவர்கள் விரும்பியவண்ணம் என் சிற்றறிவிற் கெட்டியவளவு இச் சிறிய உரை எழுதலானேன்.

இவ்வுரை எழுதுவதற்கு முயன்றகாலத்தில் அச்சுப்பிரதி களிற் பொருள் விளங்காவாறு மூலம் சிதைந்திருந்ததை யறிந்து, இந் நூலைச் செப்பனிட முடியுமோ என எக்குற்றபொழுது, என் நண்ப ரொருவர் என்பால் உதவிய சில நூல்களின் எடுகளில் இந் நூலும் இருந்தது கண்டு தோன்றாத் துணையாக ஈசனே உதவினு னெனக் கருதி அவனுதவியால் இந்நூலை ஒருவாறு எழுதி முடித் தேன். இப் பிரதிக்கும் அச்சுப்பிரதிகளுக்கும் உள்ள வேற்றுமை களை ஆங்காங்குக் காட்டியதோடு அநேகர் அச்சிட்ட பிரதியைப் பார்க்கிலும் திருத்தியும் புதுக்கியும் பாடபேதமாகவிருந்ததை விளக்கி யும் செய்துள்ளேன். ஆகையினால் இதைக் கண்ணுறும் நண்பர்கள் வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்தில் பதிப்பித்த பிரதியை வாங்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

இந்நூல் எழுதத் தொடங்கியது முதல் பலவிதமான இடையூறு களால் எழுதுவது காலந் தாழ்த்தது கண்டு மனம் உடைந்ததும், ஊன்றுகோல்போல உறுதியும் ஊக்கமும் அளித்து முடிவுபெறச்செய்த நண்பரும் ஷை முதலியார் குமாரருமாகிய ஸ்ரீ. P. L. அருணசல முதலியாருக்கும் என்றும் கடமைப்பட்டவனாவேன்.

இவ்வித இடையூறுகளினிடையில் எழுதியதாகலின் குற்றமும் குறையும் காணப்படலாம். அவற்றை யறிந்தோரை உணர்த்துமாறு வேண்டிக்கொள்வதுடன், “குற்றம் களைந்து குறைபெய்து வாசித் தல், கற்றறிந்தோர் தங்கள் கடன்” என்ற பெரியார் வாக்குக்குப் பணிகின்றேன்.

D. தீனதயாளு.

# பொருளடக்கம்

# ஔவைக்குறள்

## மூலமும் விசேட உரையும்

முதலாவது

## வீட்டு நெறிப்பால்

அஃதாவது அறம், பொருள், இன்பம் எனப் பெரியோர் வகுத்த முறையில் உலக நலன்களை அடைந்து அனுபவித்துப் பின்னர், அவற்றில் பொருந்திய விருப்பு வெறுப்புக்களை அடக்கி, அவற்றினின்றும் விடுவித்துக்கொள்ளும் வழியைக் காட்டுவது. இவற்றுள், அறம் என்பது, நல்லொழுக்கத்தால் பிறர் வருத்தத்தை நீக்கும்பொருட்டுப் பொருள் முதலிய உதவும் உபகார குணம்; பொருள் என்பது அந் நல்லொழுக்கத்தின்படிச் செல்வத்தைச் சம்பாதிப்பது; இன்பம் என்பது, அவ்விதம் ஈட்டிய செல்வத்தை நல்லொழுக்கத்துடன் மனைவி மக்களுடனும் உறவின்முறையாருடனும் இருந்து அனுபவிக்கும் தன்மை. இம் மூன்றையும் ஒவ்வொன்றாக ஒடுக்கி ஈசுர நிலையை எய்துவது, அவற்றினின்றும் விடுவித்துக்கொள்வதாம்; இதனையே வீடு என்றார். இத்தகைய பாசங்களினின்றும் நீக்கப்பெறுவதே மோக்ஷ சாதனம் என்பது பெரியோர் கொள்கை. இதுபற்றியே ஔவையார்,

# வீட்டுநெறிப்பால்

"ஈதலறம் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காத லிருவர் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு" எனவும்,

சடகோபர் என்னும் நம்மாழ்வார் "அற்றது பற்றெனி லுற்றது வீடு" எனவும் கூறினார்.

மேலுரைத்த மோக்ஷ சாதனத்துக்கு வழிகாட்டியாக வீட்டு நெறியைக் கூறுவது இப்பகுதியாகும்; இது பத்து அதிகாரங்களை உள்ளடக்கியது.

# முதலதிகாரம்

## உடம்பின் கூறு

என்பது சரீரத்தின் அமைப்பும், அதன்விதமும், அதனாற் பெறக்கூடிய (மோக்ஷசாதனம்) பயனும் உரைப்பது. உடம்பின் பயன் என்றும் பிறப்பின் நிலைமை என்றும் பாடபேதமுண்டு.

**1. ஆதியாய் நிற்கு மறிவு முதலெழுத்
தோதிய நூலின் பயன்.**

(இதன் பொருள்.) ஓதிய - பெரியோர்கள் பாராட்டிய, நூலின்பயன் - வேதத்தினால் யாம் பெறத்தகும் பயனாவது, ஆதியாய் நிற்கும் - உற்பத்திக் காலத்தினின்றும் நிலைத்துள்ள, அறிவுமுதல் எழுத்து - அறிவு மயமான முதன்மையான ஓங்கார எழுத்து என்றவாறு.

இது கடவுள் வாழ்த்து. கடவுள் ஓங்கார ரூபமாக இருப்பதாக நூல்கள் கூறுவதால் அவ்வெழுத்தை அறியக் கடவுளையும் அறிந்தபடி என்றும், கடவுளை அறிய மோக்ஷ மெய்தும் என்றும் உரைத்தபடி. எந்நூலினும் தலை சிறந்தது வேதம் ஆதலால் அதைக் கற்பதனாற் பெரும்பயனை கடவுள் தன்மையும் அறிவு மயமும் பொருந்திய 'ஓம்' என்னும் பிரணவப் பொருள். பிரணவம் அறிந்தால் கடவுளை அறிதல் எளிது என்பது இதனாற் பெறும் பொருள். முதல் எழுத்து-

உலக பிரவர்த்திக்கே காரணமாகிய ஓங்காரம். இவ்வோசையி னின்றே மற்றைய எப்பொருளும் தோன்றியதால் 'ஆதியாய் நிற்கும்' என்றார். 'நின்ற' என்றும் பாடம்.

## 2. பரமாய சத்தியுட் பஞ்சமா பூதந் தரமாறிற் றோன்றும் பிறப்பு.

(இ - ள்.) பரம் ஆய சத்தியுள் - பரம்பொருளாகிய சிவத் தின் கிரியா சத்தியின் ஆற்றலால், பஞ்சமாபூதம் - ஐம்பெரும் பூதங்களும், தரம் மாறில் - தத்தமது அளவில் மாறுபட்டுக் கலந்தால், பிறப்புத் தோன்றும் - பிறப்பின் பயனாகிய சரீரம் உற்பவிக்கும் எ - று.

இஃது உடம்பின் பிறப்பினை உணர்த்தியது. ஐம்பெரும் பூதங்களாவன மண், நீர், தீ, காற்று, விண் என்பன; இவை ஏற்ற அளவிற் கலந்து சிவத்தின் தோற்றத்தாலும், கிரியா சத்தியின் செயலாலும் பிண்டமாகி உடல் உண்டாகின்றதால் இங்ஙனம் உரைத்தார். பஞ்சபூதமும் ஏற்ற அளவில் சேர வேண்டுதலின் தரம் மாறில் என்றும், பூத வுடம்பு உண்டா கிய பிறகே ஜீவன் அதிற் பொருந்தி உயிர்பெற்றுப் பிறப்புத் தோன்றும் என்றும் கூறினார்.

"சிவஞ்சத்தி தன்னை யீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும்
உவந்திரு வரும்பு ணர்ந்திங் குலகுயி ரெல்லா மீன்றும்
பவன்பிரம சாரி யாகும் பான்மொழி கன்னி யாகுந்
தவந்தரு ஞானத் தோர்க்கித தன்மைதான் றெரியு மன்றே"

எனச் சிவஞான சித்தியார் உரைத்தமையானும்,

" சிவமெனும் பொருளு மாதி சத்தியொடு
சேரி னெத்தொழிலும் வல்லதாம்
இவள் பிரிந்திடி னியங்குதற்கு மரி
தரிதெனு மறை யுரைக்குமால் "

என ஆனந்த லகரியில் கண்டமையாலும், சிவத்திற் சத்தி அடங்கியதென்பதும், சத்தியின் செயலால் பிறப்பு முதலியன நிகழ்கின்றன என்பதும் உணரப்படும்.

'சத்தியுடன்' என்றும் 'தரமாக' என்றும் பாடபேதங்கள் சிறப்பின்மை காண்க.

## 3. ஓசை பரிச முருவஞ் சுவை நாற்ற மாசை படுத்து மனம்.

(இ - ள்.) ஓசை-சப்தமும், பரிசம்-ஊறும் (ஸ்பரிசமும்) உருவம் - காணப்படும் காட்சியும், சுவை - நாவின் உருசியும், நாற்றம் - முகரப்படும் மணமும் ஆகிய இவ்வைந்தும், மனம்-மனதினை, ஆசைபடுத்தும் - ஆசையாகிய பந்தத்துக்குட் படுத்தும் எ - று.

சப்த, ஸ்பரிச, ரூப, ரஸ, கந்தம எனப்படும் தன்மாத்திரைகளும் அவற்றின் கரணங்களாகிய செவி, மெய், கண், வாய், மூக்கு என்னும் ஐம்பொறிகளும் மனதைக் கெடுத்து வினையின்பாற் செலுத்தும் என்றபடி இச்சைகளே உலகத்தில் நன்மை தீமைகளுக்கு அடிப்படையான மாயையில் ஆசையை வளர்ப்பன ஆதலாலும், அவ் இச்சையில் செலுத்துவன ஐம்பொறி உணர்ச்சிகள் ஆதலாலும், அவை மனதைக்

கெடுக்கின்றவை என்று கூறினார். மனம் அந்தக்கரணம் ஆதலால் அது கெடச் சரீரமும் கெடும் என்றார். தன்மாத் திரையைக் கூறவே காரணங்களையும் உணர்த்தினார்.

'அளறு' என்றும் பாடம்; அதற்கு இவ் ஐந்தும் ஆசையைச் செய்யும் சேறு எனப் பொருள் கொள்க.

**4. தருமம் பொருள்காமம் வீடெனு நான்கு**
**முருவத்தா லாய பயன்.**

(இ - ள்.) தருமம் பொருள் காமம் வீடு எனும் நான்கும் - அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த் தங்கள் நான்கும், உருவத்தால் - வினைவயத்து உருவம்பெற்ற சரீரத்தால், ஆயபயன் - பெறக்கூடிய பயன்கள் ஆகும் எ - று.

பஞ்சபூதம், தரம் மாறியதாற் பிறப்பு எய்திய ஒவ் வொன்றும், ஊழ்வினைக்கு ஏற்ப அனுபவங்கள் உண்டு என்றாலும், ஈண்டு மானிடப் பிறவியின் மேன்மையே கருதி இந்நூல் எழுந்ததாதலால் மானிடத் தன்மையில், ஒவ்வொரு வனும், ஐங்காரணங்களின் வயப்பட்டவனாகின்றான்; அவற் றின் வழியாகப் பலன் பெறுவன புருஷார்த்தம் என்னும் அறம் செல்வம் இன்பம் மோக்ஷம் என்பனவாம். அவற்றை முறையே அடைவதே பிறந்ததனால் அடையும் பயன். உருவம் - சரீரம்: அஃதாவது சரீரத்தை அடைந்த பிறவி. மேற்குறளிற் 'பிறப்புத் தோன்றும்' (குறள்-2) என்றதால் உருவம் எனப்பட்டது.

உள்ளத்தின் நெகிழ்வால் பிறர் விஷயத்தில் அன்பின் பயனாய் எழுகின்ற உணர்ச்சியும் செய்யும் செய்கையும் ஆகிய தருமமும் அத்தரும வழியிலேயே சம்பாதிக்கும் செல்வமும், அச்செல்வத்தால் ஏற்ற இல்வாழ்க்கையில் தருமநெறியாக நுகரும் இன்பமும் அவ் இன்பத்தைத் தருமம் அறிந்து, யாவற்றையும் வெறுத்து இறைவன் இணையடி நினைதலும் ஆகிய நான்குமே புருடார்த்தம். இதன் உட்பொருளையே விளக்குவது "ஈதலறம்" என்னும் ஔவையார்ப் பாட்டு.

**5. நிலமைந்து நீர்நான்கு நீடங்கி மூன்று
மொலியிரண் டொன்றாகும் விண்.**

(இ - ள்.) நிலம் ஐந்தும் - மேற்கூறிய பஞ்சபூதங்களுள் நிலம் ஐந்து தன்மாத்திரையும், நீர் நான்கும் - ஜலம் நான்கு தன்மாத்திரையும், நீடு அங்கி மூன்றும் - நீண்ட அக்கினி மூன்று தன்மாத்திரையும், ஒலி இரண்டு - காற்று இரண்டும், விண் ஒன்று ஆகும் - ஆகாயம் ஒரு தன்மாத்திரையும் கொண்டவை ஆம் எ - று.

இக்குறள், மேற்கூறிய 'ஓசை முதலிய' (குறள் - 3) பஞ்சதன்மாத்திரைகளும், 'பஞ்சமா பூதத்துள்' (குறள் - 2) அடங்கியிருக்கும் அருமையைக் கூறுகின்றது.

நிலம், என்னும் மண், பிறபொருள் தாக்குவதால், ஓசையெழுப்புவதும், யாவராலும் தொடப் பெறுதலும் (ஸ்பரிசம்) கண்ணால் காணக்கூடியதும் (ரூபம்) நாவாற் சுவைக்க மண்

சுவை (ரஸம்) தருதலும், நீர் முதலியவற்றின் சம்பந்தத்தால் மணமுற்றம் (கந்தம்) கொடுப்பதும் ஆக ஐந்து தன்மாத்திரையும் தோன்றக் கிடக்கின்றது.

நீர் என்பது, மலையினின்றும் இழியும்பொழுதும் பள்ளத்திற் பாயும்பொழுதும் ஓசை யெழுப்புவதும், யாவராலும் தொடக்கூடியதாகவும், காணக்கூடியதாகவும், உண்ணும்பொழுது சுவை தருதலும் ஆக நான்கு தன்மாத்திரைகள் கூடி யிருக்கின்றது. ஜலத்திற்கு வேற்றுப்பொருளின் இயைபினாலன்றித் தன்மட்டில் நாற்றம் இன்மை அறிக.

அங்கி யென்னும் நெருப்பு, வேறு பொருள்களை எரிக்கும் பொழுது ஓசைபடுத்தும்; தொடுவதால் வெப்பம் என்னும் உணர்ச்சியைக் காட்டும்; ஒளி வீசுதலால் காட்சிப் பிரமாணமும் உடையது. ஆனால், அதற்கென்று நாற்றமும், சுவையும் கிடையா.

ஒலியாகிய காற்று, காணமுடியாதது, வேற்றுப் பொருட் சம்பந்தத்தாலல்லாமல் தனக்கே நாற்றமும், சுவையும் இல்லை: பிற பொருள்களைத் தாக்குவதால் ஓசையும், மேற்படும்பொழுது ஸ்பரிச உணர்ச்சியும் மட்டில் உடையது.

விண் என்னும் ஆகாயமோ எனில், இடி முதலியவற்றின் ஓசைமட்டில் உடையது. தோற்றம் (உருவம்) அற்றது, தொடமுடியாதது, சுவையும் நாற்றமும் இல்லாதது.

எனவே ஐம்பூதங்களும் ஒன்றுக்கொன்று ஒவ்வொரு தன்மாத்திரை குறையப்பெற்றுள்ளவை நன்கு விளங்கும்.

இத் தத்துவம் அறியாது, இக்குறள் நிலம் ஐந்தாவது நீர் நான்காவது......என்று எண்ணிக்கையைக் குறிப்பிட்டதாக உரைகூறிக் குறைபடுவர்.

ஒலி - காற்று. 'உலவை' என்றும் பாடம், அதற்கும் காற்று என்றே பொருள்.

## 6. மாயன் பிரம னுருத்திர னீசனே
## டாயுஞ் சிவமூர்த்தி யைந்து.

(இ - ள்.) மாயன் - விஷ்ணுவாகவும், பிரமன் - பிரமனுகவும், உருத்திரன் - உருத்திர மூர்த்தியாகவும், ஈசனேடு - மகேஸ்வரனுகவும், அன்றியும், ஆயும் சிவம் - சாஸ்திரங்கள் ஆராய்ந்துணரும் சதாசிவன் ஆகவும், மூர்த்தி ஐந்து - சிவபெருமான் முகங்கள் ஐந்து ஆகும் எ - று.

சிவபிரான் ஐந்து முகத்துடன் விளங்குகின்றவன் என்பது நூற்பிரமாணம் ஆதலின், அம் முகங்கள் யாவை என்றும் அவை செய்யும் தொழில் யாவை என்றும் இக்குறள் விளக்குகின்றது. அவையாவன, ஈசானம் (அனைத்தும் ஆளுதல்,) தற்புருடம் (காத்தல்) அகோரம் (அழித்தல்) வாமம் (விளக்கல்) சத்தியோசாந்தம் (தோற்றுவித்தல்) என்பன. இவற்றுள் சத்தியோசாந்தம் பிரமமுகமாகவும், தற்புருடம் விஷ்ணுமுகமாகவும், அகோரம் உருத்திரமுகமாகவும் கொள்க; எஞ்சிய இரண்டுள் ஈசானம் என்பது, யாவற்றையும் முறை பிறழாது ஆளும் சக்தியும், தவறினேர்க்

கும் வழிகாட்டும் அருள்நிலை (அநுக்கிரகம்) யும் காட்டிற்று: இது சதாசிவத்தோற்றம் என்க; வாமம் என்பது உயர்ந்த பொருளை முனிவர் வாயிலாக விளங்கவைத்தல் (திரோபவம்) இதனையே தக்ஷிணாமூர்த்தி யம்சமாகக் கொள்க; ஈசன் எனக் குறிப்பிட்டார். இம் மூர்த்தங்கள் ஐந்தும் பஞ்சபூதங்கட்கும் அதிபதியாவர்: மாயன் - நீர், பிரமன் - மண், உருத்திரன் - தீ, ஈசன் - காற்று, சிவம் - விண்.

ஆயும் சிவன் என்றது, உலகத்தில் பயன் தரத்தக்கவை இவை எனச் சிந்தனைசெய்து உரைசெய்யாநின்ற மூர்த்தி என்றபடி. ஈண்டு அழித்தற் றொழிலின் மாறுபட்ட செயல் உடையார் என்று குறிப்பிட்டுச் 'சிவன்' என்றார் என்றறிக. சிவன் என்பது மங்களத்தையுடையவன், அல்லது அளிப்பவன் என்ற பொருள் உண்மையால்.

## 7. மாலய னங்கி யிரவி மதியுமையோ டாலுஞ் சிவசத்தி யாறு.

(இ - ள்.) மால் - விஷ்ணுவும், அயன்-பிரமனும், அங்கி - அக்கினிதேவனும், இரவி - சூரியனும், மதி - சந்திரனும், உமையோடு - பார்வதிதேவியுடன் சேர்ந்து, ஆலும் - பொருந்திய, சிவசத்தி ஆறு - சிவசத்திகள் ஆறு ஆகும் எ - று.

இது சத்தி ஆறு ஆவனவற்றை விளக்கியது. மேற் குறளிற் கூறிய தொழில்களை யியக்கும் சத்திகள் ஐந்தொடும் கிரியாசத்தியாகிய உமையின் சத்தியும் கூட்டி

ஆறு என்றூர். இவற்றுள் - மால், அயன், நீங்க ஏனைச் சிவ தோற்றங்களாகிய உருத்திரன், ஈசன், சிவம் என்னும் மூர்த் தங்களுக்கு அக்கினியும், இரவியும், மதியும் கொள்க. இச் சத்திகள் ஐந்தும் தானே இயங்குவனபோலத் தோற்றினும், அவற்றை யியக்குவன கிரியாசத்தியாகிய உமையின் வல்லமை யாதலின் முடிவிற் குறிப்பிட்டார்.

இனி, மால் ஞானசாதனத்துக்கும், அயன் அறிவுக் கும், அங்கி மனதில் குடிகொண்ட இருளை யொழித்தற்கும், இரவி தெய்வநிலைக்கு வழிகாட்டியாகவும், மதி அத்தெய்வ நிலையை அடையும்படி உடலைப்பயிற்றும் சக்தியாகவும் உரு வகப்படுத்தி யிருப்பதும் உய்த்துணர்க.

இனி, ஆறுதாரங்களையும் குறிப்பிட்டு அவற்றின் சக்தி களைக் கூறியதாகக் கொள்வாரும் உளர். ஆறுதாரங்களின் விளக்கம் மேற்கூறுவாம். அப்பொருள் கொள்வதா யிருந் தால், உமை என்பதை ருத்திர கிரந்தியாகக் கொண்டு பொருள் கூறுக. அது, குண்டலி என்பது.

'ஏனும் திகழ் சத்தி' என்றும் பாடம்; பொருள் வேறு பாடு இல்லை.

## 8. உதிரந்தோன் மூளை நிணமென்பு சுக்கிலமும் விதிரச் சுவைதாது வேழு.

(இ - ள்.) உதிரம் தோல் மூளை - இரத்தமும், தோலும், மூளையும், நிணம் - இறைச்சியும், என்பு - எலும்பும், சுக்கி

லம் - வீரியப்பெருக்கும், விதிரச்சுவை - சிறந்த இரதமும் என்று, தாது ஏழு - தாதுக்கள் எழுவகைப்படும் எ - று

இஃது உடம்பின் அமைப்பிலுள்ள எழுவகைப் பொருள் களும் கூறியது. சரீரத்துள் அடங்கியவை இவை ஆதலின் சரீரம் என்பது தனியாகக் கூறவேண்டியதில்லை. இஃதறி யாது சுவை என்பதற்குச் சரீரம் என்பதைக்கூட்டி 'ஏழு' எனப் பொருள் கூறுவர்; இவ்வுரைக்கு ஏற்பத் "தொக்குதி ரத் தோடூன் மூளை நிணமென்பு-சுக்கிலந் தாதுக்க ளேழு" என்று பாடங்கொள்வர். அன்றியும் நிணம் என்பதில் சரீர மும் அடங்கியது அறிக.

சுவை என்பதற்கு, பஞ்சக்கரணங்களாலும் உய்த்தறி யும் பண்பு எனப் பொருள் கொள்க. இதனையே நவரஸம் என ஒன்பது வகைப்படுத்துவர். இரதம் - ரஸம், விதிர்ப்பு - சிறப்பு.

**9. மண்ணொடுநீ ரங்கி மதியொடு காற்றிரவி**
**விண்ணுஞ் சதாசிவத்தோ டெட்டு.**

(இ - ள்.) மண்ணொடு - பூமியும், நீர் அங்கி - நீரும் தீயும், மதியொடு - சந்திரனும், காற்று இரவி - காற்றும் சூரி யனும், விண்ணும் - ஆகாயமும் ஆனவற்றோடு, சதாசிவத் தோடு இயமானனும் சேர்ந்து, எட்டு - சிவன் எண் கணம் ஆம் எ-று.

இஃது எண்கணம் இன்னவை என்பது உணர்த்திற்று. அவ்வயாவன, ஐம்பெரும் பூதமும், சூரிய சந்திரரும், இவற்றுக்குத் தலைமை வாய்ந்த இயமானனும் ஆம். இயமானனுக்கு மாறாக வேள்வித்தலைவரைக் கொள்வாரும் உளர். பஞ்சபூதங்களும், அவற்றோடு இயைபுடைய சூரிய சந்திரரையும் கூட்டி, இவை ஏழையும் இயக்கும் நிலையின் இராநின்ற இயமானனை யுஞ் சேர்த்து எண்கணம் என்று கூறினார். 'மதியெழிற் காற்று' என்றும் பாடம்.

**10. இவை யெல்லாங் கூடி யுடம்பாவ தன்றி**
**யமையவித் தாகுமாம் விந்து.**

(இ - ள்.) இவையெல்லாம் கூடி - மேற் கூறியன எல்லாம் ஒன்றுசேர்ந்து, உடம்பாவது அன்றி - சரீரமாக அமைவதே அல்லாமல், விந்து - சுக்கில சுரோணிதக் கலப்பே, அமைய வித்தாகும் - அச்சரீரத்துக்குப் பொருந்திய விதையாக அமையும் எ - று.

இது தேகம் அமைவதற்குக் கூறிய கருவிகளை உணர்த்தியது. இவை என்றது மேல் உரைத்த பூதங்கள் ஐந்து, கரணங்கள் ஐந்து, சிவமூர்த்தி ஐந்து, சத்தி ஆறு, தாதுக்கள் ஏழு, கணங்கள் எட்டு.

இவை எல்லாம் உடல் உண்டாவதற்குத் துணைக்காரணமாய் அமைந்தன; சரீரத்துக்கு வித்தாக அமைந்தது விந்து ஆவது சுக்கில சுரோணிதம். சுக்கிலமும், சுரோணிதமும்

கலக்கும் ஒவ்வோர் சமயமும் பிண்டம் உண்டாவது இல்லை; ஆகவே அவ்விதம் சரீர உற்பத்திக்கு உபகாரணமாகத் தோற்றம், காலம் முதலியனவும் பொருந்துவது அவசியம் என்பது விளங்கும். விந்து, முதற்காரணமாதலினாலும், ஏனையவையும் துணைக்காரணமாக உதவுதல் வேண்டும் என்பது குறிப்பிடவே இவையெல்லாம் கூடி உடம்பாவது என்றும், அதற்கும் விந்து வித்தாகும் என்றும் கூறினார். விந்து, சுக்கில சுரோணிதமும், அவற்றின் கூட்டுறவையும் குறித்தது. "உடம்பாய வொன்றி - னவையெல்லாமானது விந்து" என்ற பாடமும் காணப்பெறுகிறது.

---

# இரண்டாம் அதிகாரம்

## உடம்பின் பயன்

மேல் அதிகாரத்தில் உடம்பின் கூறு இத்தன்மையது என்று உரைத்தவர், இனி அவ் வுடம்பிளுற் பெறக்கூடிய பயனைக் கூறுகின்றார். ஊழ்வினையின் பயனுலும் பிற காரணத்தாலும் பிறவி எடுத்த பின்னர், ஒவ்வொரு ஜெனனியும், அப்பிறப்பை மாற்றும் வழியை ஆராய்வது அவசியம் ஆகும். பிறப்பை மாற்றவும், பாவங்களை நசிக்கவும் செய்வது சரீரத்தைக்கொண்டே யல்லாமல் தேகத்தை யொடுக்கி யியலாது. ஆதலால் தேகாரோக்கியமும் திடகாத்திரமும் கொண்டு, சாதனைகள் செய்து குண்டலியோகத்தை யடையவேண்டும் என்கின்றார். அச் சாதனைக்குத் திட சரீரம் அவசியம் ஆதலின் இவ்வதிகாரம் உடம்பின் பயனை உணர்த்தியது.

**11.** **உடம்பினுற் பெற்ற பயனுவ தெல்லா**
**முடம்பினி லுத்தமனைக் காண்.**

(இ - ள்.) உடம்பினுல் பெற்ற - தேகத்தை அடைந்ததனுல்உண்டாகிய, பயன் ஆவது எல்லாம் - பிரயோசனம் முழுவதும், உடம்பினில் - தேகத்தினுள்ளேயே, உத்தமனை - பராசத்தியாகிய சதாசிவத்தைக், காண் - காண்பதாகும் எ-று.

இஃது, அத்தியாயத்தின் அர்த்தத்துக்குப் பொருந்த, தேகத்திளுல் நாம் அடையக்கூடிய பயன் கூறுகின்றது. முன்

'தருமம் பொருள் இன்பம் வீடு' என்பனவற்றை அடைவதே உருவத்தின் பயன் (குறள்-4) எனக் கூறினார்; அதன் கருத்தை விளக்கமாக இக்குறளிற் கூறுகின்றார். அந்நான்கு புருடார்த்தத்தையும் அடைவது அறிவின் பெருக்கத்தால் ஆகையால், அவ்வறிவையும் அவ்வறிவின் எல்லையில் உள்ள ஈசுரனையும் அறிந்துகொள்க என்றபடி. தாந்திரீக சாஸ்திரத்தில் ஆறுதாரங்களுக்கும் எஞ்சிய உயர்நிலையில் நிற்கும் குண்டலிசத்தியையே ஈண்டு உத்தமன் என உரைத்தார் என்பது உணர்க. 'காண்டல்' என்னும் தொழிற்பெயர் கடைகுறைந்து காண் என நின்றது.

## 12. உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாந் திடம்பட வீசனைத் தேடு.

(இ - ள்.) உடம்பினைப் பெற்ற - சரீரத்தை அடைந்ததன், பயன் ஆவதெல்லாம் - பிரயோசனம் ஆகின்றது முற்றிலும், ஈசனை - சதாசிவனை, திடம்படத் தேடு - நிச்சயத்துடன் ஆராய்ந்து அறிதலாம் எ - று.

இதுவும், குண்டலி சத்தி என்பது கண்டபிறகு அதன்கண் வீற்றிருக்கும் சதாசிவ சொரூபத்தைக் கண்டறிக என்றபடி. ஆறுதாரங்களையும் கடத்தல் அருமை என்பதைக் குறிக்க முற்குறளில் 'காண்' என்றும், அவ்விதம் கண்ட பிறகும் அதன்கண் உறையும் சதாசிவனை அறிந்து கொள்ளுதல் அரியது ஆதலின் அவனைத் தேடவேண்டும் என்று பொருள்படத் 'தேடு' என்றும் கூறினார். மனவாக்குக் காயம்

பொருந்த உணர்வு குன்றமல் தேடினலன்றி அடைவது முடியாதாகலின் திடம்படத் தேடவேண்டும் என்றர்.

முற்குறளில் 'காண்' என்பதுபோல் தேடு என்பதும் ஈறுகெட்ட தொழிற்பெயர்—தேடுதல் பயன் என்றபடி.

சில பிரதிகளில், இக்குறளுக்கு வேருக,

'உணர்வால தெல்லாம் உடம்பின் பயனே
யுணர்க வுணர்வுடை யார்'

என்னும் குறள் காணப்பெறுகிறது.

13. உறுபய னவ துடம்பின் பயனே
தருபதஞ் சங்கரனைச் சார்.

(இ - ள்.) உறுபயன் ஆவது - ஒவ்வொரு ஜெனனியின் முற்செய்த வினையிற் பொருந்தும் பயனக அடைந்த (இப்பிறப்பில்), உடம்பின்பயனே - தேகத்தினல் பெறத்தக்க பயன்றன், தருபதம் - நல்ல பதவியைத் தரத்தக்க, சங்கரனைச் சார் - சங்கரனைச் சார்தலாகும் எ - று.

இதுவும் அது. அவ்விதம் ஆறுதாரத்தின் எல்லையில் உள்ள சதாசிவமூர்த்தியை, ஆயிரவிதழ் மலரிற் கண்ட மாத்திரையில் பிறப்பின் மூலம் தானே அழிந்துபோகச் சாயுச்சியபதவியை அடையலாகும் என்பது கருத்து.

மேல் உரைத்தபடி, பஞ்சபூத முதலியவற்றின் கூட்டுறவாலும், முற்பிறப்பின் பாவபுண்ணியங்களின் சம்பந்தத்தா

னும் உண்டாகிய உடல் எனவே, 'உறுபயனுவது உடம்பு' என விளக்கியுரைத்தார். சங்கரன் என்றதால், அழிக்கும் இயல்பினையுடைய மூர்த்தியைக் குறிப்பிட்டார். ஈசுரனது காட்சியால் அழியத்தக்கது ஒவ்வொருவருடைய பாவம் என்னும் சஞ்சிதப் பொதி; அஃது அழிய, அதன் பயனுகிய பிறப்பும் அழியும் என்பது பெறப்படும். எல்லாச் செல்வங் களையும் தரத்தக்கவன் ஆதலின் 'தருபதஞ் சங்கரன்' என்ருர். அவர் கொடுத்தலினும் பாவங்களை அழித்தலால் ஜெனனிக்கு விசேடம் அதிகம் என்பதும் அறியக் கிடந்தது.

'சார்' என்பதும் 'காண்' என்பதுபோல; சார்தல் என்னும் பொருளில் வந்தது. 'ஒருபயன்' என்றும், 'சங்கரனைக் காண்' என்றும் பாடபேதங்கள் காணப்படுகின்றன.

**4. பிறப்பினுற் பெற்ற பயனுவ தெல்லாந்
துறப்பதாந் தூநெறிக்கட் சென்று.**

(இ - ள்.) பிறப்பினுல் பெற்ற பயன் ஆவது எல்லாம் - உடம்பை யடைந்ததன் பிரயோசனம் முழுவதும், தூநெறிக் கண் சென்று - உத்தமமார்க்கத்தில் ஒழுகி, துறப்பதாம் - தீய ஒழுக்கங்களை நீக்குவதாம் எ - று.

இதுவும் அது. பிறவியை அடைந்த ஓர் ஆன்மா, தன் செய்கையாலோ, ஊழ்வினையின் பயனுகவோ, பாவவழியிற் சென்று மீண்டும் மீண்டும் ஊழ்வினையைப் பெருக்குவதா லும், அதனுற் பிறவி அடுத்து அடுத்து உண்டாவதாலும்,

அப்பாவச் செய்கையை ஒழிக. ஊழ்வினையின் பயனாகச் சித்திப்பது பாவச் செயல் எனின் அதை விலக்குவது எங்ஙனம் எனின், ஊழ்வினை யென்பதே முற்பிறவியிற் செய்த பாவ புண்ணியத்தின் பலன்; அதன் வழியாகத் தீய எண்ணம் எழும்போது சுய அறிவாலும் ஆன்றோர் உயர்மொழிகளைச் சிந்தித்ததால் உண்டாகும் நல்லுணர்வாலும், அத்தகைய செய்கைகளை ஒழித்தல்; பாவச்செயலை ஒழித்தல் மாத்திரம் போதாது, பெரியோர் விதித்துள்ள நல்லொழுக்க முறைகளைக் கடைப்பிடித்தலும் அவசியம் என்பதற்கே 'தூநெறிக் கண்' என்றும் உரைத்தார். நல்லொழுக்க முறைகளையே, ஒவ்வொருவரும் வாழ்க்கையில் பயிலவேண்டும் என விதித்துள்ள நால்வகை வாழ்க்கை:

(1) **அந்தண வாழ்க்கை அல்லது பிரமசரியம்:**—பதினாறு ஆண்டுகள்வரையில் தகுந்த ஆசானிடத்து அணுகி கற்பனவற்றைக் கசடற உணர்ந்து அவற்றுக்கு ஏற்ப ஒழுகுதலும் ஆசை, காமம், பற்று முதலியவை உண்டாகாதபடி நடத்தலும்.

(2) **இல்லற வாழ்க்கை என்னும் கிரகஸ்தம்:**—கல்வி முற்றிய பின்னர், குலம், நலம், பண்பு முதலியன ஒத்த ஒரு கன்னிகையை எண்வகை மணத்துள் ஒருவகையால் வரித்து, நற்பொருள் ஈட்டி, மனை, மாட்சி, மங்கலத்துடன், விருந்து, ஒக்கல் (உறவினர்) முதலியவரை ஓம்பி அறநெறிக்கண் ஒழுகுதல்.

(3) **கானக வாழ்க்கை என்னும் வானப்பிரஸ்தம்:**—மனைவி மக்களுடன் வனத்தை அடைந்து இல்லறத்தை வெருவாது

துறவு நிலையை அவாவித் தகுந்த மாணவர்கட்கு ஓதி ஞான விசாரணையில் அறநெறி தவறாது ஒழுகுதல்.

(4) **துறவு அல்லது சன்னியாசம்:**—மேலுரைத்த மூன்றை யும் வெறுத்து, மனைவியுடனும், அல்லது மனைவி யின்றியும் ஞானநிலையில் நிற்பது. இல்லறத்தானும் இந்நிலையை அடை யக்கூடும் ஆதலால், அவன் **இல்லறத்துறவி** எனப்படுவான்.

இந்நான்கு வழியினும் ஒழுகுவதால், எந்த முறையி லும் ஈஸ்வரவுணர்ச்சியே அடிப்படையாக இருப்பதால், துறவு நிலையை அடையவேண்டியவர் இதன் மூன்று நிலைகளை நீக்க வேண்டிய நியதியில்லை. இல்லறத்தான் பிரமசாரியாக இருத் தல் கூடும். இதனைக் காந்தியடிகள் அடிக்கடி வற்புறுத்தி யிருக்கின்றார். கானகவாழ்வு, இல்லறத்தின் வேறுபாடு ஆத லின் இரண்டும் ஒருவர் ஏககாலத்திற் பயில முடியும். அது போன்றே, உள்ளத்திற் றுறந்த உத்தமன் இல்லறவொழுக் கத்தின் மாறுபடாதும் இருத்தல் முடியும் என்பது விளங்கும்.

தூநெறிக்கண் சென்று எனக் கூறியதால் இந்நான்கு வழியிலும் ஒருவன் புகுந்து ஒழுகி வருதல் அவசியம் என்ப தும், அவ்விதம் கடைசியிற் றுறத்தல் இந்நால்வகை யொழுக் கத்திற்கும் புறமாகிய தீயவொழுக்கத்தை என்பதும் அறிக. ‘தூய நெறி சென்று’ என்றும் பாடம்.

**15. உணர்வாவ தெல்லா முடம்பின் பயனே
யுணர்வினு லுத்தமனைக் காண்.**

(இ - ள்.) உணர்வு ஆவது எல்லாம் - உணர்வு என்று சொல்லப்படுவது முழுவதும், உடம்பின் பயனே - உடல்

எடுத்ததினால் அடையும் பிரயோசனமாம், உணர்வினால்-அவ் விதம் பெறும் உணர்வைக்கொண்டு, உத்தமனைக்காண் - உத்தமனாகிய ஈசனைக் காண்க எ - று.

தூய நெறிக்கண் சென்று பழிபாவங்களை விலக்கினவன் உணர்வு என்பதை அடைகின்றான் என்றும், உணர்வு உண்டாகில் தெய்வக்காட்சி புலனாம் என்றும் கூறுகின்றார். உடலாற் பெறும்பயன் ஈசனைக் காண்பது என்றால், அவ்வீசனைக் காண்பதற்குச் சாதனம் உணர்வு உடைமை என்றபடி. வினையின் பயனாலும் பஞ்சமாபூதத் திரையினாலும் உண்டாகிய சரீரம் அழியத்தக்கது என்றும், ஆனால் அது செய்யும் செய்கைகள் ஊழ்வினையாக மாறி மறுபிறப்புக்கும் வழி செய்கிறதென்றும், இவ்வுடலில் குடியிருப்பதுபோல் வசிக்கும் ஆன்மா, அறிவு, மனம் முதலியன அதனினும் வேறு என்பதும், உடல் அழிந்தாலும் அவை அழியாமல் வேறு பிறப்பினை அடைகின்றன என்றும் அறிந்துகொள்ளும் உணர்ச்சியே உணர்வு எனப்பட்டது. இதைச் சுருக்கமாக 'நான்' என்பதன் விளக்கம் என்றார்: நான் என்பது சரீரமன்று, கடவுட்டன்மைவாய்ந்த அந்தரான்மா, என அறிவது உணர்வு ஆகலின். அன்றியும் சரீரம் அழிவது, ஏனைய அழியாதன என்பதும் பெறப்படும். இதனையே 'தன்னைத்தானறிதல்' என்பர் பெரியோர்.

உடலும், அதன்வழியாக உணர்வும், அவ்வுணர்வின் வாயிலாக ஈசனை அறிதல் முறையாதலின் அவ் இரண்டையும்

கூறினர். உணர்வு இல்லாதவிடத்து ஈசனை அறிய முடியாது என்க. இக்கருத்தினையே பெரியோர்,

"வாடினேன்; வாடி வருந்தினேன் மனத்தால்;
பெருந்துய ரிடும்பையிற் பிறந்து
கூடினேன்; கூடி இளையவர்தம்மோ டவர்தரும
கலவியே கருதி
ஓடினேன்; ஓடி யுய்வதோர் பொருளாம் உணர்வெனும்
பெரும்பதம் தெரிந்து
நாடினேன்; நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா வென்னு நாமம்"

என்றும்,

"மனம் எனுந் தோணி பற்றி மதியெனுங் கோலை யூன்றிச்
சினம் எனும் சரக்கை ஏற்றிச் செறிகட லோடும் போது
மதன் எனும் பாறை தாக்கி மறியும்போ தறியவொண்ணாத்
துணையெனும் உணர்வை நல்கா யொற்றியூ ருடையகோவே"

என்றும் கூறினர்.

**16.** **உடம்பினு லன்றி யுணர்வுக ளில்லை
யுடம்பினி லுன்னியதே யாம்.**

(இ - ள்.) உடம்பினுலன்றி - தேகத்தினும் வேருக, உணர்வுகள் இல்லை - உணர்ச்சிகள் வேறெதுவும் கிடையாது, உடம்பினில் உன்னியதே ஆம் - அவை தாமும், தேகத்திற் பொருந்தியிருப்ப, அறிவால் நினைந்து அறியத்தக்கதாகும். எ - று.

உணர்வு எனும் பெரும்பொருள் சூக்குமம் ஆனது: ஆனால் தூலம் என்னும் சடப்பொருளாகிய சரீரத்தில் இந்திரியங்களால் அறியக்கிடந்த உணர்வுகள் வேறு. இவ்வுணர்வுகளால் ஈசுரஞானம் அடைதல் சுலபமன்று, சரீரத்தோடு இயைந்த இவை அதற்கு வயப்பட்டாலொழிய பேருணர்வு பிறப்பதில்லை என்பது வற்புறுத்துகின்றார்.

உணர்வுகள் எனப் பன்மையாற் கூறியதால், பஞ்சேந்திரிய சேட்டையால் அறிகின்ற ஐம்புல உணர்வுகளைக் குறித்தது. இவை தேகத்தோடு இயைபுடையன, அதனினும் வேறு பட்டதன்று, எனவே 'உடம்பினலன்றி யில்லை' என்றார் ஐம்புலன்களும் சரீரம் என்னும் சட்டம் இல்லாமல், காணல், உருசித்தல், கேட்டல் முதலிய அறிவு புலப்படா அன்றோ? உன்னுதல் - நினைத்தல், புலன் அறிவுகள் தேகத்தின் உறுப்புக்களால் வெளிப்படுவன அன்றித் தனித்துக் காட்டுதலும் முடியாதாகையால் உடம்பில் உன்னியது என்றார்.

'உணர்வுதான் இல்லை' என்றும் பாடம்.

**17. மாசற்ற கொள்கை மனத்தி லடக்கின**
**னீசனைக் காட்டு முடம்பு.**

(இ - ள்.) மாசு அற்ற கொள்கை - குற்றமற்ற ஈசுர தியானமென்னும் உறுதியை, மனத்தில் அடக்கினல், மனத்திற் பொருத்தினல், ஈசனை உடம்பு காட்டும் - சதாசிவனாகிய குண்டலிசத்தி யிருக்கும் நிலையை இத் தூல சரீரமே காட்டும். எ - று.

இதுவும் ஈசுர நிலையறியும் வழிகூறியது. கொள்கை - உறுதி, ஆவது ஈசுரன் உண்மையும் ஈஸ்வரன் நமது சரீரத்திலேயே குண்டலிசத்தியாக அமைந்திருத்தலும், அதனை அறிவதற்குச் செய்யும் கிரியைகளாகிய தியான மும், அக்கொள்கை மனதிற் பொருந்த, சடப்பொருளாகிய உடம்பே சூக்கும நிலைபெற்றுச் சர்வேசுரனைக் காட்டித் தரும் என்றபடி, உடம்பு அழியத்தக்கதே என்றாலும், 'கொள்கை'யின் பெருமையாலும் குண்டலிசத்தியின் பெரு மையாலும் சூக்குமப்பொருளையும் கூட்டிவிடும் என்றார்.

இத்தகைய சித்திபெறுதற்கு மும்மலமும் நீங்கிய நிலை யில் 'கொள்கை' அவசியம் என்று காட்டுவதற்கு மாசற்ற கொள்கை என உரைத்தார். மும்மலமாவது, ஆணவம், மாயை, காமியம் என்பன; அவற்றை நீக்குவது நல்லொழுக் கத்தால் மாத்திரமல்லாது, பிராணாயாம முதலிய சாதனங்க ளால் என்பது. ஈசன் என்றது ஈண்டுக் குண்டலி சத்தியை உணர்த்திற்று. 'அடைந்தக்கால்' என்றும் பாடம்.

**18.** ஓசை யுணர்வுக ளெல்லாந் தருவிக்கு
நேசத்தா லாய வுடம்பு.

(இ - ள்.) நேசத்தால் ஆய உடம்பு - பந்தபாசத்தின் பயனாகத் தோன்றிய சரீரம், ஓசை உணர்வுகள் எல்லாம் - ஓசை முதலிய பஞ்சப்புலன்கள் யாவற்றையும், தருவிக்கும் - அடையச்செய்யும் எ - று.

உணர்வுகள் என்பது மேல் 'உணர்வுகளில்லை' (குறள்-16) என்றதுபோற் பஞ்சேந்திரிய உணர்ச்சிகள் எனப் பொருள்

கொள்க. அவற்றுள், மந்திரம் உச்சரித்தற்கும் கேட்டற்கு எளிமையும் ஆதலின் சிறப்பாக ஓசையைக் குறிப்பிட்டார். இனி ஓசை யென்பதற்கு ஒளி என்றும் பொருள் உண்டு.

இப் பஞ்சேந்திரியங்களை அடக்கினால், அவற்றோடு இயை புடைய எண்வகைச் சித்திகளையும் அடையச் செய்யும் என்றார். இவற்றை யடைந்தவர்களே சித்தர்கள் எனப்படுவர் சித்திகள் எட்டு ஆவன :—

(1) அணிமா-அணுவைப்போற் சிறுக்கும் ஆற்றல்.
(2) மகிமா-இஷ்டம்போல் உருவத்தை பருக்கச்செய்தல்.
(3) கரிமா - தன்னுடல் இலேசாயினும் விரும்பியபோது கனமுண்டாம்படிச் செய்துகொள்ளும் ஆற்றல்.
(4) இலகுமா-சுலபமாய் முடிக்கும் ஆற்றல்.
(5) பிராத்தி-விரும்பியவற்றை அடையும் திறன்.
(6) பிராகாமியம்-விரும்பியவற்றைச் செய்யவல்லஆற்றல்.
(7) ஈசத்துவம்-ஆட்சியுடைமை.
(8) வசித்துவம் - எல்லாம் தன்வயமாக்கும் வல்லமை யுடைமை.

ஐம்புலன்களை அடக்குவதாற் பெறத்தகும் எண்வகைச் சித்திகளையும் அடையச்செய்வதாகலின், உணர்வுகள் எல்லாம் தருவிக்கும் என்றார். தருவிக்கும் என்றதால் உடலோடு இயைந்த பஞ்சபூதங்களின் செயல்மட்டில் கூறினதாகக் கொள்ளப்படாது; அப்பூதங்களின் செய்கையாற் பெறப்படு வனவும், அவற்றை மீறியனவும் ஆகிய அஷ்டமாசித்திகளை

யும் குறிப்பிட்டாரென்க. நேசம் - பற்று; அஃதாவது ஆசா
பாசங்கள். இதனைப் "பிறந்தோ ருறுவது பெருகிய துன்
பம்... ...பற்றின்வருவது"—(மணிமேகலை) என்ற மொழி
யால் அறிக. ஆதலால் ஆடவர் மகளிர் பிரியத்தினால் (நேசத்
தால்) ஏற்படும் இயக்கத்தின் பயனாகத்தோன்றிய உடம்பு
என்று உரைக்கும் உரை சிறப்பின்மை காண்க.

**19. உயிர்க்குறுதி யெல்லா முடம்பின் பயனே
யயிர்ப்பின்றி யாதியை நாடு.**

(இ - ள்.) உயிர்க்கு உறுதி எல்லாம் - ஜீவான்மாவுக்கு
நிலைபெற்ற பலனாக இருப்பவை யாவும், உடம்பின்பயனே -
உடம்பினுள் அடங்கிய தத்துவமே, அயிர்ப்பின்றி - ஆதலால்
சந்தேகத்தை நீக்கி, ஆதியைநாடு - ஆதியாக உள்ள குண்
டலியின் நிலையையும், அதன் மூலபுருஷனாகிய சதாசிவத்தை
யும் சிந்தனைசெய்து தேடுக எ - று.

இதுவும் மேல் உணர்த்திய உணர்வுகளாற் பெறத்தக்க
பலனையே கூறுகின்றது. உடம்பு என்று இலேசின் உரைத்த
தால் யோக நிலைக்கு உதவும் ஆறுதாரங்களையும், அவற்றுக்
குக் காரணமும் பீடமும் ஆகிய குண்டலியைக் குறிப்பிட்ட
தாகக் கொள்க. எனவே, ஆதி என்றது குண்டலியின் மூல
மும் இயமானனும் ஆகிய சதாசிவத்தைக் குறித்ததாகக்
கொள்ளப்பட்டது. அயிர்ப்பு - உலகில் வியாபித்துள்ள மாயப்
பொருள்களில் ஈடுபட்டு மயங்கிச் சந்தேகம்கொண்டு மயங்கும்
நிலை. இனி இச்செய்யுட்கு, 'உயிர்க்கு உறுதியாக இருப்பது

ஈசனை ஆதலால், அவ் ஆதியை அறிக' என்றும் உரை கூறலாம்.

## 20. அன்னத்தா லாய வுடம்பின் பயனெல்லா முன்னோனைக் காட்டி விடும்.

(இ - ள்.) அன்னத்தால் - அன்னகோசத்தினால், ஆய - அமைந்த, உடம்பின் பயனெல்லாம் - தேகத்தினாற் பெறும் பயன் முழுவதும், முன்னோனை - சர்வேசுரனை, காட்டிவிடும் - தன்னுள்ளே விளக்கிக்காட்டும் எ - று.

இதுவும் அது. இதன் உட்கருத்தை 'உணர்வாய' என்ற குறள் (15) உரையிற் காண்க.

சரீரம் தோன்றுவதற்குப் பல உபகரணங்கள் இருந்தாலும் அச்சரீரம் நீடித்திருப்பதற்கு அன்னமே காரணம் ஆதலின் அன்னத்தாலாய உடம்பு என்றார். அச்சரீரந்தான் அவ் அன்னத்தினால் ஆகியிருப்பினும் தன்னுள்ளிடத்தில் ஆறு ஆதாரங்களையும் அடக்கியிருப்பதால், அவ் ஆதாரங்களைக் கடந்து ஈசுரனை அடைய இயலும் என்ற இலக்கணம்பற்றி முன்னோனைக் காட்டிவிடும். முன்னோன் மேற்கூறிய குண்டலியின் இயமானன் சர்வேசுரன், சதாசிவன் எனப்படும் பரம்பொருள் காட்டிவிடும் என்பது, தகுந்த சாதனையைக் காலமுறையிற் பயின்றுவர ஈசுரனைச் சரீரத்தினுள்ளேயே கண்டுவிடலாம் என்ற நிச்சயத்தைக் கூறியது. இதுபோல் நாயனாரும் தமது திருக்குறளில் "தவ்வையைக் காட்டிவிடும்" என்ற நிச்சயத்தை வற்புறுத்தினார். எனவே "காட்டும் உடம்பு" என்ற பாடபேதம் பயனின்று.

# மூன்றாம் அதிகாரம்

## உள்ளுடம்பின் நிலைமை

மேல் அத்தியாயத்திற் றூல வுடம்பினைக் கூறியவர், இதில் அந்தக்கரணமாய் நிற்கும் சூக்கும வுடம்பின் நிலைமையைக் கூறுகின்றார். சூக்கும வுடம்பாவது உடலோடு உயிர் சேர்ந்து உள்ளவரையில் அவ்வுடலுடன் இருந்து, உயிர் பிரியும்பொழுது உடன்பிரியும் இயல்பினதாய், பாவபுண்ணியங்களாகிய செயலுக்கு ஏதுவான பஞ்சகரணங்களையும் தன்னுள் அடக்கியது.

இவ்வத்தியாயத்துக்கு 'உடம்பின் நிலையாமை' எனப் பாடபேதம் சிலபிரதிகளிற் காணப்பெறும்.

**21. கற்கலாங் கேட்கலாங் கண்ணாரக் காணலா**
**முற்றுடம்பா லாய பயன்.**

(இ - ள்.) முற்றுடம்பால் - முழுமையான சூக்கும தேகத்தினால், ஆயபயன் - அடையக்கூடிய பயனாவது, கற்கலாம் - ஆன்றோர் மொழி முழுவதும் ஒருவரிடம் மாணவமுகமாகக் கற்காமலே கல்வியறிவைப்பெறலாம், கேட்கலாம் - தூரத்தில் கூறும் செய்திகளை அப்பொழுதே, வேறுதொலைவில் இருந்து கேட்டு உணரலாம், கண் ஆரக் காணலாம் - வெகுதொலைவில் நிகழ்பவற்றை இருந்த இடத்திலிருந்து கண்பொருந்தப் பார்த்து அறியலாம் எ - று.

## உள்ளுடம்பின் நிலைமை

இது, பூதவுடம்பு சூக்குமநிலையில் அடங்கியபொழுது செய்யக்கூடிய ஆற்றலை புணர்த்தியது. சூக்கும அறிவின் விருத்தியால், தபசியர், ஞானியர் முதலியவர்கள் உலகத்தினர் நன்மையைக் கருதிக் கூறிவைத்த உண்மைப்பொருள்களை 'ஆசிரியரின் மூலமாக இல்லாமலே' தானே உய்த்துணர்தலும், ஓரிடத்திருந்தபடியே சேய்மையில் நிகழ்பவற்றைக் காணவும் கேட்கவும் செய்தலும் செய்யமுடியும் என்றார்.

ஆதிசங்கராசாரியர் முதலிய பெரியார் தம் கட்டிளம் பிராயத்திலேயே சகல சாஸ்திரங்களிலும் விற்பன்னராயினர் என்றால் ஆசிரியர் முகததால் மட்டில் அறிந்தனர் என்று கருதமுடியாது எனவே இவர் கருவிலே திருவுடையார் எனப் படுவர். இவர்கள் தமது ஆன்மசக்தியால் கற்றது கைம் மண்ணளவாயிருந்தாலும் கல்லாதவற்றை அறிவால் உலக அளவுக்கு அறிந்துகொள்கின்றனர். இது சூக்கும வுடம்பினால் ஆகும் ஆற்றல்.

இனி, மனிதனது அறிவின் ஆற்றலால், காலம் இடம் பொருள் என்ற இவற்றின் வரையறைகளைப் பூதபௌதிக சாஸ்திரப் பெருக்காற் கடந்துவருவது நாள்தோறும் காண்கின்றோம். இதனையே மேனாட்டுப் புலவர்களும் வேதாந்திகளும் மூந்நிலையுங் கடத்தல் (Crossing the three dimensions) என்கின்றனர். ஓரிடத்தில் ஒருசமயத்தில் நிகழ்பவற்றை நிழற்படங்களாலும் (Cinema pictures) காவழி யோசைக் கருவிகளாலும் (Radio) வேறோரிடத்தி

லுள்ளோர் பார்க்கவும் கேட்கவும் இந்நாளில் நாள்தோறும் காணும் நிகழ்ச்சியாய்விட்டன. இதுபோற் சிலகாலத்துக்கு முன் நிகழ்ந்தவற்றைப் படம்பிடித்து, பிற்காலத்திற் காண வும் கேட்கவும் செய்யும் மொழி யியங்கு நிழற் படங்கள் (Talking pictures) நித்தியகாட்சிகளாகிவிட்டன. இன்னும் ஓரிடத்தில் நிகழ்பவற்றை வேறோரிடத்திலிருந்து அதே சம யத்திற் காணவுங் கேட்கவும் செய்யவல்ல பொறிகளாகிய 'தூரதிருஷ்டி யாடி' (Telievsion) மேலைநாடுகளில் இருப்ப தாகக் கேள்வி யுறுகின்றோம். அன்றியும் வான் இயங்கு வாகனங்களின் (aeroplanes) உதவியால் தூரம் என்னும் அளவினை வென்று விட்டதாகச் சொல்லலாம்; இவ்வாகனங்க ளால் நினைக்கவொண்ணு வேகத்திற் பல்லாயிரம் காதங்களை யும் கடக்கலாமன்றோ? இவை அனைத்தும், அக்கருவிகளைக் கொண்டு அல்லாமல் ஊனக்கண்களாலும் காதாலும் அறியும் வன்மை இக்காலத்தில் எவர்க்கும் இல்லை அல்லவா?

ஆனல், முற்காலத்து யோகியரும் முனிவர்களும் இத் தகைய செயல்களை ஊன அவயவங்களாலேயே அறியவும் செய்யவும் கூடிய வன்மை கொண்டிருந்தனர் என்றும், அவையே அன்றி, சிறந்தகாலம் நிகழ்காலம், என்றமட்டில் லாமல் எதிர்காலத்து நிகழத்தக்கனவற்றையும் முன்னதாக அறியக்கூடிய ஆற்றலும் உடையவர்கள் என்றும், நூற்பிர மாணத்தாலும், பெரியார் வாய்மொழியாலும் அறியக்கிடந் தவை. ஞானப்பெருக்கு இல்லாதவரும் சாதாரணமாகக் கருவி

களைக்கொண்டு இத்தகைய அற்புதமான காட்சிகளும், பறத்தல் முதலிய அரிய முயற்சியும் செய்யமுடியும் என்ருல், அறிவிற் சிறந்த பெரியோராற் செய்யலாகாமை எவையோ? கேவலம் மானிட ஆயுளையும் சூரியசந்திரத் தோற்ற வேறுபாட்டால் ஏற்படும் காலவரையாகிய நாள், வருஷங்களை அன்னவர் கடப்பது முடியாத காரியமா? அந்நிலை யடைந்தவரே முக்கால ஞானியர் ஆவர்; அவர்களுக்குச் சரீரமே காலத்தின் அளவு: ஊழிக்காலமும் கணப்பொழுது ஆக்கும் சக்தி அவர்பால் உண்டு என்பது தெற்றென விளங்கும்.

குறளில் 'முற்றுடம்பு' என்றது இத்தகைய ஆற்றலைப் பெற்ற சூக்கும உடம்பினை. கண்ஆரக் காணவும் என்றதால் ஊனக்கண்கொண்டே பார்க்கும் சக்தியைப் பெறலாம் என்றபடி 'ஆயபயன்'—அடையக்கூடியபயன்; அப்பயன் அடைவது சுலபம் அன்று என்பது கருத்து. 'ஆயபயன்' என்றதற்கு 'ஆய வுணர்வு' என்றும் பிரதிபேதம்.

**22.** **சென்றுண்டு வாழ்ந்து திரிதரு முள்ளுடம்**
**பென்றும் கெடாத திது.**

(இ - ள்.) உள் உடம்பு - சூக்கும சரீரம், சென்று - வினைவயத்தாற் சடசரீரத்துள் அடைந்து, உண்டு - வினைப் பயனைத் துய்த்து, வாழ்ந்து - அதற்கேற்ப இன்பநிலையிற் பொருந்தி, திரிதரும்-பல பிறவிகள்தோறும், புகுந்து புகுந்து மாறிமாறிச் சஞ்சரிக்கும் என்ருலும், இது என்றும் கெடாதது - இச்சூக்கும உடல் எக்காலத்திலும் அழியாதது எ - று.

இதுவும் சூக்கும உடலின் தன்மை யுரைத்தது. மிகவும் ஆற்றல் படைத்த சூக்கும வுடல் அழியுமோ எனின் அழியாது; வினைவயத்தாற் பல பிறப்புக்கள் பெற்றாலும், அவ்வவ் வுடலில் இருந்து வினைப்பயனை அனுபவித்து அவ்வுடலை நீங்குமே அன்றித் தான் அழியும் தன்மையது அல்ல. திரிதல் - பலபிறவியிற் சஞ்சரித்தல்.

இனி உள்ளுடம்பு என்பதை ஆறாதாரமும் அடங்கிய கோசம் எனக் கொள்ளலாகாதோ எனின், கொள்ளலாம். ஆனால் சூக்கும சரீரத்தைப்பற்றி வேறு கூறாததாலும், ஆறாதாரங்களில் விவரம் மேல் வருவதாலும், உள்ளுடம்பு சூக்குமத்தையே குறிப்பிட்டதாகக் கொள்வது சிறப்பாம்.

'சென்றுண் டுவந்து' என்றும், 'ஒன்றும் கெடாதது' என்றும் பாடபேதங்கள். உவந்து - உவப்புடன் என்க.

## 23. வெள்ளிபொன் மேனிய தொக்கும் விளைவுடைய வுள்ளுடம் பாய வொளி.

(இ - ள்.) விளைவுடைய - நன்மையை விளைவிக்கும், உள் உடம்பு ஆய - சூக்கும சரீரத்தினால் ஆகும், ஒளி - விளங்கும் தன்மை, வெள்ளி பொன் மேனியது ஒக்கும் - வெள்ளியும் பொன்னும், என்ற அவற்றின் நிறத்தை உடையது என்னும் படி ஒத்திருக்கும் எ - று.

சூக்குமவுடல் செய்வதை இத்தன்மையது என்பதை இக்குறள் கூறுகின்றது. வெள்ளியின் மேனியையுடைய சிவ

பிரானும், பசும்பொன் மேனியையுடைய உமாதேவியும் கலந்து நின்ற காட்சியும், அதன் பலனாகிய உலகப் பிரவிருத்தியும் சூக்கும வுடலினாற் காணப்பெறும் என்று காட்டுவதற்கே வெள்ளியையும் பொன்னையும் உவமைகூறினார்; இக்காட்சியே அர்த்த நாரீச வுருவம் என்பது. இதனைச் சூக்குமவுடலின் ஆற்றலால் நம் உடலுக்குள்ளும் காணலாம் எனப் பெரியோர் கருதுகின்றனர். இனிப் பொன் என்பதற்குச் செம்பொன் என்று கொண்டு செம்மை நிறத்தைப் பொன் என்பது குறித்ததாகப் பரியாயப் பெயர்கூறி, வெள்ளி சுக்கிலத்தையும், செம்பொன் சுரோணிதத்தையும் குறிப்பிட்டன, அவை கலந்த நிலையின் சூக்கும உடம்பு நிலைத்திருக்கும் எனப் பொருள் கூறுவர். இக்கருத்து அர்த்த நாரீச தத்துவத்திலேயே அடங்கி யிருத்தலின், பதத்தைச் சிதைத்து இவ்விதம் பொருள் கொள்ளவேண்டிய அவசியம் இல்லை என விலக்குக.

விளைவு - நன்மை தீமையின் பெருக்கு. 'வினை' என்றும் பாடம்; சிறப்பின்று.

**24.** நல்வினையுந் தீவினையு நின்று தெரிதருஞ்
செய்வினைக்கும் வித்தா முடம்பு.

(இ - ள்.) உடம்பு - சூக்குமதேகம், நல்வினையும் தீவினையும் நின்று - நன்மை தீமை என்னும் இருவகைச் செயலும் பொருந்தி, தெரிதரும் - 'இதுசெய்யத்தகும், இது தகாது' என்று அறிவுறுத்துவதும் அன்றி, செய்வினைக்கும் வித்தாம் -

அவ்வறிவுக்கு ஏற்றபடிச் செய்வதற்கும் முதற் காரண மாகும் எ - று.

சூக்கும தேகம் பரிபக்குவம் அடைந்த நிலையில் நன்மை தீமை என்னும் பகுத்தறிவை நல்குவதோடு, உயி ருக்கு உறுதியான வழியினையும் காட்டுகின்றது என்றபடி. பஞ்சகரணங்களால் அறியப்படுவனவற்றுள் நன்மையும் தீமை யும் கலந்தன; அவற்றுள் நன்மை தருவன இவை தீமை பயப் பன இவை என்று அறியச்செய்து தீயவையை விலக்கி முன் னவற்றில் நம்மை யுய்ப்பது சூக்கும தேகம் என்பது காணப் படும்.

தெரிதருதல் - அறிவுறுத்தல் - இனி "நல்வினையும்...... உண்டு திரிதரும்" என்னும் பாடம் உண்டு. இதற்கு, இரு வினையையும் நுகர்ந்து திரிகின்ற உடம்பு எனப் பொருள் கூறுவர்.

"முற்செய் வினையின் பயன்றுய்த் ததுவுலர்ந்தாற்
பிற்செய் வினையின்பின் போகலால்" (அறநெறிச் சாரம்)

என்று கூறினதால் ஒவ்வோரான்மாவும் முற்பிறப்பின் பயனை முதலில் அனுபவித்துக் கழித்து, அதன்பின் ஜென்மங்களின் பயனையும் அனுபவித்தல் முறையாதலானும், அவற்றை முழுவதும் ஒரு பிறவியிலேயே அனுபவித்துக் கழித்தல் ஓரான்மாவுக்கு முடியாது ஆகையானும், அவ்விதஞ் செய்யக் கூடிய சக்தி ஆதிபரம்பொருளுக்கே பொருந்திய தாகையா லும் அப்பாடம் சிறப்பின்மை அறிக. சூக்குமதேகமே

பயனை உண்ணுதல் (அனுபவித்தல்) இல்லை, தூலசரீரத்திற்கே அது பொருந்தியது என்பதும் அறியவேண்டியது.

செய்வினைக்கும் வித்து என்றது மேற்பிறவிகளில் அனுபவிக்கவேண்டிய ஊழ்வினைக்கு வித்து ஆக அமைவது என்றபடி.

## 25. அல்லற் பிறப்பை யகற்றுவிக்கு மாய்ந்தாய தொல்லை யுடம்பின் றொடர்பு.

(இ - ள்.) தொல்லை உடம்பின் தொடர்பு - பழைய ஜென்மங்களிற் செய்த ஊழ்வினைத் தொடர்ச்சி, ஆய்ந்து ஆய - நன்கு உணர்ந்து அனுபவித்துக் கழிந்ததால், அல்லல் பிறப்பை - துன்பத்தையே தரும் பிறவியை, அகற்றுவிக்கும் - (மேற்கூறிய சூக்குமசரீரம்) வாராதபடி நீக்கும் எ - று.

இது வினைக்கும் வித்தாகிய சூக்கும உடம்பின் பெருமையை மீண்டும் கூறியது.

தொல்லை - பழைமை; தொல்லை உடம்பு என்பதால் முன்பெற்றிருந்த உடல் என்றும், அஃதாவது முற்பிறவிகள் என்றும் விளங்கும். தொடர்பாவது, முற்பிறப்பிற் செய்த நன்மை தீமைகளின் தொடர்ச்சி. அவ்வித ஊழ் ஜென்மங்கடோறும் அனுபவித்தலாற் கழிவடைந்து மேற்பெருகாதபடிச் சூக்கும சரீரம் செய்வதால் அச் சூக்குமசரீரம் மேற்பிறவிகளை விலக்கும் என்று முடிவுகூறினார். சூக்குமசரீரம் என்ற எழுவாய் வருவித்துப் பொருள்கொள்க. ஆய்ந்து ஆய்தலா

வது - சூக்கும சரீரத்தின் சக்தியால் ஒருபிறவி அனுபவிப்ப வற்றை ஊழின்பயன் என ஆராய்ந்து அறிந்து, அவற்றை அனுபவிப்பதிற் சஞ்சிதச் சுமை கழியும் என உணர்ந்து, அவற்றால் உண்டாம் பலாபலன்களை நுகர்தல். அல்லல் பிறப்பு - துன்பத்தையேதரும் பிறவி, பிறப்பதே துன்பம் ஆதலின் அங்ஙனமுரைத்தார்.

இனிச் சூக்குமவுடல் ஆய்ந்து ஆய்வதால், ஈசுர விபூதி நிலையை அடையும் எனவும், அந்நிலை அடையவும் அல்லற் பிறப்புக் கெடும் என்றும் கொள்க.

இக்குறள் நல்வினை தீவினைகளைச் 'சிங்க நோக்காக' முன்னும் பின்னும் நின்ற குறள்களை நோக்கிக் குறிப்பிட்டது; சூக்கும வுடம்பு என்ற எழுவாய் அத்தியாயத்தின் தலைப்பி னால் பெறப்பட்டது. ஆய்ந்தாய்ந்து என்றும் பாடபேதம் உண்டு.

**26.** **உள்ளுடம்பின் வாழு மொன்பது வாயுவுங்**
**கள்ளுடம் பாக்கி விடும்.**

(இ - ள்.) உள் உடம்பின் வாழும் - சூக்கும உடலோடு இயைந்து வாழும், ஒன்பது வாயுவும் - ஒன்பது வகைப்பட்ட காற்றின் இயல்பும், கள் உடம்பு ஆக்கிவிடும் - ஞானநெறிக்கு மாறுபட்ட திருட்டுச் சரீரம் ஆகச் செய்துவிடும் எ - று.

இது நாடிகளின் வழியே எழுகின்ற வாயுவின் செயலைக் குறித்துக் கூறியது. சட வுடலோடு இயைந்தன வாயுக்கள்

என்றாலும், அத் தூலவுடல் அழியும்பொழுது, வாயுக்களும் மறைந்து போவன ஆதலால், அவை உண்மையிற் சூக்கும உடலோடு சேர்ந்தவை என்று உறுதி செய்ய, "உள்ளுடம்பின் வாழும் வாயு" என்றார். இவ் வாயுக்கண் சூக்கும வுடம்பை நல்வழியில் இயக்கி அதற்கடங்கிய படியாட்களாக அடங்கி யிருப்பதற்கு மாறாகத், தம்முடைய இயல்பிற் றிரிந்து உடலைத் தீயவழியிற் புகுத்துவதும் அன்றி, அதனோடு அமைந்த சூக்குமத்தையும் அவ்வழியிலேயே செலுத்திவிடும் இயல்புடையதாயிருக்கின்றன. அதனாற் சுத்தமான சூக்கும வுடலும் கள்ள உடம்பாகி விடுகின்றது. கள்ளுடம்பு - கள்ள வுடம்பு. ஆக்கிவிடும், நிச்சயத்தைக் குறித்தது. எனவே, வாயுக்கள் நிற்கவேண்டிய நிலையில் நின்றக்கால், சூக்கும வுடம்பு பெறவேண்டிய மோக்ஷநிலையை எய்தும் என்பது கருத்து.

ஒன்பது வாயுக்களாவன — பத்து வாயுக்களுள் தனஞ் சயன் ஒழிந்த ஏனைய, அவையாவன:

(1) பிராணன் - இதயத்து இயங்குவது
(2) அபானன் - உச்சர்க்கத் தலத்திடை நிற்பது
(3) சமானன் - கந்தரசக்குழியிற் சந்திடைநிற்பது
(4) உதானன் - நாபியில் நிற்பது
(5) வியானன் - சரீரமுழுவதும் வியாபித்திருப்பது
(6) நாகன்-நீட்டலும் முடக்கலும் கிளக்கலும் உதவுவது
(7) கூர்மன் - உரோமம் புளகித்து இமைப்பது

(8) கிருதரன் - முகத்திடை நின்று தும்மலும் சினமும் வெம்மையும் விளைப்பது

(9) தேவதத்தன் - ஓட்டமும் இளைப்பும் வியர்த்தலும் செய்வது

இக்குறளுக்கு 'வாழ்வன வொன்பது மேழைக் கள்ளவுடம் பாக்கி விடும்' எனப் பாடம் ஓதி ஒன்பது துவாரங்களையும் கூறியதாகச் சொல்லுவர்.

**27. பொய்க்கெல்லாம் பாசனமாய்ப் புள்ளுவக்கோர் வித்தாகு மெய்க்குள்ளா மாய வுடம்பு.**

(இ - ள்.) மெய்க்கு உள்ளாம் ஆய உடம்பு - சரீரத்தி னுள் அடங்கி யிருப்பதாகிய சூக்கும வுடம்பு, பொய்க்கு எல்லாம் - அநித்தியமான ஆசாபாசங்களுக்கு, பாசனமாய் - உறவுகொண்டதாய், புள்ளுவக்கு - வஞ்சனைகட்கும், ஓர் வித் தாகும் - காரணமுமாய் அமைந்துவிடும் எ - று.

இது, மேல் ஒன்பான் வாயுவால் சூக்கும வுடம்பும் கள்ள வுடம்பு ஆகிவிடும் என்பதன்றி வேறு இச்சை காமா திகளாலும் சூக்கும சரீரம் பாவகருமங்களுக்கு மூலமாய் விடும் என்று வி ளக்குகின்றது. மாணிக்கம் சிறந்த பொருளா யிருந்தாலும், அதனைத் தீமை பயக்கும் வழியிற் பிரயோகிக்க, அதுவே கொலை முதலிய பாதகங்கட்குச் சாதனமாகின்றது; அமிர்தம் எனப்படும் பால் தனியாகவும், நன்மருந்துடனும் உட்கொள்ள மிக்க பலன் தரக்கூடியதாயிருக்க, அதில் நஞ்சு கலந்து பருக மரணத்தைத் தருகின்றது. அதுபோலவே,

சூக்குமசரீரம் சிவனைக் காணச்செய்யும் இயல்பிற்று என்று லும், தகுந்த வழியிற் பயன்கொள்ளாவிடில் தன்னையும் தூலசரீரத்தையும் ஆழ்துயரிலும் மீளாக் கருமத்திலும் அழுத்திவிடும் என அறுதியிடுகின்றார். மனம் என்னும் குதிரை உடலைத் தீய நெறியில் உய்க்கும்பொழுது பொய் கொலை முதலிய ஐம்பெரும் பள்ளங்களிலும், தள்ளிவிடும் என்பது ஆன்றோர் கொள்கை.

மெய் - சரீரம். இனி உண்மையே உருவுகொண்ட உள்ளுடம்பு எனக்கொள்ளினும் சிறப்பு. உண்மையே உருவான சூக்குமம், சாக்கிரதைநிலை கெட்டமாத்திரையில் உண்மைக்கு விரோதமான பொய் யாவற்றுக்கும் வித்து ஆய்விடும் என முரண் பொருள் தோன்றக் கூறியதாகக் கொள்க. புள்ளுவம் - வஞ்சனை.

## 28. வருபய னுண்டு மகிழ்ந்துடனு நிற்கு மொருபயனைக் காட்டு முடம்பு.

(இ - ள்.) வருபயன் உண்டு - ஜென்ம கன்ம பலன்களை அனுபவித்துக் கழித்து, மகிழ்ந்துடனு நிற்கும் - மிகுந்த மகிழ்ச்சி அடைந்து கழித்து, அம்மகிழ்ச்சியுடன் தோன்றுகின்ற, ஒரு பயனை - ஒப்பற்றதாகிய சிவயோக நிலையை, உடம்புகாட்டும் - சூக்குமவுடல் கண்கூடாகக் காட்டும் எ - று.

இது மனதை யடக்கிய வழி அடையும் பலன் கூறியது. ஊழ்வினை என்னும் பிராரத்த கன்மம் அனுபவித்து அழிந்தா

லொழியப் பரமபதியின் கூட்டுறவு பெறப்படாது ஆதலின் 'வரு பயன் உண்டு' என்றார். வருபயனாவது - முன் பிறவியினாற் செய்தவற்றின் பயனாகிய சஞ்சிதப் பொதியால் இப் பிறவியில் வந்து அடையும் நன்மை தீமைகளாகிய கன்ம அனுபவம். அவை ஒழிய ஆனந்தம் என்னும் நிலையும், அந்த நிலையில ஈசுரத் தோற்றமும் உண்டாகும் என்றார். கடவுள் ஆனந்தமயம் என்பது நூற்றுணிபு. இதுபற்றியே தாயுமானவரும் 'அண்டபகிரண்டமும் அடங்க ஒரு வித்தாகி ஆனந்தமான பரமே' என்றும் 'ஆனந்த பூர்த்தியாகி' என்றும் கூறினார்.

ஒருபயன் - ஒப்பற்ற பலன்; ஆவது சிவயோக நிலை. இதுவே குண்டலியோக நிலை எனப்படும். மேல் "முன்னேனைக் காட்டிவிடும்" என்று இந்நிலையை தேகத்திற்குள்ளேயே காணப்பெறும் என்று உரைத்தார்.

**29. வாயுவினு லாய வுடம்பின் பயனே**
**யாயுவி னெல்லை யது.**

(இ - ள்.) வாயுவினால்-பத்துவகை வாயுவினாலும், ஆய-பொருந்திய, உடம்பின் பயனே - தூலசரீரத்தின் பயன், ஆயுவின் - ஆயுள் நாளின், எல்லையது - அளவினை உடையதாகும் எ - று.

இது சிங்க நோக்காக வாயுவினால் உடல் பெறக்கூடிய பலனை உரைத்தது. சூக்குமஉடல் தூலமான சரீரத்தை அடையும்பொழுது விந்துவொடு கலந்து பத்துவகை வாயுவும்

சேர்ந்து தூல உடல்தோன்றி, அவ்வுடல் அவ்வாயுக்களால் இயங்கப் பெறுதலின் 'வாயுவினால் ஆய வுடம்பு' என்றார். அவ்வுடம்பு தானும் அவ்வாயுக்களின் அளவைக் கொண்டு வாழ்நாள் எல்லையைக் குறிப்பிடும்.

வாயுக்கள் பத்து ஆவன, தனஞ்சயன் என்பதும், மேல் உரைத்த ஒன்பதும். தனஞ்சயனாவது - உடலைவிட்டு உயிர் பிரிந்த பிறகும், தான் உடனே விலகாது, உடலை வீக்கித் தலையைக் கிழித்து அகலும் வாயு. இவற்றுள், பிராணவாயு அடங்க, ஏனைய எட்டும் படிப்படியாகக் குறையவும், தனஞ் சயன் சோர்வு அடைந்து உடலை வீழ்த்தும், பின்னர் கபாலத் தின் வழியாகப் பிரியும் என்றறிக. எனவே, ஆயுள்விருத்தி அவாவுகின்றவர்கள், பிராணவாயுவை வளரச்செய்வது அவ சியம் ஆம்; அதற்குச் சாதனமாவது பிராணாயாமம் என்னும் பயிற்சி என்பது அறிக.

ஆயுஸ் என்ற வடசொல், ஆயு என வந்தது.* வழக்காற் றில் 'ஆயுள்' என்ப.

**30.** ஒன்பது வாசலு மொக்க வடைத்தக்கா
லன்பதி லொன்று மரன்.

(இ - ள்.) ஒன்பது வாசலும் - தூல சரீரத்தில் உள்ள ஒன்பது துவாரங்களையும், ஒக்க அடைத்தக்கால் - பொருந்த மூடிப் பிராணாயாமம்செய்தால், அன்பதில் ஒன்று ஆம் அரன் - ஐம்பதிற் றோன்று நிலையில் இருக்கும் ஈசுரன் (தோன்று வான்) எ - று.

'தோன்றுவான்' எனச் சொல்லெச்சம் கொண்டு முடிக்க. இது பிராணாயாம முறை கூறியவாறு. ஒன்பது துவாரங்களையும் அடங்கச் செய்து, மூச்சு உட்சுவாசித்தலும், வெளிச் சுவாசித்தலும், தம்பித்தலும், மூலக்கனலை எழுப்புதலும், செய்யும் இச்செய்கையே பிராணாயாமம் எனப்படும். இவற்றின் விவரம் மேல் உரைக்கப்படும். இதற்குச் சாதனம், நவ துவாரங்களையும் அடைப்பது. அவையாவன; கண் இரண்டு, காது இரண்டு, நாசித்துவாரம் இரண்டு, வாயொன்று, மலசலம் வெளிப்படும் பொறிகள் இரண்டு ஆக ஒன்பது.

இனி, நவ துவாரங்களே விஷய நுகர்ச்சிக்கு ஆதாரமாகிய ஐம்பொறிகள் என்றும் அவற்றை அடக்கிவிட்டால் ஐம்பொறிகளின் சேட்டையை அடக்கி வென்றவாறு என்றும் கொள்வதிலும் குறையில்லை. அவ்விதம் பொருள்கொண்டால் ஐம்பொறிகளையும் வெல்வது பிராணாயாமப் பயிற்சியால் முடியும் என்பது பெறப்படும். ஒன்பது துவாரங்களாற் பெறப்படும் புலன் நுகர்ச்சி அடங்கினாலன்றி ஐம்பொறி அடங்குதல் இல்லை.

ஈசன் - குண்டலி நிலையில் இருக்கும் பரம்பொருள் இஃது 51 நிலையில் அடங்கும், இவை அனைத்தையும் கடந்து நிற்பவர் கடவுளாதலின் 'அன்பதி லொன்றும் அரன்' என்றார் ஐம்பத்தொரு நிலையாவன:

> உன்னிய மூலத் தொரு நான்காகித்
> தன்னிய லிலிங்கத் தைந்தொடான் றேற்றுப்

## உள்ளுடம்பின் நிலைமை

போற்றிய வாலடிப் பத்தெனச் சாற்றுமுக்
கோணமாம் வடிவிற் கொள்பதிற் றிரண்டெனச்
சேணுய ரடியி னிரண்டுற ழெண்பொருள்
காணிய வாயதிற் கண்ட விரண்டும்
பதியும் பசுவும் பாசமு மாதிய
விதிமுறை முற்றிய கதியெனுங் குருபதத்
தோங்கிய வொன்றெனு முண்மை தாங்கிய
எழுத்துவகை தழீஇய வைம்பதிற் றொன்றே
வழுத்துவகை கெழீஇய சிவயோக நிலையே.

இஃது உரை நடை. இவற்றின்விவரம் ஆன்றோர் வாய்மொழியால் அறிக.

---

# நான்காமதிகாரம்

## நாடி தாரணை

முன் அத்தியாயத்தில் உள்ளுடம்பின் நிலையைக் கூறினார். அவ்வுடம்போடு இயைந்த நாடிகள் இவை என்பதும், அவற்றைத் தரித்து அடக்கிக் குண்டலினிநிலை அடையும்முறை இவையென்பதும் இவ் வத்தியாயத்திற் கூறுகின்றார். தூலவுடம்பொடு பொருந்தியன நாடிகள் என்றாலும் அவை அதன் இயற்கையில் இயங்கும் தன்மையன. சூக்கும உடலின் ஆணைக்கே அடங்கியன ஆதலால் அவற்றை ஆளும் முறை குறிக்கின்றார்.

**31.** எழுபத்தீ ராயிர நாடி யவற்றுண்
முழுபத்து நாடி முதல்.

(இ - ள்.) எழுபத்தீராயிரம் நாடி - உடலில் உள்ளனவாகிய நாடிகள் எழுபத்து இரண்டு ஆயிரம் ஆகும், அவற்றுள், முழுபத்தும்நாடி - அந்நாடிகளுள், முழுதன்மையினையுடைய நாடிகள் பத்து ஆம், முதல் - அவை தாம் முதன்மையாகக் கருதப்படும் எ - று.

இது தூல சரீரத்தில் அடங்கிய நாடி யமைப்பைக் கூறுகின்றது. பலபடப்பட்ட சாஸ்திர ஆராய்ச்சி வல்லுநரும் இக்காலத்திலும் தீர்மானஞ்செய்து உரைக்க இயலாத ஓர் உண்மையை இக்குறட்பா கூறுகின்றது. சரீரநூல் ஆராய்ச்சி

பின்படிக் கணக்கற்ற இரத்தக் குழைகளும், மூளையினின்றும் சம்பந்தப்பட்டுச் சரீரமுழுவதும் பரவிய நரம்புகளும் உள என்று அறியப்படும். அவற்றின் எண்ணிக்கை இத்தனை என்று அறுதியிட்டுக் கூறமுடியாது. சுருங்கக்கூறின் இரத்தக்குழை யொன்றே பலபிரிவினதாய் ஒன்றோடொன்று பிணைந்து இருதய கோசத்திற் சம்பந்தப்பட்டுள்ளது. அது போலவே நரம்பும் ஒரே தொடர்ச்சியாய்ச் சிரசினின்றும் முதுகெலும்பின்வழியா யிறங்கித் தேகமுழுவதும் பரவிய நரம்புகளுடன் பிணைந்துள்ளது. ஈண்டு நாடி என்றது பின்னுற் கூறப்பட்ட நரம்புகளைக் குறித்ததாக அறிக. வழக்கத்தில் வியாதியுற்றூர்க்கு 'நாடி பார்த்தல்' என இந்நாடிகள் வேகத்தைக்கொண்டு நோயின்றன்மை அறிதலும் அறிக. ஆகவே ஒவ்வோர் உணர்ச்சியைத்தரும் நாடிகள் எழுபத்திரண்டு ஆயிரம் பிரிவுகள் உள்ளதாகப் பண்டையோர் கணக்கிட்டிருக்கின்றனர். இவை ஒருதொடர்ச்சியின எனினும் தனித்தனி நாடிகளாக கருதப்படும்.

இவ்வெழுபத்திரண்டாயிரம் நரம்புகளிற் சிறந்தவை இருபத்து நான்கு. முதுகெலும்பினுள் செல்லும் நரம்புக்கற்றையில் அடங்கியதாய் மத்திமப் பிரதேசத்தில் மேல் இடமாகப் பத்தும், கீழ் இடமாகப்பத்தும், ஒவ்வொருபக்கத்திலும் இரண்டிரண்டும் ஆக அமைந்திருக்கின்றன.

இவ்விருபத்து நான்கினும் தலைசிறந்தன பத்து:

1. சுழுமுனை - ஆறு ஆதாரங்களாகிய ஆறு கமலத்தையும் ஊடுருவிக் கோத்துக்கொண்டு அவற்றின்மேல் ஆயிர இதழ்க்கமலத்தை நுனியிலே கொண்டு நிற்பது.
2. இடை
3. பிங்கலை } இரண்டும் கத்தரிகைபோற் பின்னிக்கொண்டு நாசியின் இருபக்கமாக வந்து நிற்கும்.
4. காந்தாரி - நாபியாகிய மணிபூரகத்திற் றோன்றி, ச, ரி, க, ம, ப, த, நி, என்ற சப்தம் எழுக்கும் எழுநாடியாகக் கண்டத்தில் உறுவது.
5. அத்தி
6. சிகுவை } இவை இரண்டும் பத்து நாடியாகக் கண்ணில் நிற்பன.
7. அலம்புடை
8. புருடன் } இவை இரண்டும் செவியில் நூற்றிருபது நரம்புகளாய் இருப்பன.
9. குரு - நாபியை யுறைந்து குய்யத்தைப்பற்றி யிருப்பது.
10. சங்கினி - உபத்தத்தைப்பற்றி நிற்பது.

இனி ஆதாரங்கள் ஆறு ஆவனவற்றின் விவரம் கவனிப்பாம். இவற்றின் ஊடேதான் சுழுமுனை என்னும் நாடி செல்கின்றது. இருபுறமும், இடைகலையும் பிங்கலையும் சுற்றி இருநாசியிலும் மூழ்கின்றன என்பது கவனித்தல்வேண்டும்.

1. மூலாதாரம். இது குதத்திற்கும் இலிங்கத்திற்கும் இடையே இருப்பது. சுழுமுனை நாடியினூடே அனேகம் காந்திகளுடன் கூடிய பாம்பின்வடிவாயுள்ள குண்டல சத்தி என்பது தன் உடலை வளைத்து மூலாதாரத்தின்மேல்

படத்தை வைத்துக்கொண்டு யோகநித்திரைசெய்யும். பிராணு யாமமுதலிய பயிற்சியால் உண்டாம் வெப்பத்திஞல் இக்குண் டலி சக்தி சுழுமுனையூடே சென்று மற்றைய ஐந்தாதாரங் களையும் கடந்து ஆயிர இதழ்க் கமலத்துள்ள சதாசிவத் துடன் கலக்கும் என்க. இதன்விவரம் மேலும் மேலும் உரைக்கப்படும்.

இது பூமி. பின் தன்மை பொருந்தியது.

2. சுவாதிட்டானம் - இஃது இலிங்கத் தானத்தி லிருப் பது; இது நீரின் தன்மையது.

மூலாதாரமும், சுவாதிட்டானமும், அக்கினிகண்டம் என்னும் உருத்திரகிரந்தி என்றும் பிரிவுபடும்.

3. மணிபூரகம்: இஃது உந்தியிடத்துள்ளது. அக்கி னிச் சொரூபமானது.

4. அஞகதம்: மார்பிடத்தது. காற்றின் தன்மை யுடையது.

மணிபூரகமும், அஞகதமும், சூரியகண்டமென்றும், விஷ்ணுகிரந்தி எனவும் பிரிவுபடும்.

5. விசுத்தி: இது கழுத்திடத்தது. ஆகாயத்தின் குணத் தை உடையது.

6. ஆக்ஞை: புருவத்திடத்தது - மனதின் பெருமை பொருந்தியது.

இவை இரண்டும் சந்திரகண்டம் என்றும், பிரமகிரந்தி என்றும் பிரிவுபடும்.

இவ்வாறு ஆதாரங்களையும் கடந்து சிரசில் சுழுமுனை நாடியின் முடிவிற் பொருந்தியிருப்பது ஆயிர இதழ் உடைய தாமரைமலர். இம்மலரே ஈசன்பதி என்றும், ஈசன் நடன சபை என்றும் சதாசிவநிலை என்றும், உமையின்பாதம் என்றும் இன்னோரன்ன தெய்விக அடைமொழிகள் பெறும். குண்டலி மூலாதாரத்தினின்றும், யோகப்பயிற்சியால் சுழுமுனையூடே ஏறி மற்றைய ஆதாரங்களையும் கடந்து இம்மலர்ப் பீடத்தை அடைவதே யோகநிலை அடைவது என்றும், இறைவன் அடியிணை சேர்வதென்றும் உரைப்பர். மேலுரைப்பிற் பெருகுமாதலின் பரந்த நூல்களுட் கண்டுகொள்க.

**32. மெய்யெல்லா மாக நரம்போ டெலும்பிசைந்து**
**பொய்யில்லா நாடிப் புணர்வு.**

(இ - ள்.) மெய் எல்லாம் ஆக - சரீர முழுவதும் பரவி, நரம்போடு எலும்பு - நரம்பும் எலும்பும் என்பவற்றோடு, இசைந்து - பொருந்தி அமைந்து (இருக்கும் நிலையே), பொய் இல்லா - தவறாத, நாடிப்புணர்வு - நாடிகளின் பிணைப்பின் றன்மையாம் எ - று.

இது முதற்கூறிய எழுபத்தீராயிரம் நரம்புகளின் பிணைப்பினைக் கூறுகின்றது. இவ்வெழுபத்தீராயிரம் நரம்புகளும் தேகமுழுவதும்பரவி ஒன்றோடொன்று இயைந்து இருக்கும் தன்மை மேற்குறளுரையில் விளக்கப்பட்டது. இதை ஓங்கார நாடிக்கு ஏற்றிப் பொருளுரைப்பாருமுளர்.

'மெய்யெல்லாமாக' என்றும், 'பொய்யில்லை' என்றும் பிரதிபேதங்கள்.

**33. நரம்பெனு நாடி யவற்றினுக் கெல்லா**
**முரம்பெறு நாடியொன் றுண்டு.**

(இ - ள்.) நாடி அவற்றினுக்கு எல்லாம் - மேல் உரைத்த நாடிகள் எழுபத்து ஈராயிரத்துக்கு எல்லாம், நரம்பு எனும் - முதன்மையானது என்று சொல்லத்தக்க, உரம்பெறும் - வலிமைபெற்ற, நாடி ஒன்று உண்டு - தனித்த ஒரு நாடி ஒன்று உளது எ - று.

இது சுழுமுனை என்னும் நாடியின் சிறப்பு உரைத்தது. இது மூலாதாரத்தினின்றும் ஆறு தாரங்களையும் கடந்து அப்பாலும் செல்வது நோக்கி உரம்பெறும் நாடி என்றார். நரம்பு என்றது - முதன்மையைக் குறித்த பரியாயச் சொல்லாகக் கொள்க.

'நரம்பொடு நாடி' என்றும் 'இவையினுக்கு' என்றும் பாடபேதங்கள்.

**34. உந்தி நடுவா யுறுமுடியிற் கீழ்மேலும்**
**பந்தித்து நிற்கும் பரந்து.**

(இ - ள்.) உந்தி நடுவாய் - நாபித்தானமாகிய மணிபூரகத்தை நடுவிடத்திற் கொண்டதாய், உறுமுடியின் - பொருந்திய ஆயிரவிதழ்த் தாமரையைச் சிரசாகக் கொண்டு, கீழ் மேலும் - கீழும் மேலுமாக, பரந்து - பக்கங்களிலும் வியா

பித்து, பந்தித்து நிற்கும் - மற்ற நாடிகளுடன் பிணைந்து நிற்கும் நிலை உடையது எ - று.

இதுவும் அது. அந் நாடியின் தானம் உரைத்தவாறு. அது மூலாதாரத்தை ஆரம்பமாகக் கொண்டுள்ள போதிலும், ஓசைபிறக்கும் தானமாகிய மணிபூரகத்தை இடையிற்கொண்டுள்ள பெருமையை உடையதெனை விசேடித்து நின்றது. பூரகம் செய்யும் காற்று மூலாதாரம் வரையிற்சென்று மணிபூரகத்திலேயே தம்பம் ஆகும் தன்மையை நோக்கி மணிபூரகத்தை விசேடமாகக் கூறினர். இந் நாடியின் சக்தியால் திருமால் உந்திக்கமலத்தின் ஊடே நாளம்பெருக்கி அதில் பிரமதேவனை உண்டாக்கியது என்பது உய்த்துணரற்பாலது. ஆகவே 'உந்தி முதலா' என்ற பாடம் பொருந்தாததறிக. 'முடிபோல்' என்ற பாடமும் உண்டு; அதுவும் பொருந்தாதது காண்க. 'பரிந்து' என்றும் பாடம்.

## 35. உந்தி முதலாகி யோங்காரத் துப்பொருளாய் நின்றது நாடி நிலை.

(இ - ள்.) உந்தி முதலாகி - நாபியைத் தொடங்கி, ஓங்காரத்து - பிரணவப் பொருளின் ஓசையினது, உள்பொருளாய் - மறைபொருளாகி, நாடிநிலை - அந்நாடியின் இருப்பு, நின்றது - நிலைபெற்றது எ - று.

இது சுழுமுனையினின்றும் மந்திர உச்சாடனத்துக்கு மூலமாகிய ஓசையும், மந்திரத்தின் சிகரமாகிய ஓங்கார பிர

ணவமும் தோன்றும் இடத்தைக் குறிப்பிட்டது. மேற் கூறிய குண்டலி பாம்பைப்போலிருப்பது, ஓங்கார வடிவத்தையும் கொண்டுள்ளது ஆகலின் ஈண்டு ஓங்காரம் பிறக்கும் உந்தித்தானத்தைக் குறிப்பிட்டார். அதனால் முற்கூறலோடு மாறுபடாமை காண்க.

ஓங்காரம் - ஓம் என்னும் எழுத்து. அதுவே வேதங்கட்கும் உட்பட்டதென்றும் உலகந் தோன்றுவதற்கும் அந் நாதவொலியே காரணம் என்றும் கூறுவர். ஓங்காரத்தினின்றுமே ஏனைய வொலிகளும், சடப்பொருளும் தோன்றின என்பது நூற்றுணிபு. இதனையே 'உட்பொருள்' என்று கூறினார்; இனி, ஈசுரனிலை எனினும் பொருந்தும். 'நின்றன' என்றும் பிரதிபேதம்.

**36. காலொடு கையி னடுவிடைத் தாமரை**
**நூலளவு நாடி நுழைந்து.**

(இ - ள்.) காலொடுகையின் - கால்போலும் கைபோலும் அமைந்த இடைகலை பிங்கலையின், நடுவிடை - மத்தியிடத்து, நுழைந்து - ஆறுதாரத்தின் ஊடே புகுந்து, நாடி - சுழுமுனை என்னும் அந்நாடி, தாமரை நூல் அளவு - (நடுவிடை) தாமரையின் நாளத்தின் அளவாகத் துவாரம் பொருந்தியது எ - று.

இதுவும் காலொடு கையென்றது பரியாயமாக இடகலை பிங்கலைகளைக் குறித்தன. இனி ஆறுதாரங்களின் கீழ்மூன்று

காலாகவும், மேன்மூன்று கையாகவும் கொண்டு அவற்றின் நடு இடை என்று கொள்ளினும் பொருந்தும். நுழைந்து, ஆறு ஆதாரங்களினூடே என்க. நாடி நடுவிடை என்று பின்னும் கூட்டுக. சுழுமுனை, இடகலை பிங்கலை இவற்றின் நடுவே ஒரு துவாரம் அடிமுதன் நுனிவரையில் தாமரை நாளத்தைப்போல உள்ளது என்பது அறியத்தக்கது. நாடி பன்மையாகக் கொண்டு மேற்கூறிய மூன்று நாடிகளுக்கும் கொண்டாலும் அமையும். 'நடு விட' என்றும் பாடம்.

**37. ஆதித்தன் சந்திரன் போலவந் நாடிகள்**
**பேதித்துத் தாம்பரந்த வாறு.**

(இ - ள்.) அந்நாடிகள் - சுழுமுனையொடு கூடிய மூன்று நாடிகளும், ஆதித்தன் சந்திரன்போல் - சூரியனும் சந்திரனும்போல், பேதித்து - தம்முள் மாறுபட்டு, தாம்பரந்த ஆறு - தமக்குள் பரந்து நிற்கும் விதம் ஆகும் எ - று.

முச்சுடருள் சிறந்தது சூரியன்: அவனது சாயை யென்றவன் சந்திரன். இரண்டும் கூறவே சூரியன் வெப்பமட்டில் உடைய அக்கினியும் உடன்சேர்த்து முச்சுடராகக் கொள்க. இடைகலை சந்திரனும், பிங்கலை சூரியனும், அக்கினி சுழுமுனை யாகவும் கொள்க. சூரியனும் சந்திரனும் எவ்வாறு உலகில் பகல் இரவு என்னும் இருபொழுதும் மாறுபட்டுத் தோன்றிப் பயன் தருகின்றனவோ, அதுபோல் இடைகலையும் பிங்கலையும் இருந்து இயங்குகின்றன. இரண்டும் அடங்கிய வழியும், வெப்பம் வேண்டுங்கால் உண்டாக்கப்பெறும் அக்கினியைப்

போல், சுழுமுனை காற்றுச் சுவாச நிர்ச்சுவாசத்திற்கு அமை இறதென்பதும் உணரற்பாலது. மாறுபடுதலாவது ஆக்கல் இயல்புடையனவும், அழித்தல் இயல்புடையனவும் ஆகிய நாடிகளின் தன்மையைக் குறித்தது. முச்சுடரும் இல்லாத போதும் இருள் சூழ்ந்திருப்பினும், அவ் இருள் தன்மையி லேயே வெளிச்சத்தின் உயர்வினைக் காட்டுவது அறிகின் றோம். அதுபோல், இடங்வல நாடிகள் ஒடுங்கியபோது மன இருள் மிகுந்தபோது சுழுமுனையும், அதனிடை ஓங்கார சொரூபமும் உதித்தல் காணப்பெறலாம் என்றபடி. 'சந் திரன்' என்பதற்கு 'தண் கதிர்போல' என்றும் பாடம்.

**38. நாடிக ளூடுபோய்ப் புக்கு நலஞ்சுடர்தான்
வீடு தருமால் விரைந்து.**

(இ - ள்.) நலம் சுடர்தான் - நன்மையைத் தரும் வெப் பம், நாடிகள் ஊடுபோய் - முற்கூறிய பத்து நாடிகளின் வழியேபுகுந்து, விரைந்து - விரைவுடன், வீடுதரும் - மோக்ஷ நிலையை எய்துவிக்கும் எ - று.

முற்குறளில், முச்சுடர்போன்ற நாடிகளை உரைத்தவர், அவற்றில் சஞ்சரிக்கும் மூலாக்கினியைக் கூறுகின்றார். பிராண வாயு இடைகலை பிங்கலையிற்புகுந்து, பின்னர் சுழுமுனை யிலும் புகுங்கால் உந்தியில் ஓங்கார ஒலியிற் பிறக்கும் மூலாக் கினியானது எல்லா நாடிகளிலும் பரந்து ஆறுதாரங்களையும் கடந்து, தாமரைப்பீடத்தை அடையும் என்றபடி. மூலாக் கினியையே நலஞ்சுடர் என்றார். அது முறையே மூன்று

நாடிகளிலும் புகுதலால் 'ஊடுபோய்' என்றார். ஈசுரநிலை என்று மேற்கூறப்பட்ட சுழுமுனையின் முடிவை வாயு அடைதலே கடவுள்காட்சி ஆதலின் வீடுதரும் என்றும், அடைதல் நிச்சயம் என்பது காட்ட 'விரைந்து' என்றும் கூறினார். வீடு - பந்த பாசங்களினின்றும் நீங்கப்பெறுவது; அதுவே மோக்ஷநிலை என்பதும் உணரத்தக்கது. ஆல் - அசை. 'புக்க' என்பதும் பாடம்.

**39. நாடி வழக்க மறிந்து செறிந்தடங்கி**
**நீடொளி காண்ப தறிவு.**

(இ - ள்.) நாடிவழக்கம் அறிந்து - நாடிகளின் இயல்பு உணர்ந்து, செறிந்து - அவற்றோடு பொருந்தி, அடங்கி - அந் நாடிகளோடு ஒடுங்கி, நீடொளி காண்பது அறிவு - நீண்ட ஒளியாகிய சிவத்தைக் காண்பதே விவேகம் ஆகும் எ - று.

இது சுடர் தோன்றிய விதம் அறிந்து அதன்வழியாக எல்லையில் நின்ற சிவனைக் காணும் இயல்பு கூறியது.

மூலாக்கினிக்கு மூலம் ஆக உட்சுவாசிக்கும் வாயுவின் இயக்கம் வட்புறத்தும் இடபுறத்தும் எவ்வெப்பொழுது இயங்கவேண்டும் என்ற அளவு அறிந்து, அவ்வாயுவைத் தம்பித்தலும், நாடிகளில் மாறிமாறிப்புகுந்து மூலாக்கினியை எழுப்பி அதனாற் குண்டலியின் படத்தை எழுப்பி மேல் நோக்கச் செய்வதும், அவ்விதம் சென்று முடிவில் இருக்கும் பேரொளியாகிய சிவநிலையைக் காண்பதும் அறிவின்பாலதாகும் என்றார். வாயுவை உள்ளடக்குங்கால் நாடிகளின்

இயல்பு அறியக்கூடும் என்பது தோன்ற 'நாடி வழக்க மறிந்து' எனக் கூறினார்.

"உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
திடம்பட வீசனைத் தேடு. (ஔ—குறள் 12.)

என முற்கூறியவர், ஈண்டு அவ்வீசனைத் தேடி அடையும் வழியைக் கூறினார் என்பது கொள்க.

**40. அறிந்தடங்கி நிற்குமிந் நாடிக டோறுஞ்
செறிந்தடங்கி நிற்குஞ் சிவம்.**

(இ - ள்.) அறிந்து - பூரணநிலை அறிந்து, அடங்கி - சரீரபந்தத்துட் கட்டுப்பட்டு, இந்நாடிகள் தோறும் - எல்லா நாடிகளுள்ளும், செறிந்து - மிக்குநெருங்கி, அடங்கி - வெளிக்குக் காண முடியாதவாறு, சிவம் நிற்கும் - கடவுள் நிலைபெற்றிருக்கின்றார் எ - று.

மேல் பிராணவாயுவின் இயக்கத்தாலும், நாடிகளின் இயக்கத்தாலும் ஈசனைக் காணலாம் என்றவர் அவ்வீசுரநிலை எவ்வாறு தங்கியுளதென்பதை விளக்குகின்றார்.

ஈசுரன் சூக்கும நிலையிலுள்ள அறிவொடு கலந்து நாடிகள் ஒவ்வொன்றிலும் இலைமறை காய்போல மறைந்தும் தோன்றியும் விளங்குகின்றார்; அத்தத்துவத்தையும் நாடிகள் நிலையையும் உணர்ந்து அவற்றுள் மூலாக்கினியைப் பொருத்தவும் ஈசுரநிலை தெற்றெனை விளங்கும் என்றபடி, நாடிகள் ஒவ்வொன்றும் தத்தமது நிலையில் ஈசுரவொற்றுமை காட்டியும்,

அறியாதார்க்குக் காணலாகாதபடியும் தோன்றுவது விளக்க, அறிந்து அடங்கிநிற்கும் நாடிகள் என்றார். ஈசுரன் அடங்குதலாவது, பிறரால் அறியாதபடி மறைந்திருத்தல். இவ்விதம் ஒவ்வோரான்மாவிலும், ஆன்மாவின் தூல சூக்கும சரீரங்களிலும் ஈசுரன் பொருந்தியிருப்பதை உணர்த்தவே,

> "இருகைதான் குவிக்க வெனின்
> நாணு மென் னுள நிற்றி"

எனத் தாயுமானவரும் செப்பினார்.

# ஐந்தாம் அதிகாரம்

## வாயுதாரணை

இது, மேல் அத்தியாயத்தில் நாடிகளைத் தரிக்கும் முறை கூறினர்; இவ்வதிகாரத்தில், அந்நாடிகளை இயக்குகின்ற வாயுவைத் தரிக்கும் வழியைக் கூறுகின்றார். வாயுவைத் தரித்தலாவது உட்கொள்ளுதல், உள்ளடக்குதல், வெளிப்படுத்தல் என்னும் உபாயங்களாம்.

**41.** மூலத்திற் றோன்றி முடியிலிரு நான்காகிக்
கால்வெளியிற் பன்னிரண்டாங் காண்.

(இ - ள்.) கால் - நாம் உட் சுவாசிக்கும் காற்று, மூலத்தில் தோன்றி - வாயுக்கு மூலமாகிய சுவாதிட்டானத்திற் பிறந்து, முடியில் - சிரம்நோக்கிச் செல்லும்பொழுது, இருநான்காகி - எட்டு அங்குலம் ஆகவும், வெளியில் - அங்கு நின்றும் வெளியாகும்பொழுது, பன்னிரண்டு ஆம் - பன்னிரண்டு அங்குலத்துச் சுவாசம் ஆகவும், காண் - அமையும் இதனைக் கண்டு அறிக எ - று.

மூலம் என்றது ஈண்டு மூலாதாரம் என்று கொள்ளாமல், எல்லா ஓசைக்கும், வாயுவுக்கும் பிறப்பிடமாகிய சுவாதிட்டானம் என்னும் உந்திப் பிரதேசத்தைக் கொள்ளப்பட்டது. நாம் உட்சுவாசிக்கும் வாயு மூலாதாரம் வரையில் செல்லு மியல்பினது எனினும் சுவாதிட்டானமே வாயுவுக்கு

மூலமென ஆன்றோராற் கொள்ளப்பட்டது. இவ்வாயு, மேற் கூறப்படும் அக்கினியின் வெப்பத்தால் ஆறு ஆதாரங்களையும் கடந்து சிரசின் பிரதேசத்திற் புகும்பொழுது எட்டங்குல வேகமாகவும், அங்கு நின்றும் நாசிவழியே மீண்டு வெளிப் படும்பொழுது பனிரண்டு அங்குல வேகமாகவும் பொருந்து கின்றதெனக் கொள்க. சாமானியருக்கு ஆறுதாரங்களிலும் செல்லாது நாசி வழியே சென்று அவ்வழியே மீள்கின்றது.

இயல்பாகிய மானிடர் அனைவரும் பனிரண்டு அங்குலத் துக்கு மேற்பட்ட சுவாசம் விடுதல் இல்லை: அவ்விதம் இருப் பின் அடக்கவேண்டும் என்பது இதனல் விளங்கும். அன்றியும் முத்திநிலை அடையவேண்டியவர்கள் சரீரத்து உட்பகுதியிற் சஞ்சரிக்கும் எட்டங்குல அளவைக்குள் வெளிச்சுவாசத்தையும் அடக்கவேண்டியதும் ஆம். இது பிராணயாம முதலிய பயிற்சியாலும் குருமுக மூலமாகவும் அன்றிச் சாதனைபெறுதல் இயலாது.

'முடிவில்' என்ற பாடம் கொண்டு கடைசியில் என்று உரை கூறுவர்: இதனற் பெறும் விசேஷப்பொருள் இன்மை அறிக.

**42. மயிர்க்கால் வழியெல்லா மாய்கின்ற வாயு**
**வுயிர்ப்பின்றி யுள்ளே பரந்து.**

(இ - ள்.) மயிர்க்கால் வழி எல்லாம் - தேகத்தின் ஒவ் வோர் அணுவின் வழியில் எல்லாம், ஆய்கின்ற வாயு -

ஊடுருவிச் சென்று சோதனைசெய்வது போன்ற (சுவாசிக்கும்) வாயு, உயிர்ப்பு இன்றி - வெளிச்சுவாசம் செய்வது இல்லாமல், உள்ளே - உள்ளிடத்திலேயே, பார்த்து - தம்பனம் செய்யப்பெற்றுப் பரவுதல் வேண்டும் எ - று.

இது சுவாசத்தின் பொதுவிலக்கணம் கூறியது.

நாம் சுவாசிக்கும்பொழுது ஒவ்வொரு வேளையிலும் இடது நாசியாலும், மற்றொருபொழுதில் வலது நாசியாலும், வேறொரு பொழுதில் இருநாசியாலும் காற்று உட் செல்வதும் வருவதும் காண்கின்றோம். இடது நாசியால் உயிர்ப்பதற்கு இடைகலை என்றும், வலப்புறம் சுவாசிப்பதற்குப் பிங்கலை என்றும், இருபுறத்தும் உயிர்ப்பதற்குச் சுழுமுனை என்றும் கூறுவர். இவற்றுக்கு முறையே சூரியன், சந்திரன் அக்கினி அதிபதிகள் ஆவர்.

இனிச் சுவாசித்தலும் மூவகைப்படும். காற்றினை உள் இழுப்பதற்குப் பூரகம் என்றும், அப்படி உட்கொண்டதைத் தம்பனம்செய்து அடக்கிவைப்பதற்குக் கும்பகம் என்றும், பின்னர் அதை வெளிப்படுத்துவதற்கு இரேசகம் என்றும் பெயர் ஆம். இத்தொழிலுக்கு முறையே பிரமாவும், விஷ்ணுவும், சிவபிரானும் அதிபதிகளாவர்.

உட் சுவாசிக்கும் காற்றினை உள்ளிடத்தில் அடக்கிக் குண்டலிப் பிரதேசத்தில் நிறுத்திப் பின்னர் வெளிப்படுத்த வேண்டும் என்பதே இக்குறளின் கருத்து. பூரகம் செய்யும்

காற்றானது தேகமுழுவதும் ஆராய்ந்து செல்வதுபோல் பரவச் செய்ய வேண்டும் என்றும் அப்படிப் பரவுவதை உடனே நிச்சுவாசம் செய்யாமல் கும்பகம் செய்ய வேண்டும் என்றும் அதன்பின்னரே அதை இரேசிக்கவேண்டும் என்றும் கூறியபடி. சரீரமுழுவதும் மூடியிருப்பது தோல் எனினும், அதற்கு வெளிப்போக்கு (வழி) என்னும்படி அமைந்திருப்பன உரோமங்கள் ஆகலின் மயிர்க்கால் வழியிலும் ஆராய்ந்து என்று உரைத்தார். 'ஆய்ந்து' என்று பிரிக்காமல் மாய்ந்து என்று பிரித்து விபரீதப் பொருள் கூறுவர்.

'பரந்து' என்பதற்குப் 'பதி' என்றும் பாடம், சிறப்பில்லை.

## 43. இரேசித்து நிற்பதுபோற் பூரித்து நிற்கத் தராசுமுனை நாக்கது வே.

(இ - ள்.) இரேசிப்பதுபோல்-காற்றினை வெளிப்படுத்துவதுபோல, பூரித்து - ஆரம்பத்தில் உட்சுவாசித்து, நிற்க - கும்பகம்செய்து நிறுத்த, தராசு முனை நாக்கு அதுவே - தராசின் தாலம் என்கின்ற நடுநிலை ஆகும் எ - று.

பூரகத்தால் உட் சுவாசிக்கும் காற்றினை இரேசகத்தால் வெளியிடுதல் ஒரு மூச்சு ஆகும்.

பூரகம்செய்து பின்னர் இரேசகம் செய்வதுடன் ஒரு மூச்சு அதற்கடுத்தபடி உட்கொள்ளும் பூரகத்துக்கும் முந்திய இரேசகத்துக்கும் இயல்பு காட்டுகின்றது. எவ்விதம் வெளிச்

சுவாசத்தை அடக்கி விடுகின்றோமோ அதே அளவில் உட்சுவாசமும் செய்யவேண்டும் என்றபடி.

இப்பழக்கம் பிராணயாமம் என்னும் உயர் நிலைக்கு வழிகாட்டியாகும். இதன் பயன் அறிவு விசாலமும், அறிவின் முடிவாகிய ஈசுர சித்தியும் ஆதலின் அறிவு என்னும் நடுநிலையைக் காட்டும் என்று கூறினார். தராசு என்னும் கருவி உயர்வு தாழ்வு என்னும் இரண்டையும் சமப்படுத்துவதும் அப்படிச் சமப்படுத்துவதால் நடுநிலையாகிய முள்மேல் நோக்கிக் காட்டுவதும் காண்கின்றோம். அதுபோலவே இரேசகமும் பூரகமும் ஒரே தன்மையனவாய், அளவினும் காலநீட்சியிலும் (சுவாசிப்பதற்கு வேண்டிய கால அளவிலும்) ஒன்றுக்கொன்று அதிகப்படாமற் பழக்கி வந்தால், நடுநிலையாகிய அறிவும், அறிவின் முடிவிலுள்ள அறிவனும் (ஈசன்) • புலப்படும் என்பது விளங்குகின்றது. இக்கருத்துப் பற்றியே,

"நாவின் நுனியின் நடுவே சிவிறிடின்
சீவனு மங்கே சிவனு முறைவிடம்
மூவரு முப்பத்து மூவருந் தோன்றுவர்
சாவது மில்லை சதகோடி யூனே"

எனத் திருமந்திரத்திலும் கூறினார்.

'இரேசிப்பது போல' என்றும் பாடம்.

'நிற்கின்' என்ற பாடம் ஐயத்தைக்காட்டிச் செய்வது முடியாது என்று தொனித்தலால் விலக்கப்பட்டது.

**44. கும்பகத்தி னுள்ளே குறித்தரனைத் தானோக்கிற்**
**றும்பிபோ னிற்குந் தொடர்ந்து.**

(இ - ள்.) அரனைக் குறித்து - ஈஸ்வரனைச் சிந்தனை செய்து, கும்பகத்தினுள்ளே - கும்பகம் செய்த நிலையில், தானே நோக்கின் - வாயுவைத் தம்பனம் செய்து யோகஞ் செய்யுங்கால், தொடர்ந்து - அந்நிலையில் எவ்விதம் கருதுகின்றோமோ அவ்விதமே, தும்பிபோல் - யானையைப்போல் அசைதலின்றி, நிற்கும் - நின்று காட்சிகொடுக்கும் எ - று.

இது, கும்பகம் செய்வதன் பயனுரைத்தபடி.

வாயுத்தம்பனம், கழைக்கூத்தாடிமுதல் பலரும் செய்து பலப்பல வகைப்பட்ட பலனைக் காண்கின்றார்கள். ஆனால் யோகநிலையை அவரவர் தாம் கருதிய இலக்கியத்தையும் மறக்காமற் கும்பிக்கவேண்டும் என்று வலியுறுத்தவும், அவ்விதம் செய்வது கஷ்டசாத்தியம் என்பது விளக்கவும் 'அரனைக்குறித்து' என்றும் "நோக்கின்" என்றும் உரைத்தார். அவ்விதம் செய்ய, கடவுள், "பக்திவலையிற் படுவோன்" ஆதலின், கீதையில் உரைத்தாங்கு,

"எத்தேயத் தெவ்வண்ணத தெவ்வுருவின்
என்னை ஆய்ந்தோர்
அத்தேயத் தவ்வண்ணத் தவ்வுருவின்
அவர்நே ராவன்"

என்று அவரவர் நினைவுக்கு ஏற்ப ஈசன் காட்சி யளிக்கின்றான்.

கடவுள், அண்ட பிண்ட சர அசராங்களைக் கடந்த உன்னத பதவியினராதலின், அவர் கேவலமான மானிடனது வாயுநிலையில் தோன்றுவது இயலுமோ என ஐயம் கொள் வார்க்கு விளக்க, உருவினும் திருவினும் குணத்தினும் மிக வுயர்ந்த யானை, பாகனுக்கு அடங்கி அவன் ஏவுதல் அனைத் திற்கும் இணங்குமாறு என்று தும்பிபோல் என்ற உவமை காட்டினார். தும்பி - யானை. யானை வெகுண்டாற் பாகனை யும் மதிக்காது ஆதலின் பாகன் எப்பொழுதும் அதன்மாட்டு அன்பும், அச்சமும் பாராட்ட வேண்டியவனாகின்றான்: அங்க னமே சுவாசசித்தி பெற்றவனும் அத்துடன் அமையாது மேலும் மேலும் அந்நிலையினின்றும் வழுவாது அதனையே பயிற்றவேண்டும் என்பதையும் அவ்வுவமை முகத்தான் வலி யுறுத்தார்.

இனித் தும்பி என்பதற்குக் கரும்பு என்னும் உண்டு கழிக்கும் வஸ்துவைப் பொருளாகக் கூறுவாரும் உளர். 'குறையாமல் தான் நோக்கி' என்றும் பாடம்.

## 45. இரேசக பூரக கும்பக மாற்றின் றராசுபோ னிற்குந் தலை.

(இ - ள்.) இரேசகம் - உட்சுவாசித்தலும், பூரகம் - வெளிச் சுவாசித்தலும், கும்பகம் - இவற்றுக் கிடையில் வாயுத்தம்பனம் செய்வதும் ஆகிய இம்மூன்றையும், ஆற்றில் - செய்யவேண்டிய வழியிற் செய்துவரின், தலை - தலைவனாகிய ஈசன் (குண்டலிபுருடன்), தராசுபோல் நிற்கும் - தராசின் முனைமேல் நிற்பதுபோலவே அமைந்திருப்பான்.

இதுவும் மேற்குறளின் கருத்தை விளக்கியது.

இரேசக, பூரக, கும்பகம் என்பவை முன்னர் விளக்கப் பட்டன. இவற்றை முறைபடச் செய்வதாவது, மேல் 'யோகநிலை'யிற் கூறப்போகும் அளவைகளை அனுசரித்தல். இன்னின்ன நாட்களில் இன்னின்ன நாழிகையில், இடகலையி லும், பிங்கலையிலும், சுழுமுனையிலும் இரேசகம் செய்தலும், பூரகம் செய்தலும் என்ற விதிகள் உள்ளன. அவை ஆன் றோர் வாக்கான் குருமுகமாய் அறியக்கிடந்தது.

இடைகலை யிரேசகமும், பிங்கலைப் பூரகமும், சுழிமுனைக் கும்பகமும் இவை மாறியும் இவ்வண்ணம் எல்லாம் விதி தவ றாது பழக்குவார்க்கு ஈசன் காட்சி கிடைக்கும் என்றபடி.

தலை - தலைவன்.

இவ்விதம் பழகுவதில் மற்றொரு பலனும் உண்டு. இடகலைக்குக் கலை பதினாறு. பிங்கலைக்குப் பனிரெண்டு. தம்பனத்தால் இவை சமம் ஆகி அறிவு பெருகுகின்றது. இவை விரிக்கிற் பெருகும் ஆதலின் பரந்த நூலுட் கண்டு கொள்க.

## 46. இடைபிங் கலைக ளிரேசக மத்தி *லடைய லவன்றுளே யாம்.

(இ - ள்.) இடைபிங்கலைகள் - இடைகலையும் பிங்கலையும், இரேசகமத்தில் - மாறிமாறி வெளிச்சுவாசித்தால், அடைய -

* 'மாற்றின் அடையும் அரனார் அருள்' என்றும் பாடம்.

பொருத்தமாவதால், அவன்றாளை - ஈசனது பாதமே, ஆம் - சித்திக்கப் பெறுவதாம் எ - று.

இடைகலையில் உட்சுவாசிக்கும் காற்று பிங்கலையால் மாத்திரையளவில் அடக்கி வெளியாக்குவதும், பிங்கலையாகச் சுவாசித்தலை மாற்றி யிடைகலையால் சுவாசித்தலும் ஆகிய முறைகளை அனுட்டானம் செய்வது அவசியம்: எனினும், அவ்விதம் செய்வது அருமை என்றும், செய்துமுடிப்பின் பெறுகின்ற பயன் ஈசனது திருவடியே என்றும் விளக்கினார்.

பிராணாயாம விதிமுறையிற் கலைகளை ஒத்த அளவிற் பழக்குவதும், இட, வல சார்பாக மாற்றுவதும் அமையும் என்க.

## 47. அங்குறியான் முட்டி முறையா லிரேசிக்கப் பொங்குமாம் பூரகத்தி னுள்.

(இ - ள்.) அம்குறியான் - குறிப்பிட்ட வழியினால், முட்டி - மூலாக்கினியைத் தாக்கி, முறையால் - இடைகலையாலும் பிங்கலையாலும், இரேசிக்க - நிச்சுவாசம் செய்ய, பூரகத்தின் - உட்சுவாசமாகிய பிரணவத்தின், உள் - உட்கோடு ஆகிய ஆனந்தம், பொங்கும் - பெருகும் எ - று.

இது வேறொரு சாதனையைக் குறித்தது.

இடைகலை பிங்கலைகள் இவை என்பன முன்னரே கூறப்பட்டன. தேகத்தினுட் சஞ்சரிக்கும் காற்று உபானன் என்

றும் அபானன் என்றும் இருவகைப்படும். உட்கொள்ளும் காற்று உபானன்: இது நாபிக் கமலமாகிய குண்டலியிற் சஞ்சரித்து மேல்நோக்கும் தன்மையது; அதுவே கீழ்நோக்கிச் செல்வதும், கீழிடமிருந்து இடச்சார்பும் வலச்சார்பும் மாறி எழுவன அபானன் என்பது. இவ்வாயு, பிங்கலையாகவும் இடைகலையாகவும் சுழுமுனையாகவும் சஞ்சரிக்கும் இயல்பை வல்லார் வாயானும் குருமுகத்தானும் அறியவேண்டிய விஷயங்கள் ஆகும்.

இனி இடைகலையானது சுழுமுனையிலும், பிங்கலையிலும் குறியிட்டு மாற்றுவதும், சுழுமுனையும், பிங்கலையும் முறையே மற்றையிரண்டு வகையாக மாற்றுவதும், பிராணாயாம வகையாகும்; அத் தந்திரத்தையே இக்குறளிற் குறிப்பிட்டார். குண்டலியினின்றும் எழூஉம் உபானன் மேல்நோக்கிச் செல்லும்போது, சிரசில் தம்பகமாகி விடுகின்றது. அதனையே கபாலக்கும்பகம் என்பது. அவ்விதம் தம்பித்த வாயு வெளிப்படும் நிலையில், சத்தையும் சித்தையும் உள்ளடக்கி ஆனந்த வெள்ளத்தைப் பெருக்குகின்றது. இந்த நிலையையே சச்சிதானந்த நிலை என்று உணர்க. இதனைக் கண்டவர் ஈசனைக் கண்டவர் என்று கூறினார்.

முட்டுதல் எனவே கபாலத்தைத் தாக்கியது கொள்க. பூரகம் இல்லாது கும்பகமும் இரேசகமும் இல்லை, ஆதலால் இவற்றின் பயனாகிய ஆனந்தநிலையும் அதனுள் அடங்கியது என்பது காட்ட பூரகத்தினுள் என்றார். இக்குறளை "அங்

குவியான்மூடி முறையாலிரேசிக்கின்" எனப் பாடங்கொண்டு விரல்களைக்கொண்டு சுவாசகதியை மாற்றும் பிராணுயாமத் தின் ஒரு குணத்தைமட்டில் உரைத்தார். ஆகையால் அப் பாடம் அவ்வளவு சிறப்பின்மை காண்க.

'பூதலத்தினுள்' எனவும் ஒரு பிரதியிற் காணப்பெறு கிறது. இதற்கு விசேஷப்பொருள் இல்லை.

**48. வாயு வழக்க மறிந்து செறிந் தடங்கி லாயுட் பெருக்கமுண் டாம்.**

(இ - ள்.) வாயு வழக்கம் அறிந்து - உபானன், அபா னன் என்ற வாயு வேற்றுமையும் அவற்றின் இயல்பையும் நன்கு உணர்ந்து, செறிந்து - மணிபூரகம் என்னும் மூலா தாரத்தில் பொருத்து, அடங்கி - அவ்வாயு அடங்கியிருப்பின் (கும்பக நிலையில்), ஆயுட் பெருக்கம் உண்டாம் - சரீரத்தின் ஆயுளே அல்லாமல், ஆன்மாவின் பரிபக்குவ நிலையாகிய ஆயுளும் வளரும் எ - று.

இது சரீரத்தின் அநித்திய நிலையை ஒழிக்கும் வழியும் ஆன்மாவை உயர்த்தும் நெறியும் கூறியது.

பூரகம் செய்யும் காற்று உபானனை மூலாதாரத்தில் நிற்க அறிவை அகற்றும் என்று முன்னர் உரைத்தவர், அந் நிலையில் இருக்க, ஐம்பூதங்களின் இயக்கத்தால் அமைந்த உடலும் அழிதலில்லாமல் வியாதிகள் ஒழிந்து நீடித்திருக் கும் என்றும் உரைத்தார். அதனுல் அவ்வுடலில் பொருந்திய

பசுவும், பாசம் விலக்கும் பக்குவம் அறிந்துகொள்ளும் நிலையை அடையும் எனக் குறிப்பால் உணர்த்தினர் என்க. அது கூறவே, பசு என்னும் ஆன்மா மேல்நிலை எய்துகின்றது என்பது கூறாமலே விளங்கும்.

## 49. எண்ணிலி யூழி யுடம்பா யிரேசிக்கி லுண்ணிலைமை பெற்ற துணர்வு.

(இ - ள்.) எண் இலி ஊழி - கணக்கு எல்லையில்லாத ஊழிக்காலத்தை, உடம்பு ஆய் - நமது தூல சரீரம் என்று கருதி, இரேசிக்கின் - நித்தவாசம் செய்தால், உண் நிலைமை - உள் குண்டலி மண்டலத்தில், உணர்வு பெற்றது - உணர்வு என்னும் அறிநிலை நிலைபெற்றது எ - று.

இது கற்பாந்த காலத்தையும், கடந்த எல்லையையும், அதைக் கடக்கும் வழியையும் காட்டியது.

உடம்பினுள் ஈசன் அடக்கம் என்பது இவ்வாசிரியர் கருத்து என்பதை "ஈசனைக் காட்டும் உடம்பு"(குறள்–17.) என்றும், "உடம்பின் பயனெல்லாம், முன்னேனைக் காட்டி விடும்" (குறள்–20.) என்றும், முன்னர் உரைத்தமையாற் காண்க. அவ்வுடம்பில் அடங்கிய மூலாதாரத்தில் மூச்சு அடங்கிச் சமாதிநிலை எய்துவதால் காலத்தையும் கடந்து, அறிவாகிய கடவுள் நிலையைக் காணலாம்என்றூர். அதனையே உள்நிலைமை எனக் குறிப்பிட்டார்.

**50. போகின்ற வாயு பொருந்திற் சிவமுள்ளே
யேகின்ற வாய்வுசத்தி யெண்.**

(இ - ள்.) போகின்ற வாய்வு - இரேசிக்கின்ற காற்று, பொருந்தின் - குண்டலியில் இருத்தவேண்டிய முறைப்படி நிறுத்தினால், சிவம் - சிவயோக நிலையாகும், உள்ளே ஏகின்ற வாய்வு - அன்றி உட்சுவாசிக்கும் காற்று, சத்தி - பராசத்தியாகும், எண் - இதனை ஆராய்ந்து அறிக எ - று.

இது கடவுட்டன்மை நம்முள் அடங்கியிருக்கும் தத்துவத்தை உரைத்தது. மேல 'எண்ணிலி யூழி' என்ற குறட்கு உரைத்தவற்றை யெல்லாம் கொள்க.

கிரியாசத்தியே பராசத்தியாதலாலும், உள்ளே புகும் காற்றே மேல் இயக்குதற்கு ஆதாரவு ஆதலாலும், பரா, சத்திக்கு உவமையாகப் பொருந்தியது. மாயையை அழித்து ஆனந்தத்தை உபானன் மேல்நோக்கி இரேசிகும் நிலையில் காட்டுவதால், சதாசிவத்தன்மையை உணர்த்திற்று. உள்ளிடமாகிய மணிபூரகமே, ஈசன் அமரும் பீடமாதலின், அதனிடத்திலேயே உட்புகும் காற்று பராசத்தியாகவும், வெளி வரும்போது சிவசொரூபமாகவும் அமைந்து, சிவனும் சத்தியும் ஒரே இடத்தில் பொருந்தியிருப்பதும் அறிக. ஈசன் உள்ளிடத்துப் பொருந்தியிருப்பது:

"சாத்திர மோதும் சதுர்களை விட்டுநீர்
மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்

பார்த்தவிப் பார்வை பசுமரத் தாணிபோ
லார்த்த பிறவி யகலவிட் டோடுமே.''

என்று திருமூலர் வாக்கானும் அறிக.

ஓர் ஏட்டின் பிரதியில், இவ்வதிகாரத்தில், இரண்டு குறள் அதிகமாகக் காணப்படுகின்றன. அவை சிதைந்தும், அதிகாரத்துக்குப் பொருந்தாமலும் இருந்ததால் விலக்கப் பட்டன. வாசகர்கள் அறியும்பொருட்டு ஈண்டு அவற்றைக் குறிப்பிடுகின்றோம்.

'பிராணு யாமங்கள் பூரகத்திற் றோன்றும்
பிராணுயா மாகப் பெறின்.'

'ஓங்கென் றெழுந்தே யுச்சியி லங் கென்றமுட்டிச்
சிங்கெனச் சேருவது மூலம்'

என்பன.

---

# ஆறும் அதிகாரம்

## அங்கி தாரணை

முன் அதிகாரத்தில், நாடியை இயக்கும் வாயுவின் இயல்பு கூறினர். இவ்வதிகாரத்தில், வாயுவுக்கும், நாடிக்கும் மூலாதாரமாகிய அக்கினியின் தன்மை கூறுகின்றார். அக்கினி அனல். அக்கினி என்னும் வடசொல், வன்னி என்றும் அங்கி என்றும் மருவிற்று.

அக்கினி மூவகைப்படும்: சூரியன், சந்திரன், நெருப்பு என்பன. சூரியனுடைய ஒளியின் தன்மையால் சந்திரனும், நெருப்பும் உண்டாகின்றன என்பது பிரசித்தம். தீ என்னும் இவ்வொன்றே உலகத்தை முற்றிலும் வியாபித்திருக்கின்றது. இக்கருத்துப் பற்றியே மகேசுரனைச் 'செந்தீவண்ணன்' என்றும்,

"எத்திசைக்கும் எவ்வுயிர்க்கும் எங்களெப்ப னெம்பிரான்
முத்தியான வித்துளே முளைத்தெழுந்த வச்சுடர்"

என்றும் பெரியோர் உரைத்திருக்கின்றனர்.

**51. அந்தரத் திலங்கு மழல்போலத் தானேக்கிற்
பந்த மலமறுக்க லாம்.**

(இ - ள்.) அந்தரத்து - ஆகாயத்தில், இலங்கும் அழல் போல - விளங்கும் நெருப்புச் சுடரான சூரியனைப் போல,

தானேக்கின் - ஓர் ஆன்மா தன் மூலாக்கினியையும் இயங்கச் செய்தால், பந்தம் - பிறப்பு இறப்பு என்றும் பாசங்களைத் தரும், மலம் அறுக்கலாம் - மும்மலங்களேயும் ஒழிக்கலாம் எ - று.

அழல் - சூரியன். சூரியனது வெப்பத்தால் அவன் வியாபித்திருப்பது அறியமுடியுமே அன்றி கண்ணுற் காணவும், அணுகவும் முடியாது; என்றாலும் அவனது தோற்றத்தால் உலக வளர்ச்சியும், அழிவும் உண்டாகின்றது. எனவே, உலகத்திற் காணப்பெறும் பொருள் யாவற்றுக்கும் அதிபதி சூரியனென்றும், அவனே வினைக் கடவுளர் அங்கமாகவும் விளங்குகின்றான் என்பதும் கூறுமேலே விளங்கும். இது பற்றியே வால்மீகியார்,

* "ஏஷ ப்ரஹ்மா ச விஷ்ணுஸ்ச, சிவஸ்கந்த : ப்ராஜாபதி :
மஹேந்த்ரோ தநத : காலோ யமஸ்ஸோமோ ஹ்யபாம் பதி :"

என உரைத்தனர்.

இத்தகைய இயல்பும் வன்மையும் வாய்ந்ததே நம்முள் எழும் மூலாக்கினி. இது மணிபூரகம் என்னும் தலத்தில்

---

* வால்மீகி—யுத்த—ஆதித்ய ஹ்ருதய சர்க்கம். "அவர் (சூரிய பகவான்), பிரமாவாகவும், விஷ்ணுவாகவும், பரமசிவனுகவும், கந்தப் பெருமானுகவும், பிரமாவுக்குட்பட்டு ஜீவகோடிகளை யுண்டாக்கும் பிரஜாபதிகளாகவும், தேவேந்திரனுகவும், குபேரனுகவும், காலபுருஷனுகவும், யமபகவானுகவும், சந்திரனுகவும், ஒளிப்பிழம்புக் கதிபதியாகவும் விளங்குகின்றார்."

எழுகின்ற வாயுவினால் உண்டாகும் சக்தி என்பர். உடலில் உயிர்பிரியும்வரை பொருந்தியிருந்து உடலை இயக்கும் வலிமை யுடைய உஷ்ணம் என்னும் சூட்டினையே சாதாரணமாக மூலாக்கினி என்கின்றோம். இச்சக்தியை அடக்கி வாயுவைப் போல் இயங்கச் செய்வதால், சூரியனால் உலகம் அடையும் நன்மைகளை இச்சரீரமும் ஆன்மாவும் அடையும் என்ற உட் கருத்துக்கொண்டே சூரியனுக்கு உவமை கூறினார். அவ்விதம் பயன்படுத்திக் கொள்வதால், உலகபந்தம் அறுவதுடன், ஜனனமரணம் என்னும் வினையும் அழியும் என்றார். அறுக்க லாம் என்றதால், இதனுடன் ஏனைச்சாதனங்களும் வேண்டும் என்று குறிப்பிட்டார்.

'அழல்போலத் தான் நோக்கின்' என்றதால் சூரியன் பகற்பொழுதின் மட்டும் விளங்கி இரவின் மறைவதுபோல், ஈசுரத்தியானத்தின்மட்டும் ஈடுபட்டு ஏனை விடயத்துக்கு இவ்வெப்பம் அடங்கியிருத்தல் அவசியம் என்று குறிப்பிட் டார். இதனை விரிப்பிற் பெருகும்.

இனி, அந்தரமாகிய மூலாக்கினி முடிவில் உள்ள ஜோதி என்னும் அழல்போல் என உரைக்கினும் பொருந்தும்.

பந்தம் - ஆசை முதலியவற்றால் உலக விஷயங்களில் உண்டாகும் பற்று. மலம் - மும்மலம், ஆணவம், மாயை, காமியம் என்பன: இவை பசு என்னும் ஆன்மாவின் மலம் (கழிவு) ஆதலாலும், சாணத்தை வைராக்கியம் என்னும்

தீயில் இட்டால், சாம்பராகி விபூதிநிலை அடையப்பெறும் என்பது உட்கருத்து.

பந்தமும், பந்தத்தாற் பாசமும், இவை இரண்டாலும் பிறப்பும், பிறப்பினுல் இறப்பும் ஜீவான்மா அடைகின்றது என்றும் அவற்றை ஒழிப்பதே தத்துவம் என்பது கொள்கை பற்றி 'பந்த மல மறுக்கும்' என்றார். பந்தம் என்னும் பற்று, பிறப்புக்கு வித்து என்பதைப்,

"பிறந்தோ ருறுவது பெருகிய துன்பம்
பிறவா ருறுவது பெரும்பே ரின்பம்
பற்றின் வருவது முன்னது; பின்னது
அற்றோர் உறுவ தறிக" (மணிமேகலை.)

என்றதனுலும் அறிக.

"அந்தத்தில் அங்கி அழல்போல்" என்ற பாடமும் கொண்டு, அங்கி - அக்கினி, அழல் - சுவாலை என வேறு படுத்திப் பொருள் கூறுவர்: அவ்வுரை சிறப்பாயில்லாத துணர்க.

**52. எரியுந் * தழல்போல வுள்ளுற நோக்கி**
**‡ லரியு மழலுருவ மாம்.**

(இ - ள்.) எரியும் தழல்போல் - எரிகின்ற சூரியாக்கினி போல, உள் உற நோக்கில் - குண்டலினிலையைப் பார்க்கவும்,

* கழல்போல். ‡ கரியுங்கனல்.

அரியும் - மகாவிஷ்ணுவின் உருவாகிய அக் குண்டலியும், அழல் உருவம் ஆம் - அழலின் வடிவாகிய சிவபெருமான் தோற்றமே ஆகும்.

இது சாதனையால் குண்டலியில் வாயுவொடு அக்கினியில் அடக்குவதன் பயன் உரைத்தது.

குண்டலியே மூலாதாரமும், அதில் அடங்கும் காற்றும், கனலும், யோகநிலைக்கு அறிகுறியென்பதும் அறிந்தோம். சூரியன் உலகத்தில் வியாபித்துப் பலபொருட்கும் காரண காரிய அதிகாரி ஆவது முன் குறளிற் கண்டோம்; அச் சூரியனை ஒருபொருளில் விளங்கும்போது அப்பொருளின் தன்மையையும் ஒண்மையையும் மாற்றி, தன் தன்மையையே அதன்மேல் பொருத்துவதுபோல், மூலாதாரத்தில் மூலாக்கினி அடைபடும்போது, அவ்வக்கினியின் றன்மையே அதிற் பொருந்தி, அதனைத் தன் சொரூபமாக்குகின்றது. மூலாக்கினி சிவபிரானது அங்கமாதலின் அச்சாதனம் செய்வதால் அம்மங்கைபாகனது உருவத்தையே குண்டலி அடைகிறது என்று உரைத்தார்.

குண்டலி, தேகத்திற்கும், வாயு அனல் போக்குக்கும் பீடமாகி யிருப்பதால், உலகத்துக்கும், மற்றைய பூதங்கட்கும் பொதுயிடமாகிய உதரத்தையுடைய மகாவிஷ்ணுவை உவமை கூறப்பெற்றது. இனி விஷ்ணு அங்கத்தில் அடைபடும் வாயுவும், அனலும், சிவபெருமான் அங்கமாக மாறுகின்றதென்றும், அதனால் வைணவ சைவ வேற்றுமை விலக்

கற்பாலதென்றும் குறிப்பாக உரைத்த அருமையினையும் நோக்குக. இதனை அறியாது 'கரியும் கனல் உருவம்' எனப் பாடங் கொள்வது சிறப்பில்லை.

**53. உள்ளங்கி தன்னை யொருங்கக் கொழுவூறில்**
**வெள்ளங்கி தானும் விரைந்து.**

(இ - ள்.) உள் அங்கிதன்னை - உள்ளே சுவாதிட்டானத்தில் அடங்கிய அக்கினிச்சுவாலையை, கொழுபொருந்த - சுழுமுனையாகிய நாளத்திற் பொருந்தும்படி, ஊறிய - பாய்ச்ச, விரைந்து - அதிவிரைவில், வெள் அங்கி தான் ஆம் - வெண்மையான சந்திரகலையாக மாறும் எ - று.

அக்கினி கண்டமாகிய சுவாதிட்டானத்தில் எழுகின்ற அக்கினிச்சுவாலை மேல்நோக்குகின்ற காலத்து, சுழுமுனையாகிய வாயிலாக அனுகதம் முதலிய ஆதாரங்களைக் கடந்து ஆக்கினையை அடையப்பெற்றால் ஆங்கு எழுகின்ற சந்திர கலையுடன் ஒன்றுபட்டு அச்சந்திர கலையாகவே மாறும் என்றார்.

இக்கருத்தினையே திருமூலர்,

"சாற்றிய விந்து சயமாகுஞ் சத்தியால்
ஏற்றிய மூலத் தழலை யெழமூட்டி
நாற்றிசை யோடா நடுநாடி நாதத்தோ
டாற்றி யமுத மருந்தவிந் தாமே."

என அழகுடன் விளக்கியிருக்கின்றார்.

இஃது அனுபவத்தினாற் சித்தி பெறுத லாதலின், குரு முகமாய்ப் பயின்று அறிதல் அன்றிக் கூறுத லியலாது.

**54. உந்தியி னுள்ளே யொடுங்கச் சுடர்பாய்ச்சி லந்தி யழலுருவ மாம்.**

(இ - ள்.) உந்தியின் உள்ளே - உந்திக் கமலத் தருகி லுள்ள மணிபூரகத்தில், ஒடுங்க - மிகவும் பொருந்த, சுடர் பாய்ச்சில் - மேற்கூறிய மூலாக்கினியைப் புகச்செய்தால், அந்தி அழல் உருவம் ஆம் - அந்திக்காலத்து எழுகின்ற சந் திரன் என்னும் நெருப்பின் வடிவமும் தன்மையும் பெற்ற தாம் எ - று.

இதுவும் அது. மேல் நோக்குகின்ற மூலாக்கினி, கீழே மணிபூரகத்தையும், அதன்கீழ் மூலாதாரத்தையும் அடைந் தக்கால், அப்பொழுதும் சந்திரகலையை அடையுமென்றபடி. இதற்கும் மேல் உரைத்ததற்கும் என்ன வேற்றுமையோ எனின் மூலாக்கினி சுவாதிட்டானம் அநாகதம் அடையும் சாதனை நேர்மையும் எளிமையும் ஆம். அவ்வக்கினி கீழ் நோக்குதல் கடினம் ஆதலின், அவ்விதம் கீழும் நோக்கிச் செலுத்தும் பயிற்சியும் உற்றபொழுது அப்பயனையே பெறும் என்றபடி.

உந்தி - உந்தியின் பிரதேசத்திலுள்ள மணிபூரகம்; சூரியகண்டத்திலுள்ளது. இச்சூரிய சுவாலையினாலும், அக் கினிகண்டத்திலுள்ள மணிபூரகத்தை அடையும் பலனையே சித்திக்கச் செய்யும் என்ற குறிப்பும் உய்த்து அறியற்பாலது.

கீழ் நோக்குதலும் மேல் நோக்குதலும் வாயுத்தம்பனத்தால் ஆம் என்பது அறியத்தக்கது. இதன் பயனை,

"மேல்கீழ் நடுப்பக்கம் மிக்குறப் பூரித்துப்
பாலா மிரேசகத்தா னுட்பதி வித்து
மாலாகி யுந்தியுட் கும்பித்து வாய்கவே
ஆலால முண்டா னருட் பெறலாமே"

என்றும்,

"விளங்கிடும் வாயுவை மேலெழ வூன்றி
நலங்கிடுங் கண்டத்து நாபியி னுள்ளே
வணங்கிடு மண்டலம் வாய்த்திடக் கும்பிச்
சுணங்கிட நின்றவை சொல்லலு மாமே."

என்றும் உரைத்த திருமூலனார் வாக்கினாலும்,

"உந்தியிற் சுழுவழியி லுச்சியுற்ற மத்தியிற்
சந்திர னொளிகிரணந் தாண்டிநின்ற செஞ்சுடர்
பந்தமாக வில்வளையிற் பஞ்சபூத விஞ்சையாச்
சிந்துபோற் கிழியினின்று சீச்சுமூச்சு வென்றதே"

என்ற சிவவாக்கியர் உரையாலும் உணர்க.

**55. உள்ளும் புறம்பு மொருங்கக் கொளுமறிவிற்
கள்ள மலமறுக்க லாம்.**

(இ - ள்.) உள்ளும் - ஆறுதாரத்துக்குள்ளும், புறம்பும்- அவற்றுக்கு வெளியிலும், ஒடுங்க - ஒரே சமயத்திற் பொருந்தும்படி, கொளும் அறிவில் - செய்துகொள்ளும் பேரறிவால்,

கள்ளமலம்-கள்ளத்தனமாகவரும் மும்மலங்களையும், அறுக்கலாம் - ஒழிக்கலாம் எ - று.

இதுவும் அது, ஆறுதாரங்களில் அக்கினிதரிக்கும் வகை கூறினவர் இதில் ஆறுதாரமாகிய உள்ளும், அவற்றின் புறமும் ஆகிய இருவகையிலும் அங்கெருப்புத்தரிக்கும் விதம் உரைக்கின்றார். ஆறுதாரங்கள் முன்னரே விளக்கப்பட்டன. இவை அனைத்தும் ஒருங்கு பொருந்தவும் சுழுமுனையூரம் வாயுவைத் தம்பிக்க மூலாக்கினி எழுந்து அதுதானும் தம்பிக்க, ஆறுதாரத்தின் உச்சியில் உள்ள அறிவுப்பீடம் ஆகிய ஈசுரநிலையிற் றாக்குவதால், அறிவு தோன்றுகின்றது, அறிவு தோன்ற மலம் அறுபடும் என்றபடி. உள்ளிடத்தில்மட்டில் பொருந்துவது அமையாது, ஆதாரத்தின் புறத்திலும் அது பொருந்துதல் அவசியம் என்பது விளக்கவும், அவ்விதம் செய்வதற்குப் பேரறிவுவேண்டும் என்பது தோற்றவுமே 'கொளும் அறிவில்' என்றார். இதன் றத்துவம் அறியாது முந்திய 'உள்ளங்கிதன்னை' (53) என்ற குறளிற் கண்ட 'கொழுவூறில்' என்ற பாடத்தையேகொண்டு இடர்ப்படுவர். இது பொருந்தாமை யுணர்க.

மலம் - ஆணவம், மாயை, காமியம் என மூன்று. அவற்றை அறவே யொழிக்கவேண்டும் என்று பசுநிலையுடைய ஆன்மா கருதும்காலத்தும், அதனையும் அறியாது நுழையுந்தன்மையன ஆதலின் 'கள்ளமலம்' என்றார். அறிவினால் உள்ளும் புறமும் சுடர் பாய்ச்சல் பெறினும்,

பிறைக்காலத்துக் கள்ளமலம் புகுந்து அதன்பயனைக் கெடுக்கும் என்பது விளக்கவும், கள்ளமலம் அறுக்கலாம் என்றார். அருத்தாபத்தியால், அவ்விதம் அறுத்தல் முக்கியமானதென்றும், அதன்பின்னரே, ஏனைச் சாதனையின்பலன் சித்திக்கும் என்றும் கொள்ளப்பெறும்.

**56.** உள்ளத்தா லங்கி யொருங்கக் கொளுமறிவின்
மெள்ளத்தான் வீடாம் விரைந்து.

(இ - ள்.) அங்கி - மூலாக்கினியை, உள்ளத்தான் - மனதினால், மெள்ளத்தான் - பக்குவப்படுத்தி நிச்சயத்துடன், ஒழுங்க - ஒன்றுபடும்படி, கொள்ளும் அறிவில் - கொள்ளுகின்ற பேரறிவினால், விரைந்து - விரைவில், வீடும் - பந்தங்களினின்றும் விடுதல் உற்று மோன நிலையை அடைவிக்கும் எ - று.

இது, மேலானவற்றுற் பெறும்பயன் உரைத்தவாறு. உள்ளும் புறமும் மூலாக்கினி பரவுவதால் கள்ளமலம் அறுபடுதல் அவசியம் என்றதுடன் அவ்விதம் அற்றபிறகு 'வீடு' சித்திக்கும் என்றும் உரைத்தார்.

உள்ளம் - ஈண்டு ஆன்மாவை. இதற்கும் அறிவின் இயக்கம் வேண்டுதலின் கொளுமறிவின் என்றார்; ஈண்டும் கொழு'ஆறில்' என்றும் பாடங்கொள்வர்.

'ஒருங்க' என்றதால் உள்ளமும் பொருந்தி ஈசா நிலை (ஆறுதாரங்களின் சிகரம்) யில் இருத்துவது அவசியம் என்

பது விளக்க. மெள்ள - என்றதால் அவ்விதம் நிறுத்துவது கடினசாத்தியம் என்பது; அதனால் செய்து முடிப்பதற்குத் தாமதம் ஆம் என்பதும், முடிப்பது தாமதமாயினும் முடித்த வுடன் பலன் சித்திப்பது 'விரைவில்' என்பதும் கூறினார். ஒன்றூன் ஒன்றன் இயைபினான் 'மெள்ள' 'விரைவின்' என்ற முரண்தொடை விளக்குகின்றது.

மேல் கள்ளமலம் அறுத்தல் அவசியம் என்றார். ஆன்மாவும் பொருந்தி யியங்குதலால் அம்மலத்தினின்றும் வீடு (= விடுதல்) அடையலாம் என்றும், அதன் வழியாகவே வீடும் (= மோக்ஷமும்) எய்தலாம் என்றும் சிலேடை வகை யால் உய்த்துணரலாம்.

## 57. ஐயைந்து மாய வகத்தி லொளிநோக்கின் பொய்யைந்தும் போகும் புறம்.

(இ - ள்.) ஐ ஐந்து ஆய - இருபத்து ஐந்து பிரகிருதி களும் அடங்கிய, அகத்துள் - உடலின் உள்ளிட முழுவதூ உம், ஒளிநோக்கில் - மூலாக்கினியைக்கொண்டு பார்க்கச் செய் தால், பொய் ஐந்தும் - பொய்ம்மையான ஐம்பொருள்களும், புறம்போகும் - வெளிச்சென்றுவிடும் எ - று.

இதுவும் அது. அகத்தூய்மையோடு புறத்தூய்மை யும் தரும் என்பது.

ஐயைந்து என்பன இருபத்தைந்து பிரகிருதிப் பொருள் கள் ஆவன:

பூதங்கள் ஐந்து—மண், நீர், தீ, கால், விண்.

தன்மாத்திரை ஐந்து—ஊறு, ஒளி, ஓசை, சுவை, நாற்றம்.

ஞானேந்திரியம் ஐந்து—மெய், வாய், கண், மூக்கு, செவி.

கன்மேந்திரியம் ஐந்து—வாக்கு, கை, கால், ஆசனப் புழை, ஜனனேந்திரியம்.

மன முதலிய சூக்குமம் ஐந்து—மனம், மாயை, சுத்த வித்தை, மகேசுரன், சதாசிவன்.

இவற்றுள் பூதம் ஐந்தும் சரீரத்தில் அடங்கியன, தன்மாத்திரைகள் ஞானேந்திரியத்தின் இயக்கத்தால் அறி யக்கிடந்தன. கன்மேந்திரியமும் ஞானேந்திரியத்தில் ஒழுக் கம். எஞ்சிய ஐந்தும் ஏனையவற்றைக் கடந்துநிற்கும் பெரு மையின. இவை யிருபத்தைந்தும் அடங்கிய அகம் உட் கோசம் ஆம். இனி அகம் என்றதால் ஆயவற்றை அகத் துள் (மத்தி யிடமாகிய மணிபூரகத்தில்) ஒளிநோக்கினுல் எனக்கொள்ளுவதும் பொருந்தும்.

பொய் ஐந்து—ஞானேந்திரியங்களால் தீய வழியிற் செலுத்தப்பெறுவதால் பெறும் இன்ப நுகர்ச்சிக்கு இவை மெய்யான இன்பம் இன்று ஆதலின் பொய்யைந்து எனட்

பட்டது. இனி பொய்மையைப் பயக்கும் ஐந்து எனக் கூறி, காமம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்ற ஐவகை பிணைக் குறித்ததாகக் கொள்ளினும் அமையும்.

## 58. ஐம்பது மொன்று மழல்போலத் தானோக்கி லும்ப ரொளியாய் விடும்.

(இ - ள்.) ஐம்பதும் ஒன்றும் - ஐம்பத்தொரு பீஜ நிலைகளையும், அழல்போல - மேற்கூறிய அழல் என, தான்நோக்கின் - ஆன்மா கருதி நோக்குமிடத்து, உம்பர் ஒளியாய்விடும் - தேவர்களுடைய ஒளி பொருந்திய நிலையை அடையப்பெறும் எ - று.

இது, பொய் களைவதும், மோக்ஷநிலை எய்துதலுமன்றி, தேவலோகத்துப் போகநுகர்ச்சியும் சித்திக்கும் என்றபடி. ஐம்பத்தொன்று என்றது ஐம்பத்தொரு பீஜ அக்ஷரங்களை; இவை விரிப்பிற் பெருகுமாதலின் பரந்த நூலுட் கண்டு கொள்க. இனிச் சிவமூர்த்தம் 51-ம்கொள்வர்: அங்ஙனமெனில் மேல் 30-ம் குறளுரையிற் கூறிய விவரங்களைக் கண்டுணர்க.

அக்ஷரங்களில் அழலை நிறுத்துவதாவது உடலின் கூற்றில் 51-அக்ஷரங்களிருக்கும் நிலை அறிந்து அவ்வவ்விடத்தில் அழலைச் சுழுமுனை வாயிலாகவே நிறுத்தி அடைவது. அது போலவே ஈசுரநிலை 51-ம் உடலில் கோலி அங்ஙனமே அக்கினியைப் பொருத்துவ தென்க. இவ்விதம் செய்வதால்

மூலாதாரத்து எழும் அக்கினியும் உடன்கலந்து உடல்முழுவதூஉம் ஒளிமயமாக மாறும் என்றும், அதனால் உம்பரது உடல் ஒளியுடைமைபோல் ஒளிபெற்று விளங்கும் என்றும் உணர்கின்றோம். உம்பர் - தேவர், தேவர் என்ற சொற்கே வடமொழியில் (திவ்—ஒளி) ஒளி (பிரகாசம்) உடையவர் என்பது பொருளென்பதும் ஈண்டு அறியத்தக்கது. அவரது தன்மை பெறுவர் எனவே, அவர்களது போகநுகர்ச்சியும் எய்துவர் என்பதும் விளங்கும். ஏனெனில் ஏற்கெனவே மோக்ஷமென்னும் நிலையை ஆன்மா அடையப் பெறுதலின்.

## 59. தூண்டுஞ் சுடர்போற் றுலக்க முறநோக்கில் வேண்டும் பொருண் முடிக்கலாம்.

(இ - ள்.) தூண்டும் சுடர்போல் - ஈசுரநிலையில் தூண்டுதல் பெற்று எரிவதுபோல, துலக்கம் உற - விளங்கும்படி, நோக்கில் - ஒவ்வோருறுப்பையும் ஆதாரத்தையும் நோக்குகின்ற பொழுது, வேண்டும் - விரும்பிய, பொருள் முடிக்கலாம் - விடயங்களைச் சித்திபெறலாம் எ - று.

இது பயன் உரைத்தவாறு. சுடர் என்றது ஈண்டு ஆறாதாரங்களையும் கடந்து கபாலத்தில் தோன்றும் ஞானச்சுடர். இதனையே ஈசுரநிலை என அறியற்பாலது. அஃது எல்லாருக்கும் பொருந்தியது எனினும், அதன் இயல்பு உணர்ந்தார்க்கும் குண்டலியில் எழும் மூலாக்கினி ஆதாரங்களையும் கடந்து அதனைத்தாக்கிப் பொருத்துவார்க்கும் அல்

லாமல் ஏனையோர்க்கு வெளிப்படையாகாது. மூலாக்கினியும் இச்சுடருடன் கலப்பதே சோதியிற் கலப்பது எனப் பெரியோர் விளக்குப. அங்ஙனம் மூலாக்கினியால் எழுப்பப்படும் இயல்பினதாகலின் தூண்டும் சுடர் என்றார். தூண்டப்படும் என்று பிறவினைப் பொருளில் வந்தது. அச்சுடர்தான், சிகரத்தில் இருந்தபடி யாண்டும் பிரணவத்திருப்பதுபோல, மூலாக்கினியும் எல்லாவிடத்தும் பொருந்தப்பெறின் பயன் சித்திக்கும் என்றார் என்க. வேண்டும் பொருளாவன, இம்மையில் ஆன்மலாபத்துக்கு உதவி செய்பவனவும், மறுமைக்கு உதவும் நல்லெண்ணம் முதலியனவும் என்க.

இப்பொருள் மாறுபட "தூண்டுஞ் சுடரைத் துளங்காமற் றூன்றுக்கில் வேண்டுங்குறை முடிக்கலாம்" என்று பாடங் கொள்வர். சுடரை எனப் பாடம் கொள்வதில் இழுக்கு இல்லை. ஆனால், குறை என்ற பாடம் குறைபடும்; வேண்டுகின்ற குறை என்பன இன்மையால்.

**60.** **ஒள்ளிதா யுள்ள சுடரை யுறநோக்கில்**
**வெள்ளியா மாலை விளக்கு.**

(இ - ள்.) ஒள்ளிதாய் உள்ள - மிக்க தேஜோ மயமாயுள்ள, சுடரை - சோதிச் சுடரை, உற - குண்டலிச்சுடர் பொருந்த, நோக்கில் - காணுங்கால், மாலை விளக்கு - மாலைப் பொழுதிற் பிரகாசிக்கச் செய்கின்ற, வெள்ளியாம் - சந்திரனை யொத்த விந்துக் கலையாகும் எ - று.

இதுவுமது. முற்குறளிற் றூண்டும் சுடர் என்றதன் தன்மையை நன்கு விளக்க ஒள்ளிதாயுள்ள சுடர் என்றார். சுடர் என்பதே ஒளியுடையது என்றாலும், சுடர்கள் யாவற்றுக்கும் சுடராக விளங்குவது இச்சோதி ஆதலின் ஒள்ளிதான சுடர் என்று விதந்து கூறினார். அதனோடு மூலாதாரச் சுடரும் பொருந்துவது வேண்டும் என்றும், அது பொருந்த, நாதமும் விந்துவும் ஆண்டுப் பிறக்கும் என்றார். இவ்விரண்டும் அஞ்ஞான இருளை அகற்றுவது விந்துக்கலையாதலின், அதன் தன்மையாகிய சந்திரக் கலையை உவம வாசகமாகக் கூறினார். வெள்ளி - வெண்சுடர், ஆவது சந்திரன். இது மாலைப்பொருளில் இருளைக் கடிய எழும் விளக்கு என்று கூறினார். அதுபோல யோக நிலையில் அமர்ந்த 'மாலைப் பொழுதில்' தோன்றும் அஞ்ஞான இருளை விந்துக்கலை விலக்கும் என்று விளக்குதற் பொருட்டு.

கடவுளை, நாதமாகவும் விந்துவாகவும் விளங்குகின்றார் என்பது நூற்றுணிபு.

"நாத விந்து கலாதீ நமோ நமோ" என அருணகிரியாரும்,

"பன்னாட் பரவிப் பணி செய்ய பாதமலர்
என்னாகந் துன்னவைத்த பெரியோ னெழிற் சுடராய்க்
கன்னா ருரித்தென்னை யாண்டுகொண்டான் கழலிணைகள்
பொன்னான வாபாடி பூவல்லி கொய்யாமோ"

என மணிவாசகப் பெருமானும் உரைத்தமையும் உணர்க.

# ஏழாவது அதிகாரம்

## அமுத தாரணை

மேற்சொன்ன சாதனைகள் முற்றுப்பெற்று ஆனந்தம் என்னும் பெருக்கில் அழுந்துங் காலத்து உள்ளத்து எழும் உணர்ச்சியை உரைக்கின்றது. அவ்வண்ணம் அங்கியைத் தரித்துச் சோதியை அடைந்தக்கால் மனம் சலனம் அற்று இன்பம் துன்பம் என்ற நிலையைக் கடந்த நிலையிற் பேர்றுத் தும். அது தேவர்கள் உண்ட அமிர்தினை யொத்த தன்மையது என்னும் கருத்தினுல் அவ்வுன்னத நிலையைத் தரித்தற்கு அமுத தாரணை என்றுர்.

மூலக்கனல் உச்சியை அடைந்தக்கால் அமுதம் அன்ன பேரின்ப வுணர்ச்சி யெழும் என்ற இக்கருத்தினையே தாயுமானவர் மிகவும் அருமையாக,

"கருவுமரு காயத்தை நிர்மலம தாகவே
கமலாச ஞதி சேர்த்துக்
காலைப் பிடித்தனலை யம்மைகுண் டலியடிக்
கலைமதியி ஞடு தாக்கி
உருகிவரு மமுர்தத்தை புண்டுண் டுறங்காமல்
உணர்வான விழியை நாடி."

என உரைக்கின்றுர்.

**61. அண்ணுக்குத் தன்னை யடைத்தங் கமுதுண்ணில்
விண்ணோர்க்கு வேந்தாய் விடும்.**

(இ - ள்.) அண்ணுக்குத் தன்னை - அண்ணுக்கு எனப் படும் மேல்நாக்கினை, அடைத்து - அடைபடுத்தி அதனாற் பெறும் பயனை மாற்றி, அங்கு அமுது உண்ணில் - அவ் விடத்திலேயே உண்டாகும் அமிர்தத்தை உண்டக்கால், விண் ணோர்க்கு வேந்து ஆய்விடும் - தேவர்களுக்கு அரசனாகிய இந்திர பதவியை அடையலாம் எ - று.

இது, சூக்கும சரீரத்தினால் மூலாக்கினியைக் கொண்டு உச்சியை அடைந்தபொழுது எழும் அமுதத்தை நுகரும் முறை கூறியவாறு.

சதாசிவன் என்னும் உச்சிநிலையை அடைந்தபொழுது பேரின்பம் உண்டாகும், என முன்னரே கண்டாம். அதன் றன்மையை அடைவதென்றால் சுவையென்னும் புலனைக் காட்டும் பொறியாகிய நாவின்றன்மை அழியவேண்டும் என் கின்றார். கேவலம் அழியத்தக்கதும், தெவிட்டத்தக்கதும் ஆகிய பொருள்களின் சுவையே அறியும் ஆற்றலுடைய நாவினைக் கடந்தால், பேரின்பச்சுவை எளிதாம் என்ற கருத் தினால் அண்ணுக்கை அடைத்து என்றார். அடைத்தலாவது, அந்நாவின் குணத்தை வெல்வது. நாவின் ஒரு விரற்கடை அளவே சுவைக்கும் குணத்தைக் காட்டும் என்பது மேலோர் துணிபு. இதுபற்றியே 'தன்னாவில் ஒருவிரலைத் தாண்ட வறியார்கள்' (மனோன்மணீயம்.) என ஆசிரியர் சுந்தரம்

பிள்ளை கூறினர். அதனை வென்றக்கால் அஃதாவது பொருள் களிற் சுவையுணர்வைக் கடந்தபொழுது பேரின்பம் ஊட்டும் அமிர்தினை நுகரலாம் என்றார்.

கடல் கடைந்தெடுத்த அமிர்தம் நித்தியமாய தேவர் களது பதவியைத் தந்தது என்றால், உள்ளுக்குள் எழும் அமிர்தம் அத் தேவர்களுக்கும் தலைவனான தேவேந்திரனது பதவியையே நல்கும் என்பது கருத்து.

> "சாற்றிய விந்து சமயமாகுஞ் சத்தியா
> லேற்றிய மூலத் தழலை யெழமூட்டி
> நாற்றிசை யோடா நடுநாடி நாதத்தோ
> டாற்றி யமுத மருந்தவிந் தாமே."

எனத் திருமூலனார் உரைத்ததும் உய்த்துணர்க.

'வேந்தனுமாம்' என்றும் பாடம்.

**62. ஓங்கார மான கலசத் தமுதுண்ணிற்**
**போங்கால மில்லை புரிந்து.**

(இ - ள்.) ஓங்காரம் ஆன - பிரணவத்தன்மை பொருந் திய, கலசத்து - பாத்திரமனைய ஆதாரங்களின் முடிவில் உள்ள, அமுது - அமுர்தத்தைப், புரிந்து - விரும்பி, உண் ணில் - புசித்தால், போம் காலம் இல்லை - சரீரம் அழியும் காலமும் இல்லை எ - று.

இதுவும் அது. கலசம் என்றது மேல்விளக்கும் சதா சிவ நிலையை. கடவுள் ஓங்கார ரூபமானவர் என்பது நூற்

றணிபு; ஓங்காரம், தத்துவம், தாரகம், பிரணவம், நாதம் என்பன ஒரு பொருட் குறிக்கும் சொற்கள். உலக முழுவதும் ஓம் என்னும் பிரணவ ஓசையிற் பிறந்து அதனுள்ளேயே அடங்கியதென்றும் கூறுப. அத்தகைய கலசம் என்னவே, உலகத்தை ஆக்கவும் அழிக்கவும் வல்லது என்பது பெறப்படும். கலசத்து அமுது, மேல் உரைத்த அக்கினிக் கலப்பில் எழூஉம் ஆனந்த உணர்ச்சி. புரிதல்-விரும்புதல். போங்காலம் - சரீரம் அழியும் காலம். முற்குறளில் தேவருக்குச் சித்திக்கும் என்றாராய், இக் குறளில் அது தானும் இச்சரீரம் அழியாமலே அதன்கண் காயகற்பமாக இருக்கவும் இயலும் என்று குறிப்பிடுகின்றார்.

> "மூல நெருப்பைவிட்டு மூட்டிநிலா மண்டபத்திற்
> பாலை யிறக்கியுண்டு பசியொழிவ தெக்காலம்"

என்னப் பத்திரகிரியார் புலம்பியது இவ்வமிர்தினை உண்ண விரும்பியே என்பதறிக.

**63.** ஈரெண்கலையி னிறைந்தங் கமுதுண்ணிற்
பூரணமாய் நிற்கும் பொலிந்து.

(இ - ள்.) ஈர் எண் கலையில் - பதினாறு கலையுடைய சந்திர மண்டலத்தில், நிறைந்து - அக்கினிச்சுவாலை சூழ்ந்து, அங்கு அமுது உண்ணில் - அதனால் ஆண்டு உண்டாம் அமிர்தினை அருந்தினால், பொலிந்து - அழகு மிக்கு, பூரணமாய் நிற்கும் - சூக்கும தூலதேகங்கள் முழுமை அடைந்து (குறைவு நீங்கி) நிலைபெற்றிருக்கும் எ - று.

இஃது அமிர்தம் உண்டாந் தன்மையும், அதனை உண் டலின் பயனும் உரைத்தது.

கலை என்றது கலையை உடைய சந்திரனையும், சந்திர னுக்குரிய மண்டலமாகிய புருவநிலை (ஆக்கினை) யையும் குறித் தது. ஆக்கினையைக் கடந்தே சதாசிவநிலை நிற்றலாலும் மூலாக்கினி போய்த் தாக்கின பின்பு எழும் சூடும் அதனல் எழும் அமிர்தநிலையும் ஆக்கினைத் தானத்திலேயே பொருந்து தலின், சந்திர மண்டலத்தைக் குறிப்பிட்டார். சந்திரன் வளர்ந்தும் தேய்ந்தும் கலைகள் பதினாறு பெறுதல்போல, ஆக்கின சக்கரமும் பதினாறு பிரிவுகளை உடைத்தாய் ஒவ் வொரு பிரிவாகத் தோன்றுதல் இயல்பு நோக்கிச் சந்திரனை உவமை கூறினர். பதினாறு பிரிவுகளின் தன்மை மேல் உரைக்கப்படும். மேற்குறளில் போங்காலம் இல்லை என்றார். அப்படியாயின் சரீரத்துக்குத் தூலத்திலேனும் சூக்குமத்தி லேனும் குறைவு உண்டாமோ என்ற சந்தேகம் உண்டா வதை விலக்கப் பூரணமாகும் என விளக்கினர். பொலிதல் - விளங்குதல். மாசுமறுக்களைப் போக்கியது தொனிப்பொருள் 'புரிந்து' என்றும் பாடம்.

**64. ஆனகலசத் தமுதை யறிந் துண்ணின்**
**ஞான மதுவா நயந்து.**

(இ - ள்.) ஆன கலசத்து - பொருந்திய அக் கலசத்தில் உதிக்கும், அமுதை - அமிர்தத்தை, அறிந்து உண்ணில் -

அறிவால் உணர்ந்து புசிக்கும்பொழுது, நயந்து - நயப்புடன், ஞானம் அதுவாம் - அதுவே பேரறிவாகும் எ - று.

இதுவும் பயனுரைத்தது. கலசம் என்றது மேல் ஓங்காரமான கலசம் என்றதை. அதன்கண் எழும் 'அமிர்தம்' அறிதலும், அறிந்தபின் அனுபவித்தலும் அருமை என்பது காட்ட, அறிந்து உண்ணில் என்றார். அங்ஙனம் உண்டதும், தானே நயப்புத்தரும் என்பதும், அதன் நிலையே பேரின்ப நிலையான ஞானிகள் நிலை என்பதும் விளக்க 'ஞான மதுவாம் நயந்து' என்றார். இதற்கு மாறாக 'போனகம் வேண்டாம் போம்' என்ற பாடம் வழங்கிவருகின்றது. மரணமே யில்லை என்று முற்குறளில் குறித்தவர், உணவும் அவசியமில்லை என்று உரைப்பது அனுவசியம் என்பது உய்த்துணர்வார்க்குப் புலனும் ஆதலின் அப்பாடம் சிறப்பின்மை யறிக.

அறிந்து உண்ணுதல் கடினம் என்ற கருத்தினையே இராமலிங்க சுவாமிகள்,

"களக்கமறப் பொதுநடனம் கண்டுகொண்ட தருணம்
கடைச்சிறியே னுளம்பூத்துக் காய்த்ததொரு காய்தான்
விளக்கமுறப் பழுத்திடுமோ வெம்பியுதிர்ந் திடுமோ
வெம்பாது பழுக்கினுமென் குறிப்பிலகப் படுமோ
கொளக்கருது மலமாயைக் குரங்குகவர்ந் திடுமோ
குரங்குகவ ராதெனது குறிப்பிலகப் படினும்
துளக்கமற வுண்ணுவனோ தொண்டைவிக்கிக் கொளுமோ
சோதிதிரு வுளமெதுவோ ஏதுமறிந் திலனே"

என விளக்கியுள்ளார்.

**65. ஞான வொளிவிளக்கா னல்ல வமுதுண்ணி
லான சிவயோகி யாம்.**

(இ - ள்.) ஞான ஒளி விளக்கால் - அறிவென்னும் ஒளியை வீசும் விளக்கினடியிலிருந்து, நல்ல - நன்மையைத் தரும், அமுது உண்ணில் - அமிர்தத்தைப் புசித்தக்கால், ஆன - பெரியோர் கூறிய சிறப்புப் பொருந்திய, சிவயோகி யாம் - சிவராஜ யோகியாம் எ - று.

இஃது யோகநிலை யடையும் விதம் கூறியது. சாமீபம் முதலிய படிகளிற்படிந்து ஒழுகி யோகசாதனை பெறுதலே முறையாக இருக்க, இவ்வமிர்த முண்ணும் பாக்கியம் பெற்றவர் அத்துணை வருத்தமின்றியே, யோகியர் அடையும் பலனும் சிறப்பும் எய்துவர் என்றபடி. மூலக்கனல் சோதியுடன் கலக்கும்பொழுதும் பெருஞ்சோதி உண்டாகும் காலத்தில் அந்தகாரம் என்னும் பேரிருள் சூழ்ந்துகொள்ளும் என்ப. மாயையாகிய அவ்விருட்டினிற் சிக்கி அமிர்தத்தைக் கை நழுவவிடாது அறிவென்னும் விளக்கின் ஒளியைக்கொண்டு அதனைப் புசிக்க என்றார். இவ்விருளே மாயை எனப்படுவது. இதனையே 'கொளக்கருது மலமாயை' என அருட்பெருஞ் சோதியார் கூறினர் என்பது காண்க.

சிவயோகி என்பதற்கு, யோகநிலையில் உள்ள சிவபிரான் றன்மை யடையலாம் என்பது கருத்து ஆம்; சோதியில் கலந்தபின்னர் பசுவுக்கும் பதிக்கும் வேற்றுமை யில்லையே!

**66. மேலை யமுதை விலங்காமற் றுண்ணிற்**
**காலனை வஞ்சிக்க லாம்.**

(இ - ள்.) மேலை அமுதை - கபாலத்தில் எழுகின்ற அவ் அமுதினை, விலங்காமல்தான் - விலக்காமலே, உண்ணில் - நுகர்ந்துவிட்டால், காலனை - முக்காலச் சேட்டையினையும், வஞ்சிக்கலாம் - ஏமாற்றி அவற்றையுங் காக்கலாம் எ - று.

ஆக்கினைக்கும் மேலிடத்தில் தோன்றுவது கருதி அமிர்தினை 'மேலை யமுது' என்றார். விலங்குதல் - விலக்குதல் என்றதன் மெலித்தல்; தவறுமல் என்றபடி. தவறுதலாவது அச் சோதி எழுங்கால் அசதியால் மயங்குதலும், முற்கூறிய மாயை வாய்பட்டு ஏமாறுதலும். முக்காலத்தையும் உருவகப்படுத்திக் 'காலன்' என்று உரைத்தார். காலம் ஆவது இறந்த காலத்தில் எய்திய வினைப்பயனும், நிகழ்காலத்து எதிர்ப்படும் ஊழினாற் பெறுகின்ற அனுபவமும் எதிர்காலத்துப் பொருந்தும் நன்மை தீமையான பயனும் ஆகியவை. எனவே அமிர்தம உண்டார், ஊழ்வினையையும் வஞ்சித்தவர் ஆவார். முக்காலத்தையும் கடந்தவர் யோகியர் ஆதலாலும், இஃதுண்டவர்கள் அப்பதவியே பெறுகின்றவராதலாலும் இங்ஙனம் கூறினார் என்க. இக் கருத்து அறியாதவர் காலன்—எமன் எனப் பொருள் உரைத்து, இறப்பது தடுக்கலாம் என்று கூறினர். அங்ஙனமாயின் மேல் "போங் கால மில்லை" (குறள்—62.) என்றதனோடு "கூறியது கூறல்" என்னும் குற்றம் பொருந்தும் அல்லவா?

'விளங்காமல்' என்றும் பாடம். அதற்குப் பஞ்சகரணங்களால் அறிந்துகொள்ளாதபடி என நவின்று பொருள் கூறுப.

**67. காலை தலையந்தி கலந்த வமுதுண்ணின்**
**ஞான மதுவாய்மை யாம்.**

(இ - ள்.) காலை - காலைப் பொழுதிலும், தலை - உச்சிப் பொழுதிலும், அந்தி - மாலைப் பொழுதிலும் என்ற முப்பொழுதிலும், கலந்து - மூலாக்கினியிற் கலந்த, அமுது உண்ணில் - மேல் உரைத்த அமிர்தத்தை உண்டக்கால், ஞானம் அது - பேரறிவானது, வாய்மையாம் - சித்திப்பது உண்மையாம் எ - று.

இதுவுமது. காலை தலை அந்தி - என்பன முப் பொழுதையும் குறித்தன. 'தொடர்ந்து இரு முப்பொழு தேத்துதல்' என்று பெரியார் பணித்தனர் ஆதலின் ஒரு வேளைக்கு முப்பொழுதாகக் கொள்க. முப்பொழுதிலும் மூலக் கனலெழுப்பி முட்டின்றி ஞானச் சோதியை அனுபவிக்கவேண்டும் என்கிறார். இனி, காலை, தலை, அந்தி என்பன பரியாயமாக, இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்ற நாடிகளைக் கலந்து அவற்றில் எழூஉம் அமிர்தத்தை உண்டு என உரைப்பினும் பொருந்தும். இவற்றை விரிப்பிற் பெருகும். இக் குறளுக்கு 'காலன ஊக்கங் கலந்த அமிர்து' என்றும் பாடங் கொள்வர்.

வாய்மை - உண்மை. ஞானம் சித்திப்பது நிச்சயம் என்றபடி. 'ஞான மதுவாம் நயந்து' என்றும் பாடம் வழங்குகின்றது.

**68.** **நிலாமண் டபத்தி னிறைந்தவமு துண்ணி**
**னுலாவலா மந்தரத்தி னூடு.**

(இ - ள்.) நிலா மண்டபத்தில் - சந்திர மண்டலத்தில், நிறைந்த - பொருந்திய, அமுது உண்ணில் - அமிர்தத்தைப் புசித்தால், அந்தரத்தின் ஊடு - ஆகாய மார்க்கமாக - உலாவலாம் - சஞ்சரிக்கலாம் எ - று.

இதுவுமது. மேல் பேரறிவு பெற்றக்கால் அஷ்டசித்திகளும் பெறுதல் எளிது என்பது விளக்க, அவற்றுள் ஒன்றாகிய ஆகாய கமனத்தை உரைத்தார். 'கந்துக மதக் கரியை வசமாய் நடத்தலாம்............என்ற தொடக்கத்துத் தாயுமான சுவாமிகள் உரைத்தவை யெல்லாம் ஈண்டு உரைத்துக்கொள்க. இப் பயன் யாவும், அமிர்தம் உண்டக்கால் சித்திக்கும் என்றபடி.

நிலா மண்டபம் - சந்திர மண்டலத்தில் ஆக்கினை இருந்தலின், அவ்விடத்தில் அமிர்தம் இறங்குதலின் சந்திர மண்டலத்தை உரைத்தார். மேல் ஈரெண்கலையின் (குறள்—63.) உரைத்தவை கண்டுகொள்க.

**69.** **ஊறு மமுதத்தை யுண்டாங் குறப்பார்க்கின்**
**மாறும் பிறப்பறுக்க லாம்.**

(இ - ள்.) ஊறும் அமுதத்தை - ஊற்றாக கபாலத்திற் பெருகுகின்ற அமிர்தினை, உண்டாங்கு - உண்டாகும் அத்தருணத்திலேயே, உற - உண்ணும்படிப் பொருந்த, பார்க்

இன் - கண்டபொழுதும், மாறும் பிறப்பு - ஊழ்வினைப் பயனால் மாறிமாறிவரும் பிறப்பினை, அறுக்கலாம் - இல்லையாம்படி அழித்துவிடலாம் எ - று.

இது புனர் ஜன்மம் இன்மையை உணர்த்தியது.

ஊறும் அமிர்து - மேற்கூறியவை எல்லாம் உரைத்துக்கொள்க. அச் சோதியை அநுபவிப்பதுபோல் உள்ளத்தால் நினைந்து கண்டவுடனே அப் பயன் கிடைக்கும் என்பது விளக்க 'உண்டாங்கு உறப் பார்க்கின்' என விவரித்து உரைத்தார். உண்டாங்கு - உண்டதுபோல். உற - மனதிற் பொருந்த. பிறவிகள் பல வுண்டாவன அவரவர் செய்த ஊழ்வினைப் பயன் ஆதலால், அவ்வினையே பிறப்பினை மாற்றுவதால் மாறும் இயல்புடைய பிறப்பு என்றார். மேற் குறளில் ஊழ்வினையும் (காலன்) அழியும் என்றும் உரைத்ததால், அதன் பயனாகிய பிறப்பும் அழியும் என இக்குறளிற் கூறுகின்றார். 'உண்டி யுறப் பார்க்கில் கூறும் பிறப்பு' எனவும் பாடம்.

**70.** எல்லையி லின்னமு துண்டங் கினிதிருக்கிற்
றொல்லை முதலொளியே யாம்.

(இ - ள்.) எல்லை இல் - அளவு சொல்ல இயலாத, இன் அமுது - இனிய அமிர்தத்தை, உண்டு - புசித்து, ஆங்கு இனிது இருக்கின் - அந்நிலையிலேயே நாடியும் மூலாக்கினியும் இனிதாகப் பொருந்தி யிருக்குங்கால், தொல்லை - பழைமை

யான, முதல் ஒளியே ஆம் - முதன்மையான தேஜோமயமே கிடைக்கும் எ - று.

இதுவும் பயன் கூறியது.

இகத்திலும் பரத்திலும் பெறத்தகும் நன்மையை இது காறும் விதந்து கூறினர். இனி அவ்வருள் மயத்தினால் தன்னைத் தானே யறிந்து பசுவும் பதியும் ஒன்றறக் கலக்கும் வழியைக் கூறுகின்றார் இக் குறளில். எல்லையில் இன் அமிர் தம் எனவே பழகுந்தொறும் பழகுந்தொறும் ஊற்றில் எழும் தன்மையைப்போற் கபாலத்திலேயே பெருகும் அமிர்தம் என்றபடி. இதனையே மேலும் 'ஊறுமமுது' எனவுரைத்தார். இனிது இருத்தலாவது, சிந்தையும் மொழி யும் வேறு துறையிற்செல்லாது மேல் நோக்கிலேயே நிற் பது. தொல்லை யொளி - தேஜோமயம். இக் கருத்துப்பற் றியே சிவபெருமானை அழற் கடவுள் (நெருப்பு மயமான ஈசுரன்) எனவுரைக்கின்றனர். 'இன்னமிர்த முண்டு' என் றும் பாடபேதம்.

இவ்வதிகாரத்தில்,

"ஓங்கென்று மூலத் துதிக்கின்ற காலையு
மாங்கதை யுண்ண வமுது."

என்னும் குறள் மிகையாக ஒரு பிரதியிற் காணப்பெறு கிறது. இதற்கு 'மூலாதாரத்தில் ஓங்காரத்துடன் எழு கின்ற பொழுதும், அதன் தன்மை யறிந்து புசிக்க அமிர் தத்தின் பயனை அளிக்கும்' என்று பொருள் கொள்க.

# எட்டாம் அதிகாரம்

## அர்ச்சனை

மேல் அதிகாரங்களில் உடம்பின் றன்மையும் அதனால், நாடி, வாயு, அங்கியிவற்றைத் தரித்து அவற்றின் சம்பந்தத்தால் எழும் அமிர்தத்தையும் புசிக்கும் வழியைக் காட்டினார். இனி, அவ்வமிர்த மயமான சதாசிவ மூர்த்தியைப் பூசிக்கும் முறையினைக் கூறுகின்றார். பூசித்தலாவது அவ்வீசனைச் சிந்தித்தல். மேற்கூறிய சாதனங்கள் ஈசனது தன்மையை அறியும் வழியே காட்டின; இனிப் பூசனையினால்தான் அவனை அடையமுடியும் என்பதை நன்குவிளக்கவே பூசிக்கும் முறை கூறப் புகுந்தார்.

**71.** மண்டலங்கண் மூன்று மருவ வுடனிருத்தி
யண்டரனை யர்ச்சிக்கு மாறு.

(இ - ள்.) மண்டலங்கள் மூன்றும் - சூரிய சந்திர அக்கினி மண்டலங்கள் மூன்றும், மருவ - ஒன்றுடன் ஒன்று சேரப்பொருந்த, உடன் இருத்தி - ஒருமிக்க இருக்கச்செய்து, அண்டு அரனை - நெருங்கி உள்ள சதாசிவத்தை, அர்ச்சிக்கும் ஆறு - அருச்சனை செய்யும் விதமாம் எ - று.

இந்த அர்ச்சனை செய்வதற்குமுன் செய்யவேண்டிய சாதனைகளை உரைக்கின்றது. ஆறு ஆதாரங்களையும் சுடர் விளங்கும் தன்மையில் ஒன்றுசேர்த்துப் பரமேசுரன் றோற்றத்தை மனதில் நிறுத்திப் பூசைசெய்க என்றபடி. ஆறாதா

ரங்களுள், மூலாதாரமும் சுவாதிட்டானமும் அக்கினிகண்டம் என்றும், மணிபூரகமும் அனுகதமும் சூரியகண்டம் என்றும், விசுத்தியும் ஆக்கினையும் சந்திரகண்டம் என்றும் முன்னமே கண்டோம். இம்மூன்று மண்டலங்களிலும் நாடி வாயு அக்கினி என்பவை ஒன்றுசேர நிறுத்தியக்கால் உச்சியிலுள்ள குண்டலிசத்தி யென்னும் சதாசிவத்தைக் காணலாம் என்று விளக்கினர். வாயுவை அடக்கியதனுல் எழும் ஆக்கினியில் அவ்வுருத்தோன்றி அமிர்தம் பெருகினும், ஆதாரங்கள் ஆறும் ஒன்று சேர்ந்து இருத்தல் அவசியம் என்பதனை வற்புறுத்துகின்றூர்.

அண்டு அரன் எனப் பிரிக்க. அண்டுதல் பரவைவழக்கு, அண்மையில் (சமீபத்தில்) உள்ளது என்றபடி. ஈசன் உள்ளுக்குள்ளே பொருந்தி 'யடியார்க்கெளியவனுய்' இருக்கும் தத்துவத்தை உரைத்தது.

> "ஒவிய மான வுணர்வை யறிமின்கண்
> பாவிக ளித்தின்பயனறி வாரில்லை
> தீவினை யாமுடன் மண்டல மூன்றுக்கும்
> பூவி லிருந்திடும் புண்ணியர் கண்டே"

என்ற திருமந்திரத்தின் பொருளையும் ஒப்புநோக்குக.

**72. ஆசனங் கட்டி யரன்றன்னை யர்ச்சித்துப்**
**பூசனை செய்கவதன் பின்.**

(இ - ள்.) ஆசனம்கட்டி - ஆசனங்களை அமைத்துக் கொண்டு, அரன் தன்னை - சதாசிவரூபத்தை, அருச்சித்து -

அருச்சனைசெய்து, அதன்பின் - அங்கிலே பெற்ற பின்னர், பூசனைசெய்க - அவ்வுருவினையே சிந்தித்துப் பூசைசெய்க.

இஃது அர்ச்சனைக்குச் சாதனங்களின் ஒன்றாகிய ஆசன முறை கூறுகின்றது.

அர்ச்சனைசெய்யும் முறையாவது மேருப்பிரத்தாரம், கைலாயப்பிரத்தாரம், பூப்பிரத்தாரம் என மூவகைப்படும். இவற்றுள் மேருப்பிரத்தாரம், சோடச நித்த தேவதைகள் தாமாகவே சக்கரத்தினுடைய அங்கமாக வியாபித்திருத்தல் - அத்தேவதைகள் அக்ஷரரூபமாய் அச்சக்கரத்தின் அங்கமாக வியாபித்திருத்தல் கைலாயப் பிரத்தாரம் என்பர். வசனி, யோகினி, ஆகருஷணிகள் முதலிய தேவதைகள் அச்சக்கரத்தின் அம்சமாக வியாபித்திருப்பது பூப்பிரத்தாரம். இவற்றை விரித்துரைப்பிற் பெருகுமாதலின் பிறநூல்களிற் கண்டு கொள்க. இனி ஆசனங்களாவன: பத்மாசனம், சித்தாசனம், சுகாசன முதலியன. இவையும் விரிக்கிற் பெருகுமாதலின் பரந்தநூலுட் கண்டுகொள்க.

பூசைசெய்தல் ஏத்துதல், துதித்தல், வருணித்தல், பலியிடல் முதலியன அடங்கும். அர்ச்சனைசெய்தல் கடவுளின் பிரபாவம் அறிந்து அவரை நிறுத்தும் தந்திரம். இதை நோக்கியே முதலில் அர்ச்சனையும் அதன்பின் பூசனையும் உரைத்தார்.

'பூசனைசெய் துள்ளே புணர்' என்றும் பாடம் ஓதுவர். அதற்கு மனதிற்குள்ளே பூசையியற்றிச் சிவனுடன் கலந்

திரு' என்பது பொருளாம். மனதிற் புணரும் தந்திரம் அடுத்த குறளில் உரைக்கின்றார் ஆதலின் ஈண்டு உரைப்பது அவசியமின்மை அறிக.

**73. உள்ளமே பீட முணர்வே சிவலிங்கந்**
**தெள்ளிய ரர்ச்சிக்கு மாறு.**

(இ - ள்.) உள்ளமே பீடம் - மனமே பீடமாகவும், உணர்வே சிவலிங்கம்-அறிவையே சிவலிங்கமாகவும் பாராட்டி, தெள்ளியார் - தெளிவை அடைந்த அறிவாளர்கள், அர்ச்சிக்கு மாறு - அர்ச்சனைசெய்யும் வழியாம் எ - று.

சித்தாசனத்தில் அமர்ந்து சிவனை அருச்சிக்க என்றபடி. உள்ளம் என்னும் மனதைப் பீடமாக (ஆசனமாக)க்கொண்டு அதில் சிவலிங்கத்தை நிருமித்து அருச்சனை செய்க என்றார்; அஃதாவது அந்தக்கரணத்தில் ஈசனை நிறுத்து என்றபடி.

உள்ளமாகிய ஆசனத்திற் கடவுளை ஆவாகனப்படுத்திச் செய்யும் வழிபாட்டுக்கு மானசபூசை என்பர் பெரியோர். உணர்வு சிவலிங்கம் என்னவே, நல்லுணர்வையும், அமிர்தம் தரும்நிலையிற் பரிபக்குவமான நிலையையும் உணர்த்திற்று. தெள்ளியர் என்றது ஈண்டு முற்கூறிய சாதனைகளை முடித்த தெளிந்த அறிவினர் என்க.

"பண்ணேன் உனக்கான பூசையொரு வடிவிலே" எனப் பெரியார் உரைத்தவண்ணம் சாதனம் பயிற்றுதற்கு உருவம் நிருமாணித்தன்றி ஆரம்பத்தில் சித்திபெற இயலாது என்பது

கருதிச் 'சிவலிங்கம்' என்ற வுருவேனும் வேண்டுக என்றார். இக்கருத்துப்பற்றியே அடுத்த குறளினும் 'சிவனுருவை' எனமீண்டுங் கூறினார்.

## 74. ஆதாரத்துள்ளே யறிந்து சிவனுருவைப் பேதமன்றி யர்ச்சிக்கு மாறு.

(இ - ள்.) ஆதாரத்துள்ளே - ஆதாரங்கள் ஆறனுள், அறிந்து - சதாசிவமூர்த்தி அடங்கியிருத்தல் உணர்ந்து, சிவன் உருவம் - அச் சதாசிவமூர்த்தியைச் சிவன் என்ற உருவில், பேதம் அன்றி - பதி பசு என்ற வேற்றுமையைவிலக்கி, அர்ச்சிக்கும் ஆறு - வழிபடும் முறையாகும் எ - று.

இதுவும் அது. அமிர்தபானம்பண்ணும் அவகாசத்தில் 'நான் நீ' என்ற வேற்றுமை யிறத்தல் வேண்டும் என்றபடி.

ஆதாரம் முன்னரே உரைக்கப்பட்டன. ஆறாதாரங்களையும் கடந்த எல்லையின் ஈசன் உளன் எனினும் அவற்றின் சம்பந்தத்தால் அவற்றின் கனல் எழுப்பியன்றி அம்மெய்ப் பொருளை அடைய இயலாது என்பது கருதி ஆதாரத்துள்ளே சிவனுருவை நிருமாணித்துணர்க என்றார் என்று கொள்க. சதாசிவன் என, உருவம், பெயர் என்ற நிலைகளைக் கடந்த பரம்பொருள் ஆதலின், அதற்குச் சிவன் என்னும் பெயர் சுட்டுதல் அப்பரம நிலையினும் இழுக்குதல் என்பது வேதாந்திகள் கொள்கையாதலின், சதாசிவனை அறிந்து, சிவன் என்ற பெயரில் வழிபடுக என்றார், வேதாந்திகள் கூறியாங்கு உருவமின்றிப் பயிலுதல் யாவர்க்கும் எளிதில்

சித்திப்பது கடினம் ஆதலின். இனி, ஆறாதாரத்துள்ளே சிவன் உருவை அறிந்து எனக்கூட்டிப் பொருள் உரைப்பினும் பொருந்தும். பேதம் அற - என்றது பதி பசு பாசங்களின் தொடர்பை நீக்கி என்றபடி. பசுவாகிய ஆன்மாவைப் பற்றிய பாசங்களே பதியை அடையச்செய்யாமல் தடை செய்வன ஆதலின் அப்பாசங்களைக் களைந்தெறிக என்றும், எறிந்தவுடனே பதி பசு என்ற பேதம் அழியும் என்றும், அப்படி அழிந்த நிலையில் ஈசனை வழிபடுக என்றும் விளக்கினார் 'பேதம் அற' என்றும் பாடம் உண்டு.

ஆறாதாரங்களில் சிவனைத் தனிதனி நிறுவிப் பூசை செய்வது முறை என்ப. இத்தந்திரத்தினை ஆசான் முறையினன்றி அறிதல் இயலாது. இதனையே ஷட்சக்கர நிரூபண மார்க்கம் என்ப. இதனைப் பரந்தநூல்களிற் காண்க.

**75.** பூரித் திருந்து புணர்ந்து சிவனுருவைப்
பாரித்தங் கர்ச்சிக்கு மாறு.

(இ - ள்.) பூரித்து - இரேசக கும்பகஞ் செய்தபின்னர் பூரகஞ்செய்து, இருந்து - அந்நிஷ்டைநிலையில் அமுதூறப் பொருந்தி, சிவன் உருவைப் புணர்ந்து - சதாசிவரூபத்தை மனத்தால் நிருமித்து அக்காட்சியுடன் அபேதநிலை தோன்றக் கலந்து, பாரித்து - அதனைத் தரித்து [அந்நிலையிலேயே பொருந்தி] அங்கு - அவ்விடத்தில், அர்ச்சிக்கும் ஆறு - அருச்சனை செய்யும் விதம் ஆகும் எ - று.

இதுவும் அர்ச்சனை செய்யும் உபாயம் கூறியது. அமுத நிலை எய்துவதற்கு முதற்காரணமானவை சுவாசிக்கும் முறை ஆதலின், இரேசகஞ் செய்தும், அக் காற்றினை அடைத்தும் வெளிப்படுத்தியும் அநுபவிக்கும் முறை உரைத்தார். இவற்றின் விவரம் மேலே உரைக்கப்பட்டது. இரேசக கும்பகம் செய்வதுடன் பூரகம் செய்யும்போது (சுவாசம் வெளிப்படுத்தும்போது) யோகநிலை குலையாமலும் ஈசுர தியானம் தவறாமலும், அவையும் வெளியிடாதபடிச் செய்யும் தந்திரம் அறிந்து இயற்ற வேண்டும் என்ற குறிப்பினைப் பூரித்து இருந்து என விளக்கினார். வெளிச் சுவாசத்தில் சுழுமுனையிலேனும் மூலாதாரத்து அக்கினியும் மேல் நோக்காது வெளிச் செல்லும் தன்மை முதலிற் பழகுவோர் அநுபவம் ஆதலின், அதனை விலக்கி, அமுதம் எழுந்த தோற்றத்தினின்றும் வாயுவைப் பிரித்திடுக என்ற கருத்தும் அதனாற் பெறப்படும். அன்றியும் அமுதநிலை அவ் வக்கினியால் உண்டாகியதால் அதனைச் சதாசிவ ரூபத்தோடு சேர்த்து விடும் தந்திரம் அறிந்தால் வாயு பிரியும் என்பதும் கொண்டு, சிவனுருவைப் புணர்ந்து என உரைத்தார். பாரித்தல் - பரித்தல், தாங்குதல். ஈண்டும் மற்றைய இடங்களிலும் குறிப்பிடும் இரேசக முதலியன நாடிகளிலும், இடைகலை, பிங்கலை, சுழுமுனைகளிலும் அவற்றைச் சஞ்சரிக்கச் செய்யும் தன்மையைக் காட்டும் என்பது உணர்தல் வேண்டும்.

"ஒள்ளிய தன்மனத் துள்ளே யுறநோக்கி
வெள்ளிருண் மாலை விளக்கு"

**76. விளங்கிய சிந்தையான் மெய்ப்பொருளைக் கண்டு துளங்கின்றி யர்ச்சிக்கு மாறு.**

(இ - ள்.) விளங்கிய - அறிவினால் பகுக்கும் பண்பு பெற்ற, சிந்தையால் - மனதினால், மெய்ப் பொருளைக் கண்டு - உண்மைப் பொருளாகிய சதாசிவ நிலையைப் பார்த்து, துளங் கின்றி - அசைவது இல்லாமல், அர்ச்சிக்கும் ஆறு - அருச் சனை செய்யும் விதம் எ - று.

இதுவும் அது. கடவுள் நிலை, மூலாதாரங்களின் முடி வில் இருப்பதை நாடிமுதலியவற்றால் கண்டு மனதினால் மட்டில் அறியவேண்டியதனால் 'சிந்தையால்' என்றும், அம் மனம் தானும் சதாசிவநிலை யிது, வெளித் தோற்றம் இது எனப் பகுத்தறியும் தன்மையுடன் பொருந்த வேண்டும் என்பது தோன்ற விளங்கிய 'சிந்தையான்' என்றும் உரைத் தார். மெய்ப் பொருள் - சதாசிவநிலை. காணலாவது, மேற் கூறிய சாதனங்களால் (நாடி, வாயு, அக்கினி இயக்கத்தால் அமுதம் தோன்றும்) தன்மை. அறிதல் அவ்விதம் காண் டற்கு மனம் சலனம் அற்று, மாயை பாசம் முதலியவற்றில் ஈடுபடாமல் இருக்கவேண்டும் என்பதுணர்த்த துளங்கின்றி என்றார். இதனால், அமுதம் எழுந்த பிறகும் மனவொருமை யும் பிற பொருண்மேற் செல்லாது தன் வயப்படுதலும் அவசியம் என்பது பெறப்பட்டது. 'விளக்குறு சிந்தையான்' என்றும், 'துளக்கற' என்றும் பாட பேதம்.

**77. பிண்டத்தி னுள்ளே மற் பேரா திறைவனைக்
கண்டுதா னர்ச்சிக்கு மாறு.**

(இ - ள்.) பிண்டத்தின் உள்ளே - மூலாதாரங்களின் உள்ளிடத்திலும், இறைவனை - பிரணவ சக்தியினை, பேராது - மாறுபடாது, உண்டு - பார்த்தறிந்து, அர்ச்சிக்கும் ஆறு - அர்ச்சனை செய்யும் விதம் ஆகும் எ - று. மண் - அசை.

மூலாதாரத்தின் முடிவின்மட்டி லலலாமல் உடல் முழுவதும் கடவுள் வியாபித்திருத்தலாலும், நாடி முதலிய இயங்குவ மூலாதாரத்தில் ஆகையாலும், அவ்வாதாரங்களுள்ளும் ஈசனைக் காணுக என்றார். ஆறுதாரத்தின் உள்ளிடமாவது குண்டலிகை. அவ்விடத்தில் இருந்து எழும் பாம்பு போன்ற சத்தி முடிவில் உள்ள அமுதநிலையாகிய சதாசிவத்தை அடைவதன்றிச் சாதனையால் அமுதத்தையும் ஆதாரவாயிலாய்க் கீழிறக்கிக் குண்டலியில் அடைத்து அச்சிவநிலையை அறிக என்றபடி: இதைக் கருதியே ஆதாரத்துள்ளே அறிந்து சிவனுருவை (குறள்–74.) என முன்னரே கூறினார். இனி இக்குறளில் பிண்டம் என்பதற்கு பிரிக்கப்பட்ட நேத்திரம் எனப் பொருள் கொண்டும் உரைப்பர்.

**78. பேராக் கருத்தினற் பிண்டத்தி னுள்ளினை
தாரா தனைசெய்யு மாறு.**

(இ - ள்.) பேராக் கருததினல் - மாறுபடாத மனதொடு, பிண்டத்தின் உள்ளினை - மூலாதாரங்களின் குஷ்டம

நிலையில் உள்ள அக் குண்டலிசத்தியை, ஆராதனை செய்யும் ஆறு - பூசனை செய்கின்ற விதம் ஆகும் எ - று.

இதுவும் அது. பிண்டம் என்று மீண்டும் உரைத்த தால், மூலாதாரங்களின் அடங்கிய குண்டலி சத்தியைக் குறித்ததாகக் கொள்க. பிண்டத்தில் இறைவனை நிறுக்கும் சாதனை செய்த பின்னர், அவ்விறைவனை மாறுபடாத உள்ளங் கொண்டு நினைவு கூர்ந்து இருத்தல் அவசியம் என்றபடி. ஆராதனை - அர்ச்சனை. ஒரு முறை பேராது கண்டால் (குறள் - 77.) அமையாது, எப்பொழுதும் அக் காட்சியை அநுபவித்தல் வேண்டும் என்பார் கருத்தினால் பேராது நினைந்து என்றனர்.

> "சாத்திர மோதும் சதுர்களை விட்டுநீர்
> மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்
> பார்த்தவிப் பார்வை பசுமரத் தாணிபோ
> லார்த்த பிறவி யகலவிட் டோடுமே."

என்ற திருமூலனார் வாக்கியமும் இதனை வலியுறுத்தும்.

**79. மந்திரங்க ளெல்லா மயங்காம லுன்னினைந்
துய்ந்தரனை யர்ச்சிக்கு மாறு.**

(இ - ள்.) உய்ந்து - உய்த்து அறிந்து, மந்திரங்கள் எல் லாம் - மூலமந்திரங்களாகிய பீஜங்களை, மயங்காமல் - காம வெகுளி மயக்கங்கட்குட்படாமல், உள் நினைந்து - மூலாதாரத் தின் உள்ளிடத்து நினைவு செய்து, அரனை - சதாசிவநிலையை, அர்ச்சிக்கும் ஆறு - அர்ச்சனை செய்யும் விதமாம் எ - று.

இது கடவுளைச் சிந்தனை செய்யும் வழி கூறியது. இதுவரையிலும் மூலக்கனலெழுப்பி மூந்துறும் நல்லமிர்தைச் சால அருந்தும் வழியுரைத்தார். இனி அங்ஙனம் பூசிக்கும் பொழுது மந்திரங்களால் வழிபடுக என்கின்றார்.

அமிர்தநிலை கண்டு சதாசிவ நிலையைக் குண்டலியில் நிறுத்திப் பின் பீஜ மந்திரங்களைச் செபித்து நினைவு கூறுதல் வேண்டும் என்றபடி. மந்திரங்கள் எல்லாம் என்றதால், இம்மையில் பகை கோறல், பொருள் அடைதல், நோய் அறுதல் முதலிய பயன்தரும் மந்திரங்களும், மறுமையில் சீவன் முக்தியடையும் சீலத்தை அளிக்கும் மந்திரங்களும் ஆகிய இருதிறத்தில் நமக்கு உறுதி தருவனவற்றைப் பயில்க என்பதற்கு; இதைக் கருதியே, மயங்காமல் என்றும் அடுக்கினார். காமம் வெகுளி மயக்கங்களால், சுய நலத்தையும் பிறர் பொருண்மேல் வேட்கையையும் உண்டாகப்பெறுவதால் அத்தகைய பயன்தரும் மந்திரங்களை ஒழிக்க என்பதற்கு 'மயங்காமல்' என விளக்கினார். உள் நினைந்து - மேற்கூறியாங்குக் குண்டலி சக்தியில் அடங்கி. உய்ந்து - உய்த்துணர்ந்து. உய்த்து என இருத்தல் வேண்டும், மெலித்தல். 'மூந்து' என்றும் பாடம் உளது.

**80.** **உள்ளத்தி னுள்ளே யுறப்பார்த்தங் கொண்சுடரை**
**மெள்ளத்தா னர்ச்சிக்கு மாறு.**

(இ - ள்.) உள்ளத்தின் - கருதிய குண்டலி சக்தியின், உள்ளே - அந்தரங்க நிலையில், உறப்பார்த்து - பொருந்தச்

சாதனை செய்து பார்த்து, அங்கு - அவ்விடத்தில் தோன்று கின்ற, ஒண் சுடரை - ஒளிவீசி விளங்கும் சோதியை, மெள்ள - மெதுவாக[த் தவறாமல்], அர்ச்சிக்கும் ஆறு - அருச்சனை செய்யும் விதமாம் எ - று. [தான் - அசை.]

இஃது அர்ச்சனை செய்யும் மார்க்கத்தின் முடிவு கூறு கின்றார். உள்ளத்தின் உள் என்றது ஆறாதாரங்களின் அந்த ரங்க நிலையாகிய குண்டலிசக்தி, உற - என்றதால் உணர்வு முதலியன கொண்டும், மூலாக்கினி எழுப்பும் விதமும், பீஜ மந்திரங்கள் உச்சாரணம் செய்தும் பழகும் சாதனம் அனைத் தும் கொள்க. ஒண் சுடர் - சதாசிவநிலை; முன்னரே விளக் கப்பெற்றது. ஈசன் அடியார் மனதிலும் மறைந்து வசிப்பவ னாதலாலும், நாம் மறக்க அவன் விலகும் பண்புடையா னாதலாலும், அவனை அப்படியே நிலைநிறுத்தல் வேண்டும் என்பது கொண்டு மெள்ள என்றார்.

> "மந்திர மாவது மாமருந் தாவதும்
> தந்திர மாவதும் தானங்க ளாவதும்
> சுந்தர மாவதுந் தூய்நெறி யாவதும்
> எந்தை பிரான்ற னிணையடி தானே."

என்றுரைத்த பெரியார் அருண்மொழியும் கருதுக.

# ஒன்பதாவது அதிகாரம்

## உள்ளுணர்தல்

அமுதநிலை கண்டறிந்து அங்குச் சதாசிவநிலை காணுந்தோறும் அர்ச்சனை செய்யும் அவசியத்தை உரைத்தது, அதன் பின்னர் அவ்வர்ச்சனை செய்யுங்கால் தன்னுணர்வு முற்றும் இருத்தல் அவசியம் என்பதை இவ்வதிகாரத்தில் உரைக்கின்றார். இவ்வுணர்வுதான், மற்ற பஞ்சபூதங்களைப் போலன்றி சீவாத்மாவுடன் ஒன்றியதாய்ப் பிறப்புத்தோறும் தொடர்ந்து வந்து பயனளிக்கும் தன்மையது. உள் உணர்தல் - உள்ளே அந்தக்கரணமாயிருக்கும் அதனை அறிதல்; அறிந்து அதனால் ஈசனை யருச்சனை செய்க என்றபடி. இவ்வுணர்வுதான் இல்லை என்றால், இதுகாறும் முயன்று அறிந்த ஈசுரநிலையை மனதில் நிறுத்திவைப்பது இயலாது; முத் தீக்குணமும் உடன்கலந்து அந்நிலையைக் குலைப்பதை விலக்கும் இயல்பினது உணர்வு. இதைக் கருதியே பெரியோர்,

> "ஓடினேன், ஓடி யுய்வதோர் பொருளாம்
> உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
> நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
> நாராயணா வென்னு நாமம்" என உரைத்தார்.

**81. எண்ணிலி கோடித் தவஞ்செய்தீங் கீசனை**
**யுண்ணிலைமை பெற்ற துணர்வு.**

(இ - ள்.) எண் இலி - எண்ணிக்கை இல்லாத, கோடித் தவம் செய்து - கோடிக்கணக்கான தவங்கள் செய்து, ஈங்கு -

இப்பிறவியிலேயே, ஈசனை - சதாசிவநிலையை, உள் நிலைமை பெற்றது - ஆறுதாரத்தினுள் குண்டலி நிலையில் அமையப் பெற்றது, உணர்வு - உணர்வு எனப்படும் எ - று.

இஃது உணர்தல் இதனை எனபது கூறுகின்றது. குண்டலிசக்தியிற் குடிகொண்டசக்தி மேல்நோக்கிச் சூனிய நிலை என்கிற சதாசிவ ரூபத்தில் ஈடுபடும் நிலையை உணர்ந்து, வாயுவைத் தம்பித்து நிறுத்தி அதனை அறிந்துகொள்ளும் சக்தியையே உணர்வு என்று கூறுகின்றார். இவ்வுணர்வு பெறுதல் அரிது என்பது தோன்றவும், பலகாலமாகத் தவத்தாலும், அதனை யொத்த தூய ஒழுக்கத்தாலும் மட்டில் பெறமுடியும் என்பது விளங்கவும், எண்ணிலி கோடித் தவம் செய்து என்றார். எண்ணிலி கோடி என்பது பெரும்பேரெண்ணைக் குறித்தபடி; அவ்வளவுதாம் அல்லது அவ்வளவு காலம் தவம் இயற்றி என்றார். ஓராயுளில் செய்தது எழுமையும் ஏமாப்புத் தருதலின், இத் தவம் தான் முன்பிறப்பில் செய்திருப்பினும், இப்பிறவியிலே பயன்படும் என்பது அறியற்பாலது. இனி, முன்னதாகப் பல பிறவியிற் செய்த எண்ணிலி யூழித் தவம இப்பிறவியில் பயன் தரும் என்பதே அன்றி, அவ்வளவு பயனையுட ஒரே பிறவியிலும் பெறுதல் இயலும் என்பதும் உணர்தல் வேண்டும். இதை நோக்கியே தவம் செய்து 'ஈங்கு'ப் பெற்றது என்றார்.

இனி 'எண்ணிலியூழிதவம்' என்றும் பாடம் கொண்டு, ஊழிக்காலம் வரையில் என்றும் பொருள் கூறுவர். இனி

ஊழி என்பதற்கு ' அசைவற்ற தன்மை ' என்றும் உரைப்பர். உள் நிலைமை - குண்டலி நிலை. உணர்வு, மேல் உரைக் கப்பட்டது. உணர்வாவது உள் நிலைமையில் ஈசனைப்பெற் றது எனக் கூட்டுக.

## 82. பல்லூழிக் காலம் பயின்றரனைப் பூசித்து நல்லுணர்வு பெற்ற நலம்.

(இ - ள்.) பல் ஊழிக் காலம் - பல யுகாந்தமாகப், பயின்று - சாதனமுறையில் ஈடுபட்டு, அரனை பூசித்து - சதாசிவமூர்த்தியைப் பூசனை செய்து, பெற்ற நலம் - பெற்ற பயனாவது, நல் உணர்வு - நன்மையைத் தரும் உணர்வு ஆகும் எ - று.

இதுவும் உணர்வின் இலக்கணம் கூறியது. மேல் 'எண்ணிலி கோடித்தவம்' என்றபடி பலகோடி விதமாகவும் பலகோடிமுறையாகவும் தவஞ்செய்த நல்வினையின் பயனாகவே ஈசுரஞானமும் தரிசனமும் கிடைக்கும் என்றார். பயிலுதல்- வேறு விஷய சம்பந்தமுடைய வாசனைகளில் மனமும் மெய் யும் செல்லாமல் ஈசுர தியானத்திலேயே ஒழுகுதல். பூசித்து- மேல் உரைத்தாங்கு அமுதநிலைகண்டு அர்ச்சனைசெய்து, 'அர்ச்சித்து' என்றும் பாடம் உண்டு. பயின்று பூசித்து பெற்ற நலம் நல் உணர்வு என முடிவு கூறுக. அவ்விதம் ஒழுகுவதால் பெறுகின்ற நன்மையாவது உணர்வு உண்டாகப் பெறுதல்.

## 83. எண்ணற் கரிய வருந்தவத்தி னலன்றே நண்ணப் பெறுமுணர்வு தான்.

(இ - ள்.) எண்ணற்கு அரிய - மனதினால் எண்ணுவ தற்கும் அரிய, அரும் தவத்தினால் அன்றே - செய்தற்கும்

கடினமான தவவொழுக்கத்தால் அல்லவோ, உணர்வுதான் - நல்லுணர்வு, நண்ணப்பெறும் - அடையப் பெறும் எ - று.

இதுவும் அது. இக்குறளில் தவத்தின் அருமையும் கூறப் பட்டுளது. தவஞ் செய்வதால் பெறத்தகும் இடையூறுகளின் பெருக்கினை நினைக்கவும் ஒழுக்கத்திற் செய்து முடிக்கவும் கடினம் எனவும் விளக்குவதற்கு எண்ணற்கரியதவம் என்றும், அரும்தவம் என்றும் அடைமொழி கூறினார். விஸ்வாமித்திரர் முதலிய அரசர்கள் அரிதின் வருந்தி யியற்றிய தவத்தினைக் கெடுக்க மேனகை முதலிய இடையூறுகள் இடையுற்றதும், பிறவும், சாத்திரவாயிலா யறியலாம்.

இனித் தவம்தான், மேல் அதிகாரங்களில் உரைத்த அமுதநிலை எழுப்பும் ஒழுக்கத்தைக் குறிப்பிட்டதாகக்கொள்ளுதல் சிறப்பு. முற்கூறிய விஸ்வாமித்திரன் முதலியோரும் இத்தகைய தவத்தையே ஆற்றி ஒழுகினர் என்பதும் சிறப்பாகும்.

**84. காயக் கிலேச மறையப் பயனன்றே**
**யோயா வுணர்வு பெறின்.**

(இ - ள்.) காயக்கிலேசம் - தேகத்தினை எழும் சஞ்சல நினைவுகள், மறைய - அழிந்ததனால், (தோன்றுகின்ற) ஓயா - அழியாத, உணர்வு - உணர்ச்சியை, பெறின் - அடைந்தக் கால், அன்றே பயன் - அடைவதல்லவா பயன் எனப்படுவது. எ - று.

இஃது உணர்வு பெறுதற்குத் தடையாயிருப்பவற்றைக் கூறுகின்றது. தேகம் படைத்ததனால் உடலுக்கு ஊறு உண்டாகுமோ என்றும், வியாதிவாய்ப்படுமோ என்றும், பஞ்சபூதங்களின் இயைபினால் உண்டாகும் இச்சைக்கும் வெறுப்புக்கும் ஈடுபட்டு; அவற்றைப் பெறமுடியுமோ அல்லது விலக்கமுடியுமோ என்ற ஏக்கமுமே, உணர்வு பெறுதற்குப் பெருந்தடை என்றார். பஞ்சபூதங்களின் இயைபாவது, கண் முதலியவற்றால் அறிந்த பொருள்களின் உவந்தவற்றை அடையவேண்டும் என்ற விருப்பமும், அடையாக்கால் உண்டாகும் ஏக்கமும், அதுபோல் வெறுப்பு உண்டாம் பொருளை ஒழிக்க வேண்டுமே என்ற விரக்தியும், அவை ஒழியாக்கால் உண்டாகும் ஆயாசமும் என்க. இவைகூறவே, தேகத்தொடு சம்பந்தப்பட்ட, தாய் தந்தை உடன் பிறப்பு முதலியோரும், மனைவி மக்களும், அன்பிற்கலந்த நண்பரும், உறவினரும் என்ற இத்தொடக்கத்தினர்பால் எழுகின்ற உள்ளக் கிளர்ச்சியும் மேற்கூறிய காயக்கிலேசத்தில் அடங்கும் என்க. காயக்கிலேசம் மாய்ந்ததெனின உணர்வு தானே எழ ஏது உண்டாகிறதென்பது உணர்த்தவே, காயக்கிலேசம் மறைய (பிறக்கும்) ஓயா வுணர்வு என்றார். காயக்கிலேசம்போல மறையும் இயல்பினதன்று என்பது மறிக. பெறுதல் அருமை கூறுதற்குப் 'பெறின்' என்றார்.

> காயக்கிலேச முணர்ந்த பயனன்றே
> யோயா வுணர்வு பெறல்

எனவும் பாடங்கொண்டு உணர்தலின் பயனல்லவா உணர்வு

பெறுவது எனவும் உரைப்பர். நன்றே எனப் பிரித்துப் பெரியபயனும் என உரைப்பினும் பொருந்தும். நன்று-பெரிது.

**85. காடு மலையுங் கருதித் தவஞ்செய்தாற்**
**கூடு முணர்வின் பயன்.**

(இ - ள்.) காடும் - உடலின் பரவியுள்ள ஞானப்பெருக்கையும், மலையும் - மலைபோல் உயர்ந்த நிலையாகிய குண்டலினியின் உச்சியையும், கருதி - மனதில் சிந்தித்து, தவஞ்செய்தால் - சதாசிவனோடு கலந்திருப்பின், உணர்வின் பயன் - உணர்தலின்பலனானது, கூடும் - சித்திக்கும். எ-று.

இஃது உணர்வினைப் பெற்றபின்னர் அதனால் அடையும் பயனை உரைத்தது. இச்சூத்திரத்தில் சொற்கள் பரியாயமாக வந்தன. தவஞ்செய்யப் போகின்றவர் நிர்மானுஷ்யமான காட்டிலும் மலையிலும் இருந்து தவத்தில் முயல்கின்றார்கள். அது போல் அமிர்தநிலையை அடையும் தவத்திலும், காடுபோற் பரந்த நாடி முதலியவற்றிற் றோன்றும் ஞானமும், யாருக்கும் எட்டமுடியாத மலைபோல் உயர்ந்து, ஆறு ஆதாரங்களின் முடிவாகிய உச்சி என்னும் உயர்நிலையும் அடைந்து, பஞ்சபூதங்களின் சேட்டையினின்றும் நீங்கி அவ்வமுதச் சுரப்பினைக்கண்டு அனுபவிப்பர் என்றபடி. காடும் மலையும் தவஞ்செய்தற்குத் துணைக்கருவிகள் (உபகரணங்கள்); ஆகவே காட்டினை அஞ்ஞானக்காடு எனப் பொருள்கொள்ளின், அவ்வஞ்ஞானத்திற் பொருந்தித் தவஞ்செய்க என்னும்படியான விபரீத உரை தோன்றுவதால் அது பொருந்தாமை உணர்க. காட்டிற் பல

வகைச் செடிகளும் அடர்ந்து செறிந்திருப்பதுபோல, நாடிகள் எழுபத்தீராயிரமாக அடர்ந்து படர்ந்திருப்பன எனக்கொள்க. நாடிகளினூடே முறையே வாயுவும் அக்கினியும் பிரவேசித்து மூலக்கனலை எழுப்புவதனால், அதன் வழியாக ஞானம் உதிப்பது ஒருதலையாதலின் நாடிகளிற் றோன்றும் ஞானம் என்று உரைக்கப்பட்டது. கருதுதல் - நினைத்தல், உணர்வின்பயன் - சதாசிவரூபத்திற் கலந்திருத்தல்.

## 86. பண்டைப் பிறப்பின் பயனுந் தவத்தினற் கண்டங் குணர்வு பெறின்.

(இ - ள்.) தவத்தினால் - மேல் உரைத்த முறையின் தவத்தினால், கண்டு - சதாசிவ நிலைகண்டு, அங்கு - அப்பொழுதே, உணர்வுபெறின் - நல்லுணர்வு பெறுவானானால் பண்டைப்பிறப்பின் பயனும் - இதற்குமுன் எடுத்த பிறவிகளிற் செய்த நற்கருமத்தின் பயன் எனக்கொள்க எ - று.

இது முற்பிறவியின் பயனுநப்பெறுவது உணர்வு என விளக்குகின்றது. பல்லூழிக்காலம் பயின்று (குறள் - 81) என்றதற்கிணங்கப் பண்டைப் பிறவிகளின் பயனாகவே தவஞ்செய்து பெறலாம் உணர்வு எனப்பட்டது. இப் பிறவியில் நல்லுணர்வு பெறுதல், பலநாட்களாக முற்பிறவிகளிற் பயின்றுவந்த தவம்முதலிய நல்வினையினால் சித்தித்தது எனக்கொள்க இக்கருத்தினை அடுத்த குறளிலும் விளக்குவார்.

உணர்வு பெறல் என்றும் பாடம்

**87. முன்னைப் பிறப்பின் முடியாத் தவத்தினாற்**
**பின்னைப் பெறுமுணர்வு தான்.**

(இ - ள்.) முன்னைப் பிறப்பின் - முந்திய ஜென்மங்களில், முடியா - முடிவுபெற்றுப் பக்குவம் அடையாத, தவத்தினால் - தவத்தின்பயனாக, பின்னை - பின் பிறவியாகிய இப்பிறப்பில் முடியும்படிச் செய்யும் தவத்தின் பயனாக, உணர்வுதான் - நல்லுணர்வினை, பெறும் - அடையப்பெறலாம், எ-று

இதுவும் அது. பிறவிகளின் செயலும் பயனும் ஒரு தொடராக அமைந்துள்ள வாதலான் முற்பிறவிகளில் ஈசுர தியானம் செய்ததன் பயனாக அடுத்தடுத்துவரும் ஜெனனங்களில் அத் தியானம் முதிர்ச்சி அடையப் பரிபக்குவம் அடைந்த நிலையில் இப்பிறவியில் சித்திக்க முடியும் என்பது கருத்து. முற்பிறவிகளிலேயே அப்பயனைக் காணலாகாதோ எனின், காணலாம்; அப்படிக் காண்பதற்கு ஏதோ சில இடையூறுகள் இருந்தன ஆதலின் பயன்பெறாது மேலைப் பிறவியில் பயன் அடைய இயலும் என்க. அன்றியும் முற்பிறவியிலேயே அப்பயனை அடைந்திருந்தால், பற்றுகள் அற்று, மறு பிறவி யில்லை என்றாகும்; என்னை,

'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என உரைத்தார் ஆதலின். 'முயன்ற தவத்தினால்' என்றும் பாடபேதம்.

**88. பேராத் தவத்தின் பயனாற் பிறப்பின்மை**
**யாராய்ந் துணர்வு பெறின்.**

(இ - ள்.) பேரா - மாறுபாடு இல்லாத, தவத்தின் பயனால் - மேற்கூறிய சாதனைகளின் பயனாக, ஆராய்ந்து - உள்

விசாரணை செய்து, உணர்வுபெறின் - நல் உணர்வு அடையப் பெற்றால், பிறப்பின்மை - மறுபிறவியில்லாமை ஆகும் எ - று.

இதுவும் பயன் கூறியவாறு. சாதனை முயற்சியால் மறுபிறப்பு ஒழியும் என்றார். அச்சாதனைதான் மாறுபாடின்று ஒரு நிலையிற் செய்தல் வேண்டும் என்பது தோன்ற பேராத் தவம் என்றார். பயனால் - பயனாக என உரைக்க. இனிப் 'பயனும்' என்ற பாடம் கொள்ளினும் பொருந்தும்.

ஞானக் கனலெழுந்து மேனிலையில் சோதியொடு வேற்றுமை யின்றி விரவியபோதிலும், உள்ளத்தில் எழும் சந்தேக விபரீதங்களை ஆராய்ந்தறிந்து அறிவால் அடக்கினால் அன்றிப் பஞ்சபூதங்களின் சேஷ்டையினைப் பறக்கச்செய்ய இயலா தென்பது விளக்க ஆராய்ந்து என்றார். இவ்வாராய்ச்சியினையே தத்துவ விசாரணை என்ப. நல்லுணர்வு பெற்றதும், பந்த பாசங்கள் விலகும் என்றும், அதனால் வீடு சித்திக்கும் என்றும், அது சித்திக்க மறுபிறவி என்பது கிடையாது.

**89.** **ஞானத்தா லாய வுடம்பின் பயனன்றே**
**மோனத்தா லாய வுணர்வு.**

(இ - ள்.) ஞானத்தால் - அறிவினால், ஆய - அமைந்த, உடம்பின் பயன் - சூக்கும சரீரத்தின் முயற்சியாற் பெறுகின்ற பயன், மோனத்தால் - மௌனநிலையால், ஆய - அடையப் பெறும், உணர்வு அன்றே - உள்ளுணர்வு அல்லவா

இது சூக்கும சரீரத்தின் இயல்பினைற் றவமும், அறிவும், மௌனநிலையும் உள்ளுணர்வும் உண்டாம் என்று கூறுகின்

றது. தவத்தின் பயனுகச் சூக்குமசரீரமாகிய ஆருதாரம் முதலியன அறிவொடு பொருந்துவன ஆதலின் ஞானத்தாலாய வுடம்பு என்ருர். அந்நிலை யெய்திய காலத்து முழுவதும் சரீரமாக விளங்குமாதலின் அத்தகைய உடல் பெறும்பயன் உணர்வு என்றபடி.

மேற்கண்ட சாதனுபயிற்சியில் ஐங்காரணங்களும் ஆதாரங்களுள் அடங்கிவிடுதலின் சிந்தனை யொழிய மொழியும் செய்கையும் மாய்ந்து, வார்த்தையாடும் வன்மையும் மறைந்து போகின்றது. இவ்வானந்த நிலையை அடைந்தவர் அதன் இயல்பை எடுத்துரைக்கவும் இயலாதவராய் அதனுள் மூழ்கி, மௌனநிலை என்னும் சமாதியைப் பெறுகின்றனர். இதைக் கருதியே, "கண்மூடி மௌனியாகித், தனியே யிருப்பதற் கெண்ணினேன்" என்று கூறினர் தாயுமானவர். மௌனநிலை அறிவின் நிலை என இவ்வாசிரியரே பிறண்டும் 'மோனமென்பது ஞானவரம்பு" (அன்னையும் பிதாவும்) என உரைத்ததும் அறிக.

**90. ஆதியா யொன்று மறிவைப் பெறுவதுதா**
**னீதியாய்ச் செய்த தவம்.**

(இ - ள்.) நீதியாய் - நேர்மையான முறைமையில், செய்த - இயற்றிய, தவம் - தவத்தின் பயனுவது, ஆதியாய் - பசுவென்னும் சீவன், அதன் பூர்வநிலையாகிய பதியின் தன்மையை அடைந்து, ஒன்றும் - அப் பதியுடன் கலக்கும், அறிவை - உள்ளுணர்வாகிய ஞானத்தை, பெறுவதுதான் - அடைவதுவே ஆம் எ - று.

இஃது உள்ளுணர்வை கூறுகின்றது. இவ்வதிகாரத்துக்குப் புறனடையாகவும் கொள்ளலாம்.

ஈசர நிலையைப் பெறும் பூசையில் ஒரு பயனையோ கருமத்தையோ கருதுதல் கூடாது என்றபடி. ஆதி - பூர்வநிலை. ஆவது, பாசத்தின் கட்டுப்பட்ட பசு பல பிறவிகள் அடைவதன் முன்னர், பரிசுத்தமான ஈசுரநிலையில் இருந்தநிலை. அந்நிலையினின்றும் வழுவியது பாவ கருமங்களால் என்க.

இனிப் பாவ கருமங்கள் ஒழிதல் எங்ஙனமோ எனின்,

"முற்செய் வினையின் பயன்றுய்த் ததுவலர்ந்தால்
பிற்செய் வினையின் பிற்போதல் ........"

என்று உரைத்தபடி அனுபவித்தே கழிக்க வேண்டியது என்றாலும், பஞ்சுப் பொதிபோன்ற பாவச் சஞ்சிதச் சுமை கடவுட் கருணை என்னும் தீப்பொறி தாக்கிய மாத்திரம் தீய்ந்து அழிந்துபோகும்; தவஞ்செய்வது இவை அழிய வேண்டும் என்பது கோரியோ எனின், அல்ல, ஒருவித நன்மையும் விரும்பாது ஈசுரன் நிழலையிறைஞ்சவேண்டும் என்ற ஒரு நோக்கமே கொண்டொழுகவேண்டும் என்றபடி.

ஆதியாய் ஒன்றும் அறிவு-பழைய நிலையிலேயே நித்தியமாயிருக்கும் சதாசிவ நிலையோடு பொருந்த வைக்கும் உள்ளுணர்வு. இனி, 'ஆதியோ டொன்று மறிவு' என்றும் பாடம் ஓதுவர். சாதனைகள் பயிற்சியின் பயனாகத்தானே பயன் கிடைக்கும் என்பதற்கு 'நீதியாய்' என்றார். பிரதியுபகாரமோ, பலனோ கருதாது ஈசுரனை அடைதலே, கருத்தாகக்

கொண்டு செய்யும் வழிபாட்டுக்கு 'நிஷ்காமிய பூசை' என வடமொழியாளர் உரைப்பர். 'நீதியால்' என்றும் பாடம்.

இனிக் குண்டலி சத்தியென்னும் அக்கினி, தீப்பிழம்பாகிய சிவபிரானது சத்தியுடன் ஆதிநிலை அடைந்து கலத்தல் என்று கூறினும் பொருந்தும்.

---

# பத்தாவது அதிகாரம்

## பத்தியுடைமை

அஃதாவது கடவுட்டிறம் அறிந்து அவன் அருள் நினைந்து பத்திபூண்டொழுகுதல். உள்ளுணர்வு பெற்றதன் பயனைக் கடவுளது உண்மை நிலையும் பெருமையும் நுண்ணிதின் உணர்தல் கூடும் ஆதலின், அவ்வுணர்ச்சியின் பயனைக் கடவுண் மாட்டுப் பற்றுள்ளங்கொண்டு அன்புபாராட்டுவது. வெப்பமுற்றோர் உள்ளத்துணர்தலன்றிப் புறத்திலும் வெயர் வைத்தோற்ற முதலிய மெய்ப்பாடுகளால் காட்டுவதேபோல், கடவுளை அமிர்தமெனப் பருகியவர் தம்மையும் அறியாது புறத்தே மெய்ப்பாடு தோன்ற ஒழுகுதல் இயல்பு.

> "பித்தர் சொன்னவும், பேதையர் சொன்னவும்
> பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ"

எனக் கம்ப நாடார் கூறியதுங் காண்க. பித்தர் செய்கையும், பேதையர் செய்கையும் அவரவர் மனவமைதியின்மையால், நகைச் சுவைக்கு இடம் தராநின்றது. அதுபோலவே பத்தர்களும் தாம் இன்னது செய்கின்றேமென்று உரைத்தலின்றி

அன்பின் பெருக்காற் செய்வன பிறர்க்கு நகைதருவன போற் றோன்றினும், அதன் உயர்வு உய்த்துணரவேண்டிய தொன்று.

> "ஆடிப்பாடி அரங்கவோஎன் றழைக்கும்
> தொண்ட ரடிப்பொடி
> ஆடநாம்பெறில் கங்கைநீர் குடைந் தாடும்
> வேட்கையென்னாவதே"

என்று மாறன் சடகோபன் உரைத்ததுங் காண்க.

இப் பக்திக்கு உபகரணங்கள் கைகால் முதலிய எல்லா அவயவங்களும் தலையால் ஈசனைக்கண்டு வணங்கவும், கண்க ளால் அவன் உருவைக் காணவும், கரங்களால் கூப்பி வணங் கவும், நாவால் துதிக்கவும் பிறவும் பயன்படுவன என்பது "தலையே நீ வணங்காய்" என்ற தொடக்கத்துப் பாசுரங்களான் அறியலாம்.

## 91. பத்தியா லுள்ளே பரிந்தரனைத் தானோக்கின்
## முத்திக்கு மூல மது.

(இ - ள்.) தான் - ஜீவான்மா, பத்தியால் பரிந்து - பத்தி யின் பெருக்கால் அன்பு கொண்டு, அரனை - சதாசிவ நிலையை, உள்ளே நோக்கில் - ஆறாதார நிலையில் காணப்பெறில், முத் திக்கு - பிறவியற்ற மோக்ஷ நிலைக்கு, அது மூலம் - விதை போன்றதாம் அது எ - று.

இது பத்திக்கு இலக்கணம் வகுத்தவாறு. பத்தியுடை யவன் ஈசுரனைத் தன் மனதிலேயே நிருமித்து அன்பு கெழு

மிக் காணவேண்டும் என்றபடி. உள்ளே நோக்குதல் மேல் தவத்தாலும் பிறவாலும் ஈசுரனை மனதில் (குண்டலி சிரசில்) நிறுத்திச் சாதனை செய்தல் பரிதல் - அன்பு கொள்ளுதல். தாய் தகப்பன்மாரிடத்தும், உறவினரிடத்தும் கொள்ளும் அன்பினால் அவர்களுக்கு நன்மையுறின் நயந்து மகிழ்வதும், தீமையுறின் சிதைந்துவருந்துவதும் செய்வது உலக இயற்கை; அத்தகைய அன்பினைக் கடவுண்மாட்டுப் பதித்து, அன்னையப்பனென்றோ, தோழனென்றோ, தலைவனென்றோ கருதி, அன்புபாராட்டி அதனால் உறும் மகிழ்வினைக் காண்டலே பத்தியாதலின், பத்தியால் பரிந்து நோக்கி என்று கூறினார். அத்தகைய காட்சி முத்திக்கு விதையிட்டது போலன்று கூற, அது மூலம் என்றார். முத்தி - பிறப்பின்மை; மௌனநிலை எனவும் பொருள் கூறுவர்.

## 92. பாடியு மாடியும் பல்காலு நேசித்துந் தேடுஞ் சிவ சிந்தையாம்.

(இ - ள்.) சிவ சிந்தை - சதாசிவன்பால் பூண்ட பத்தியின் நினைவு, பாடியும் - புகழ்ப்பாக்களால் சிவனைத் துதித்தும், ஆடியும் - பத்திப்பெருக்கால் நடனம் செய்தும், பல்காலும் நேசித்தும் - இவையின்றேடு எந்தக் காலத்திலும் அன்பு பூண்டும், தேடும் - அச் சிவசொரூபத்தைத் தேடும், (ஆம் - அசை.) எ - று.

இதுவுமது. சிவனைச் சிந்தனை செய்யும் அத்தொழிலே ஜீவதனப் பாடவும் ஆடவும் செய்து எஞ்ஞான்றும் ஈசுர

நிலையிற் காதல்கொண்டு தேடச்செய்யும் என்றபடி. இனிச் 'சிந்தையால்' என்றும் பாடங்கொண்டு. சிந்தனையால் தேடுங்கள் என்று பொருள் கூறுவர்.

பாடுதல் என்பது பக்தி மேலிட்டு மெய்ம்மறந்து துதித்துப் பாடுவது. "ஆடிப்பாடி அரங்கவோ என்றழைக்குந் தொண்டர்" எனக் குலசேகரப் பெருமான் உரைத்ததுங் காண்க. பாடுதல் சப்தமாத்திரை யாதலின், ஓசையே வடிவு கொண்ட கடவுளை அடைதற்கு அவ்வோசையே துணைக் கேட்டல் வேண்டுமென்று பாடி என்றார் எனினுமாம். ஆடுதல், மெய்ம்மறந்து ஆனந்த மிகுதியால் நடனஞ்செய்வது. சிவபெருமானே உலகோர் மயங்க நிருத்தனஞ்செய்து 'நடராஜன்' என்ற பெயரும் ஏந்தியுளானன்றோ. நேசித்து - பத்தி என்னும் நேசம், (அன்பு) பூண்டு. தேடும் சிவசிந்தனையே தேடி அறியும் என்றபடி. சிந்தனை செய்வதனால், அதன் ஆராய்ச்சியிற் கடவுளை நாடுதல் என்றபடி.

நேசித்தும், ஆடியும் பாடியும் என்க. நேசித்துத் தேடும் என்று பொருள்கொள்வது சிறப்பின்று.

## 93. பூசனை செய்து புகழ்ந்து புடைபட்டு நேசத்தா லீசனைத் தேடு.

(இ - ள்.) நேசத்தால் - பத்திப் பெருக்கினால், பூசனை செய்து - நியமவிதிப்படிப் பூசைகள் செய்து முடித்து, புடைபட்டு - மனம் ஒருவழியிற் பொருந்தப்பெற்று, புகழ்ந்து -

ஈசனது கீர்த்தியைப் பாடி, ஈசனை - சர்வேசரனை, தேடு - ஒளிந்த இடங்கண்டு அறிக எ - று.

இதுவும் அது. பத்தி செய்து மனமொரு நிலையில் அமையுங்கால் ஈசன் குண்டலிநிலையில் மாறி அகக்கண் காணாமல் மறையும் எல்லையில், அவ்விதம் மறையாவண்ணம் பாதுகாத்து மகேசுரனைக் கண்டு மகிழ்க என்றபடி. ஈசன் நேசம் - பத்தி. பூசனை, புகழ், நேசம் என்பன முன்னரே விளக்கப்பட்டன. புடைபடுதல் - ஒருவழிப்படுதல்; இச் சொற்கு "மனங்கூர்ந்து" என்றும் பாடம் கொள்வர்.

**94. அன்பா லழுது மலறியு மாள்வானை**
**யென்புருகி யுள்ளே நினை.**

(இ - ள்.) அன்பால் - பக்தி விசேடத்தால், என்பு உருகி - எலும்பும் உருகும்படி, அழுதும் - ஈசனடி அடையும் ஏக்கத்தில் அழுதும், அலறியும் - பாவங்களின் தொடர்புக் குப் பயந்து வாய்விட்டு அலறியும், ஆள்வானை - சர்வேசுரனை, உள்ளே - ஆறுதாரத்தினுள்ளே, நினை - நினைத்துப் பூசை செய்க எ - று.

இதுவும் பத்தியான் மிகுந்த செய்கை கூறியது. அன் பால் அழுதலாவது - பேரின்ப அனுபவம் விரும்பிப் பத்தி யின் பெருக்கத்தால்,

"உடல்குழைய வுள்ளெலாம் நெக்குருக விழிநீர்கள்
 ஊற்றெனை வெதும்பி யூற்ற." (தாயுமானவர்)

நிற்கும் நிலையாம். அலறுதல் - பந்தபாசத்துக்கஞ்சி யென்க.

ஆள்வான் - ஆளும் இயல்பினையுடைய கடவுள். என்புருகல், அன்பின் சிறப்புக்கு அறிகுறி. திருவள்ளுவனார், "என்பும் உரியர் பிறர்க்கு" என்றதுங் காண்க. அத்தகைய எலும்பு ஈசுரநிமித்தம் உரைந்து உருகிற்று என்க. உள்ளே - ஆதாரங்கள் ஆறின் உள்ளும் முடிவிலும்.

**95. கண்ணா லுறப்பார்த்துக் காதலாற் றனோக்கி
லுண்ணுமே யீச னொளி.**

(இ - ள்.) கண்ணால் - அகக் கண்ணால், உறப் பார்த்து - உள்ளிடத்துப் பொருந்தவைத்து இருப்பது அறிந்து, காதலான் - பத்தி கொண்டு, தான் நோக்கில் - ஜீவன் உற்றுப் பார்த்தால், ஈசன் ஒளி - அச் சதாசிவ ரூபத்தின் பிரகாசமானம், உண்ணுமே - ஆசாபாச மாயைகளைப் புசித்துவிடும்.

இது பத்தியின் சிறப்பால் மாயையை மாய்க்கும் திறன் கூறியது. பத்தியொடு பார்க்குங்கால் நாம் கருதாதபோதிலும் ஈசன் ஒளியியல்பினில் காமக்குரோதாதி மாயைகளை அழிக்கும் என்றபடி.

கண் - நாடி முதலிய அகக் கண். உறப் பார்த்தல் - சாதனைமுறையால் அக்கனலை எழுப்பி அமிர்தம் பெருக்கிக் குண்டலியிற் சேர்த்தல். பார்த்தலாவது, இவை பொருந்தியிருக்கின்றனவா என உய்த்துணர்தல். நோக்காவது, ஈசன் மறையாதபடிச் சாதனையால் நிறுத்துவது. காதல் - பத்தி. காதலுற்றார் சுயநலமிறந்தவராதலின், கடவுண்மாட்டுக் கழி பேரன்பு கொண்டாரும்தானென்னும் நினைவும் அற்றவராவர்

என்பது விளக்கியது. ஈசனது ஒளி - அருட்பெருஞ்சோதி. அஃது உண்ணும் எனவே மாயையாதியை பஞ்சப் பொதி யைப்போற் தகிக்கச்செய்து அழிக்கும். உண்ணுப் பொரு ளேயும் உண்டதுபோலக் கூறுதல் மரபாதலின் 'ஒளி உண் ணும்' என்று உரைத்தார். வெட்டுண்டான், அடியுண்டான் என வழக்குஇருத்தலும் அறிக. இனி,

"கண்ணு லுறப்பார்த்துக் காதலா னீநோக்கி
னுன்னுளே யீச னுளன்"

என்றும் பாடபேதம் காணப்படுகின்றது. இதன் பொரு ளாவது உள்ளே நோக்கிய இடத்து ஈசன் அந்தரியாமியைக் குண்டலினிநிலையில் தங்கியிருப்பதை அறியலாம்.

**96. எல்லா வுயிரையு மீசனெனக் கருதி
னில்லானே யீச னிலைத்து.**

(இ - ள்.) எல்லா உயிரையும் - உலகில் காணப்பெறும் ஜீவராசிகள் அனைத்தையும், ஈசன் - ஈசுரத்தன்மை யுடையது, எனக் கருதில் - என்று மனதில் நினைத்து ஒழுகினுல், ஈசன் - அவ்வீசன், நிலைத்து - உள்ளத்தில் முழுமையும் நிலையாகப் பொருந்தி, நில்லானே - தங்கிவிட மாட்டானே எ - று.

இது பரம்பொருளின் இலக்கணம் கொண்ட பல பொருளேயும் பக்தியால் பாராட்டுக என்றது. உலகத்திற் றேன்றியிருக்கும் எல்லாவகையான பொருள்களினிடத்தி லும் தெய்வத்தன்மை பொருந்தியிருத்தலும் அவ்வப்பொருள் அவ்வவற்றுக்கேற்ற அறிவோடு கடவுளின் பெருமை

பிறவுயிர்மாட்டுக் கொள்ளும் அன்பு கடவுட்பத்தியினும் சிறந்த தூய வொழுக்கம் என்பது ஆன்றோர் கொள்கை. இதனையே அஹிம்சை யென்றும், சீவகாருண்ணியம் என்றும் உரைப்பர். இச் சிறப்புப் பெற்றவன் ஈசனைச் சிந்தனையின்றியும் அடைதல் கூடும் என்பதைக் கௌதம புத்தர் விளக்கியுள்ளார். இதைக் காட்டவே, ஈசன் நிலைத்துக் குடியிருப்பன் என்று உரைத்தார். ஏனென்றால், எல்லா உயிரும் தொழச் செல்லும் இயல்பினனைக் கடவுள் பாராட்டாது என் செய்யும். 'ஈசன் அவன்' என்றும் பாடம். இக்குறளுக்கு மாறாக,

> "நல்லானைப் பூசித்து நாத னெனவுருகில்
> நில்லாதோ வீச னிலை"

என்றும், 'நாத னெனப்புணரில்' என்றும், பாடபேதம் காணப்பெறும்.

**97. ஈச னெனக்கருதி யெல்லா வுயிர்களையு**
**நேசத்தாற் பார்த்துக் கொளல்.**

(இ - ள்.) எல்லா வுயிர்களையும் - எல்லா சீவராசிகளையும், ஈசன் எனக்கருதி - ஈசனுடைய குணம்பொருந்தியுள்ளனவாக நினைத்து, நேசத்தால் - மனநெகிழ்வாகிய அன்பினால், பார்த்துக்கொளல் - ஈசனது குணங்களையும் உருவத்தையும் அவ்வவற்றிற் கண்டறிந்து கொள்க எ - று.

இதுவுமது. ஈசுரனது இலக்கணம் உயிர்கண்மாட்டு இருத்தல் அறிந்து, அவ்விலக்கணம்பொருந்தியிருக்கும் விசே

ஷத்தால் அவற்றின்பாலும் அன்புபாராட்டுதல் வேண்டும் என்றபடி.

முற்குறளில் எல்லாவுயிரையும் ஈசன் என்பதறிந்தால் ஈசன் வலிய வந்தடைவன் என்று உரைத்தார். ஈண்டுப் பலன் ருனும் எதிர்பாராது ஈசனை நினைத்தோ நினையாமலோ மனம் நெகிழ்ந்து உருக்கங்கொண்டு மெலிந்து வருந்தும் சீவராசிகளைக் காக்கத் தலைப்படும் சிவகாருணிய ஒழுக்கத்தையே 'நேசத்தால்' என்று அடக்கினார். 'நேசத்தா னீநினைந்து கொள்' என்றும் பிரதிபேதம்.

**98.** அடியார்க் கடியரா யன்புருகித் தம்முட்
பதியொன்றுய்ப் பார்த்துக் கொளல்.

(இ - ள்.) அடியார்க்கு - கடவுண்மாட்டுப் பேரன்பு கொண்டு ஒழுகும் அடியார்களுக்கு, அடியராய் - அடிமைகளாய்ப் பின் சூழ்ந்து, அன்புருகி - அவர்களிடத்து உண்மைப் பத்தி பாராட்டி, தம்முள் - தம் சூக்கும சரீரத்தில், பதியொன்றுய் - ஆதாரங்கள் ஆறினும் ஒவ்வொன்றாக அவற்றுள் அவ்வடியாரை நிறுத்து, பார்த்துக்கொளல் - பக்தியால் கண்டு அறிந்துகொள்க எ - று.

இது சிவராசிகளில் மட்டுமன்றி உள்ளன்புடைய பக்தியுடையார்மாட்டு ஒழுகவேண்டிய நியதி கூறியது. கடவுளை ஆறுதாரங்களின் முடிவில்வைத்துப் பூசித்து அமிர்தநிலை காண்பதுபோல் அடியார்களை ஆதாரங்களில் இருப்பதாகப்

பாவனைசெய்து புசிக்கவேண்டும். ஈசனை வணங்குதலின் ஈசனது அடியார்ப்பூசை வேண மேன்மை உண்டாக்கும் என்பர். "இறைவன், தொண்டர்த முள்ளத் தொடுக்கம்" என இவ்வாசிரியரே மற்றொரு நூலில் உரைத்திருத்தல் அறியற்பாலது.

படியொன்றாய் - படிப்படியாய் அமைந்த ஆதாரங்கள் ஒவ்வொன்றாக. 'படி யொன்றி' என்றும் பாடம்.

**99. மெய்யன்பு கூர விதிர்ப்புற்று வேர்த்தெழுந்து**
**பொய்யின்மை கண்டுநின்று போற்று.**

(இ - ள்.) மெய் அன்பு கூர - உண்மையான பத்தி அதிகரிக்க, விதிர்ப்புற்ற - மயிர்க் கூச்செறிந்து, வேர்த்து எழுந்து - வியர்வை பெருக மூலக்கனல் எழுப்பி, பொய் யின்மை - சத்தியமான மேல்நிலையை, கண்டு - சாதனை முறையால் அறிந்து, போற்று - அனுபவித்துப் போற்றிக் கொள்க எ - று.

இது பத்தியுடையார்மாட்டுக் காட்டும் அன்பொடு கட வுண்மாட்டு எழும் பக்தியையும் ஊன்றச்செய்யும் தந்திரம் உரைத்தது. உண்மை யடியார்கள்பால் எழும் பத்தியால் ஆடியும் பாடியும் மகிழ்ந்து அந்நிலையில் பொய்ம்மையானவை மறைந்தொழிய மெய்ம்மையான கடவுள் தோன்றுவர் அதனை கண்டு போற்றுக என்றார்.

மெய்யன்புகூர - உண்மைப்பத்தி நாளுக்கு நாள் அதி கரிக்க என்றபடி; அஃதாவது, வீழ்பொருளை நச்சி அவற்றை

அடைவதற்குச் செய்யும் பூசையல்லாத நிஷ்காமிய வந்தனை. விதிர் விதிர்த்தலும் வேர்த்தலும், மெய்ப்பாடு. ஆனந்தத்தின் மிகுதியால் உள்ளங் குழைய உண்டாகும் இங்கித வேறுபாடுகள்.

"இன்னமுது கனிபாகு கற்கண்டு சீனிதேன்
எனருசித் திடவலியவந்
இன்பங் கொடுத்தநினை யென்சொ நின்னன்ப
ரிடையறா துருகி நாடி
யுன்னிய கருத்தவிழ வுரைகுளற வுடலெலாம்
ஓர்ந்தவிந் தவச மாகி
யுணர்வரிய பேரின்ப வனுபூதி யுணர்விலே
யுணர்வார்க ளுள்ளபடி காண்"

எனத் தாயுமானவர் விளக்கிய நூலுங் காண்க. "மெய்ம்மயிர் கூர விருப்புற்று" என்றும் பாடம்.

பொய்யில்லை காண்டலாவது உண்மை தத்துவப் பொருளை அறிதல். பிரபஞ்சமும், தேகமும் ஏனையவும் சடப்பொருளாய் அழியத்தக்கனவாம். என்றைக்கும் நிலை பேறில்லாத மாயைப்பொருளாய் இருப்பன என்பதை உணர்வதும், இவற்றுக்கு மேன்மையானதாய் என்றும் நிலைத்திருக்கும் மகேசுரனைக் காண்பதும் வேண்டும் என்று விளக்குதற்குப் பொய்யின்மை கண்டு என்றார். "மெய்ம்மையி லீசனைப் போற்று" என்றும் பாடம்.

நின்று - ஆறுதாரத்தின் முடிவின் சூனிய நிலையிற் கடவுளை நிறுத்திக் குண்டலிக் கனலால் தாக்கி அறியும் தன்மையிலேயே நிலைபெறச் செய்திருந்து என்றபடி.

விதிர்த்தலும், வேர்த்தலும் அடியார்நிமித்தம் என்றும், எழுதலும் போற்றலும், கடவுண்மாட்டு என்றும் அன்பு கூர்தல் இருவர் திறத்து என்றும் உணர்க.

**100.** செறிந்தடங்கி நாடிச் செவ்விதா யுள்ளே
யறிந்தரனை யார்ந்து கொளல்.

(இ - ள்.) செறிந்து - மனச்செறிவு கொண்டு, அடங்கி - பஞ்சேந்திரியங்களின் சேட்டைகள் அடங்கவைத்து, நாடி - மூலக்கனலால் சதாசிவரூபத்தைத் தேடி அறிந்து, செவ்விதாய் உள்ளே - செம்மையாக ஆறுதாரங்களின் மேனிலையில் இருப்பதை, அறிந்து - உய்த்துணர்ந்து, ஈசனை - சதாசிவத்தை, ஆர்ந்துகொளல் - பத்தியினால் நன்கு பொருந்தச்செய்து கொள்க எ - று.

செவ்விதாய் உள்ளே செறிந்து அடங்கி நாடி அறிந்து ஆர்க என்று கூட்டுக. அடங்குதல், பஞ்சேந்திரிய சேட்டை. நாடுதல் - மேற்சொன்ன கருவிகள் கொண்டு ஈசனிலை யறிதல். ஆர்தல் - பொருந்துதல், ஆய்ந்துகொளல் என்றும் பாடம்.

இத்துடன் வீட்டு நெறிப்பால் முடிந்தது. வீட்டு நெறிப்பால் இன்னது என்பது முன்னமே விளக்கப்பட்டது. பந்த பாசங்களினின்றும் விடுதல் பெறும் வழியை உரைக்கும் பகுதி என்பதே முடிந்த பொருள் எனக்கொள்க.

## இரண்டாவது

# திருவருட்பால்

பாசத்தின் இயைபாற் பெறும் பந்தங்களினின்றும் வீடு (நிவர்த்தி) அடைந்த ஆன்மா, மேல் சதாசிவரூபத்துக் கடவுளைக் காட்சிபெற்று அப் பொருளின் பேர் அருளை அடையும் வழியைக் கூறும் பகுதியாம் இது. வீடு பெற்றார்க் கன்றித் திருவருள் பெறுதல் முடியாதென்பது உட்கொண்டு வீட்டு நெறிப்பாலின் பின்னர் உரைக்கப்பட்டது அறிக. இதுவும் பத்து அதிகாரங்கள் கொண்டது.

# பதினோராமதிகாரம்

## அருள் பெறுதல்

அஃதாவது சூக்ஷ்ம தேகம் அமிர்தநிலை பொருந்தி அர்ச்சனை சித்தித்தபிறகு, ஈசன் அருள் பெறவேண்டும் என்ற நியதியைக் கூறுகின்றது.

**101.** அருளிறு லன்றி யகத்தறி வில்லை
யருளின் மலமறுக்க லாம்.

(இ - ள்.) அருளின் - அருளைக் கொண்டு, மலம் அறுக்கலாம் - நம்முட் பொருந்திய மும்மலங்களையும் ஒழிக்கலாம், அருளினல் அன்றி - ஆகையால் கடவுள் அறிவே அல்லாமல், அகத்து - சூக்ஷ்ம சரீரத்தினுள், அறிவு இல்லை - அறிந்து கொள்ளக்கூடிய பொருள் வேறு யாதொன்றும் கிடையாது.

## அருள் பெறுதல்

இஃது அருளின் தன்மையும், அதனை அடைவதனாற் பெறும் பயனும் உரைத்தது.

அருள் - ஈஸ்வரனது அருள்; தம்மினும் தாழ்ந்தாரிடத்து இரக்கம் காரணமாகத் தோன்றும் தண்ணளி. மற்றையன்பு போலாது, நன்றியின் பயனாகவோ, உறவின் பிணிப்பாலோ எழும் உணர்ச்சி யன்று; வேறொன்றும் கருதாது கருணை என்னும் உள்ளப்பெருக்கால் நிகழ்கின்ற ஒருள்ளப் பற்று. இது நெருப்புப் பொறிபோன்று, மனத்தில் எழும் ஆசாபாசங்களையும், இந்திரியங்களுடன் இயைந்து கிடக்கும் மும்மலங்களையும் எரித்து அழிக்கும் இயல்பினது. இவ்வருள் தான் தோன்றியபொழுதே, மும்மலங்களும் அழியும் என்பது விளக்கவே 'அருளின் மலம் அறுக்கலாம்' என்றார். மும்மலமாவன: ஆணவம், மாயை, காமியம் என்பன.

இத்தகைய அருள்தான் சூக்ஷ்ம தேகத்தினுள் தோன்றும் தன்மையது. அகக்கண்ணாலன்றி புறக்கண்ணால் கண்டறிய முடியாதது என்பது விளக்க அகத்தறிவு என்றார். அகத்தறிவு - அகத்தின் கண் அறியப்படுவது. (அறிவு - தொழிற் பெயர்.) அஃதாவது, இந்திரியங்களாகிய உட்பொருள்களின்கண் காணப்படுவது என்றபடி. ஈஸ்வரன் றன்னுடைய அருளைக் காட்டும் பொருட்டுத் தோன்றும் பொழுது வேறெவ்விதம் அறிந்துகொள்ளுதல் இயலாது என்பது விளக்கவே அருளினாலன்றி அறிதல் இல்லை என்றார்.

இனி அறிவு, பிரணவ சொரூபமான அறிவு என்றும் பொருள் கூறுப.

**102.** **இருளைக் கடிந்தென் றிறைவ னருளிற்**
**றெருளுஞ் சிவசிந்தை யாம்.**

(இ - ள்.) இருளைக் கடிந்து - மும்மல மயக்கத்தை அடக்கி (அதனால்), என்று - என்றும், இறைவன் அருளில் - சதாசிவத்தின் கருணையில், சிவசிந்தை யாம் - சிவனைச் சிந்தனை செய்யும் உணர்வு, தெருளும் - திரண்டு உருவெய்தும்.

இதுவும் அது. மும்மலங்களாவன: ஆணவம், மாயை, காமியம். ஆணவம் என்பது தான் என்னும் அகங்காரத் தாற் கர்வித்திருத்தல். மாயை - பொய்ம்மையான உடல் முதலியவற்றை மெய்யென்று நம்பி அவற்றின் சுகதுக்கங் களில் ஈடுபட்டும், மெய்ம்மையான சிவசக்தியைக் காணமாட் டாமையாற் பொய்யென்று கருதியும் ஒழுகும் மயக்கம். காமியம் - தீமையே பயக்கும் விடயங்களில் எழுகின்ற இச்சை. இவை ஒழிந்தாலன்றிச் சிவனருள் சித்திக்காது என்பது தோன்றவும் அதற்கு அவற்றை ஒழித்தல் அவ சியம் என்பது விளக்கவும், 'கடிந்து' என்றார். என்று - என் றும்; உம்மை தொக்கது. 'இன்று' என்றும், 'அருளின்' என்றும், 'சிந்தையால்' என்றும் பாடம்.

**103.** **மாசற்ற கொள்கை மதிபோலத் தோன்று**
**மீச னருள்பெற்றக் கால்.**

(இ - ள்.) ஈசன் அருள் பெற்றக்கால் - பரமசிவனது கருணையை அடைந்தால், மதிபோல - சந்திர கலையைப்போல,

மாசு அற்ற கொள்கை - குற்றமற்ற தத்துவம், தோன்றும்-மனதிற் பிறக்கும் எ - று.

சந்திரகலை வெப்பம் இன்றி உலகுக்கு உள்ள மகிழ்ச்சி அளிப்பதுபோல, சர்வேசுரனது கருணைப் பெருக்கு உண்மைத் தத்துவத்தைக் காட்டிவிடும் என்றபடி. கொள்கை - கோட்பாடு, தத்துவம்.

**104.** வாய்மையாற் பொய்யா மனத்தினன் மாசற்ற
தூய்மையா மீச னருள்.

(இ - ள்.) ஈசன் அருள் - சர்வேசுரனது அருட் பெருக்கினல், வாய்மையாம்-உண்மையான மார்க்கத்தாலும், பொய்யா மனத்தாலும் - மாறுபடாத மனதினுலும், தூய்மையாம் — அம் மனம் பரிசுத்தம் அடையும் எ - று.

ஈசனுடைய அருள் உண்டாயிற் றென்றால், இயல்பாகவே உண்மை நெறியுண்டாகும் என்றும், அவ்வுண்மையின் தோற்றத்தால், உள்ளமானது தீயவழியிற் செல்லாமல் ஒரு நிலையில் நிற்கும் என்றும், அதன் வழியாக உள்ளம் தூய்மையடையும் என்றபடி. பொய்மையாவது - உண்மை வழியினின்றும் விலகித் தீயவழியிற் செல்வது - மனம் என்ற எழுவாய் வருவிக்க. 'தூய்மையன்' என்றும் பாடம்.

**105.** உன்னுங் கரும முடிக்கலா மொள்ளியான்
மன்னு மருள்பெற்றக் கால்.

(இ - ள்.) ஒள்ளியான் - ஒளி பொருந்தியவனாகிய சர்வேசுரனிடம், மன்னும் - நிலைபெற்றுள்ள, அருள் - கருணை

யினை, பெற்றக்கால் - நாம் அடைந்தோமெனில், உன்னும் - யாம் செய்து முடிக்க நினைக்கும், கருமம்-விடயங்களை, முடிக்க லாம் - பூர்த்தி செய்துகொள்ளும் ஆற்றலுண்டாகும் எ - று.

அவ் வீசனருள் அடையும் பலனைக் கூறியது. உன் னுங் கருமம் என்றது - இஷ்ட காமியங்களை. இம்மைக்கு வேண்டிய பொருளின்பங்களையும், மறுமைக்கு வேண்டிய அறங்களையும் அன்றி, அஷ்டமாசித்திகளைக் குறித்ததாகவும் கொள்க. ஒள்ளியான் - ஒளியுடையான்; தேவன் என்னும் வடசொற்கு ஒளியுடையான் என்றே பொருளுண்மை காண்க. ஈண்டு ஈசுரனைக் குறித்தது. ஒள்ளியானிடம் மன்னிய அருள் என்று கூட்டுக. ஈசனுடன் என்றும் நிலைபெற்றிருத் தலின் 'மன்னிய' என்றார். அவ்வருள் பெறுதல் அருமை என்பதற்கு பெற்றக்கால் எனப்பட்டது. 'ஒள்ளிதாய்' என்றும் பாடம்.

**106.** எல்லாப் பொருளு முடிக்கலா மீசன்றன்
தொல்லை யருள்பெற்றக் கால்.

(இ - ள்.) ஈசன்தன் - சர்வேசுரனது, தொல்லை அருள் - பழைமையான கருணையை, பெற்றக்கால் - அடைந்தால், எல் லாப் பொருளும் - உலகத்தில் சித்திக்கப்பெறும் யாவற்றை யும், முடிக்கலாம் - செய்து முடிக்கலாம் எ - று.

இதுவுமது. முன்னர் நிலைபெற்ற தன்மையைக் கூறி னவர் ஈண்டு அதன் பழைமையைக் குறிப்பிட்டார். மேற்

குறளிற் குறித்த 'உன்னுங் கருமம்' ஒழிந்த வேறு யாவற்றையும் அடையப்பெறலாம் என்றதற்கு 'எல்லாப் பொருளும்' என்றார்.

**107. சிந்தையு ணின்ற சிவனருள் பெற்றக்காற்
பந்தமாம் பாச மறும்.**

(இ - ள்.) சிந்தையுள் - பரிபக்குவம் அடைந்த ஜீவான்மாவினுள், நின்ற - குண்டலி நிலைக்கு மேலகத்து இராநின்ற, சிவன் அருள் - சிவபிரானது கருணையை, பெற்றக்கால் - அடைந்தால், பந்தம் ஆம் பாசம் - உலக விடயங்களில் ஈடுபடுத்தும் ஆசை, அறும் - அறுந்து ஒழியும் எ - று.

இது கருணையால் ஆசாபாசங்கள் அழியும் என்று கூறியது. குண்டலி யோகநிலை அடைந்தாரது உள்ளமே ஈசுரனிருப்பிடம் என்பது முன்னரே கூறப்பட்டது. அது நோக்கியே 'சிந்தையுள் நின்ற சிவன்' என்றார். "நானுமென் உளநிற்றி நீ" எனத் தாயுமானப் பெருமான் உரைத்ததும் அதுபற்றியே. பந்தம் - கட்டு பிணிப்பு ஆவது பொருள்களில் உண்டாகும் இச்சையால் அவற்றோடு சம்பந்தமும் இணக்கமும் உண்டாவது. பாசம் என்பதற்கு ஆசையென்றும், கயிறு என்றும் பொருள். ஆசையே கயிறுபோல ஆன்மாவை உலகப் பொருளொடு கட்டிவிடும் என்றும், ஈசனருளால் அவ்வாசை கயிறு (பாசம்) அறுபடுவது போல அறுந்துவிடும் என்றும் சிலேடைப் பொருள் பெறப்படும்.

'சிந்தையி னின்ற' என்றும் பாடம்.

**108.** ஓவாச் சிவனருள் பெற்று லிசையன்றித்
தாவாத வின்பந் தரும்.

(இ - ள்.) ஓவா - அழிதலில்லாத, சிவன் அருள் - பரம சிவத்தின் கருணையை, பெற்றால் - அடைந்தால், இசை அன்றி - இவ்வுலகிற் புகழ் என்பது மாத்திரம் அல்லாது, தாவாத இன்பம் - மறுவுலகில் அழிதல் இல்லாத பேரின்பப் பதவியையும், தரும் - அளிக்கும் எ - று.

இதுவும் கருணையால் அடையப்பெறும் பெருமையை உரைத்தது. ஓவா அருள்—'மன்னும் அருள்' என்றது போல. இப்பிறப்பிற் கீர்த்தி அளிப்பது நிச்சயம், அன்றியும் மறுமையிற் பேரின்பத்தையும் அளிக்கும் என்று விளக்க இசையன்றி இன்பம் தரும் என்றார். இசையே யன்றி இன்பமும் தரும் என்று விரித்துரைத்துக் கொள்க.

'உரையின்றித் தாவாத' என்னும் பாடபேதம் பொருள் சிறப்பின்மை காண்க.

**109.** ஒவ்வகத்து ணின்ற சிவனருள் பெற்றக்கா
லவ்வகத்து ளானந்த மாம்.

(இ - ள்.) ஒ அகத்துள் - ஓங்கார வடிவமான குண்டலி யில், நின்ற - நிலைபெற்றுள்ள, சிவன் அருள் - சிவனது கருணையை அடைந்தால், அவ் அகத்துள் - அக் குண்டலியி லேயே, ஆனந்தம் ஆம் - துன்பமில்லாத நிலையாகிய ஆனந் தம் உண்டாகும் எ - று.

இதுவுமது. சிவனருள் இருக்குமிடம் குண்டலி யென்றும், அதனிடத்திலேயே ஆனந்தம் பிறக்கும் என்றும் அறிக. குண்டலி ஓங்கார வடிவமாதல் முன்னர்க் கூறப்பட்டது. துன்பமில்லாத நிலையில் இன்பம் தானே வந்து எய்தும் ஆதலின் துக்க நிவாரணத்தையே பொருளாக உரைக்கப்பட்டது. 'ஒவ்வகத்து நின்ற' என்றும் பாடம். ஒவ்வகம் - ஒத்த இடமாகிய மனம் என்று கூறி யிடர்ப்படுவாரும் உளர்.

**110. ஆவாவென் றேத்தி யருள்போற்ற லாங்கண்டீ**
**ரோவாத ஞான வொளி.**

(இ - ள்.) ஓவாத - அழியாத, ஞான ஒளி - அறிவு என்னும் விளக்கத்தால், ஆவா என்று - ஆ ஆ என, ஏத்தி - தோத்திரம் செய்து, அருள் - ஈசுரனது கருணையை, போற்றலாம் - நம்மை விட்டு அகலாது காப்பாற்றிக் கொள்ளலாம், எ - று கண்டீர் - அசை.

இக் குறள், சிவனருள் பெற்றபிறகு அதனை வளரச் செய்யும் விதமும், நம்மைவிட் டகலாதபடி நிறுத்தும் வகையும் கூறுகின்றது. சிவனருள் குண்டலியில உதித்தபின்னர், அறிவின் தன்மையால் அவ்வருளை நாள்தோறும் போற்ற வேண்டும் என்றார். ஒருவர்பால் இலேசிலே கிடைத்தபோதிலும், கிடைத்த பொருளைச் சேமப்படுத்தினாலன்றி அது சிதறிவிடும் அல்லவா. ஆ, ஆ, என்றது, மந்திரத்தாலும் பிறவற்றாலும் ஈசுரனைத் தியானஞ் செய்யும் முறையைக் குறித்தது. பேரறிவு என்றும் அழியாத தாதலின் ஓவாத

ஞானம் என்றும், அது பிரகாசமாய்த் திகழ்ந்து, காமவெகுளி மயக்கம் என்னும் இருளைக் கடிவதாகலின் ஞானவொளி என்றும் உரைத்தார். இனி, இக் குறள்,

> "ஆவாவென் றோதி யருள்பெற்றார்க் கல்லாது
> தாவாதோ ஞான வொளி"

என்ற பாடத்துடனும் காணப் பெறுகிறது பொருள் விளங்கிலது. ஒரு பிரதியில் இவ்வதிகாரத்தில்,

> "மாசற்ற கொள்கை மனத்தி லடைந்தக்கா
> லீசனைக் காட்டி விடும்"

என்ற குறள் அதிகமாகக் காணப்பெறுகிறது. இக் கருத்து 'மாசற்ற' (103) என்ற குறளாற் பெறப்படுதலாலும், ஒவ்வோ ரதிகாரத்திலும் பப்பத்துக் குறள்களே அடக்கிய தாகத் தெரிதலாலும், இக் குறள் அதிக பாடம் என்று விலக்கப்பட்டது.

---

# பன்னிரண்டாமதிகாரம்

## நினைப்புறுதல்

இது சூக்ஷ்ம தேகம் சிவனருள் பெற்றபின், அவ்வருளைச் சிந்தித்திருத்தல். இதனைத் தியானம் என்றும் உரைப்பர். சிந்தனையின்றிச் சிவனருள் நீடிக்காமையால் இதனை வற்புறுத்தினார் என்க.

**111.** கருத்துற்றுப் பார்த்துக் கலங்காம லுள்ளத்
திருத்திச் சிவனை நினை.

(இ - ள்.) கருத்து உற்று - உள்ளமும் சிந்தையும் பொருந்தச் செய்து, பார்த்து - மனக்கண்ணால் சிவ சொரூபத்தைக் கண்டு, உள்ளத்து - அம் மனதிலே (குண்டலியில்), கலங்காமல் இருத்தி - அசையாதபடி நிறுத்தி, சிவனை நினை - சதாசிவமூர்த்தியைக் கருதுக எ - று.

இது பார்வை, மனம், சங்கற்பம் என்ற மூவகையானும் சிந்திக்கும் முறை கூறுகின்றது. இவற்றின் விவரம் மேற் குறள்களிற் கூறுவார். பார்வையாவது - குண்டலி நிலையை அறிந்து அதன்கண் அடங்கிய சர அசரத் தோற்றத்தை உணர்வது. மனம் - அக் குண்டலிநிலை, உள்ளமுமாம். சங் கற்பமாவது ஈசனை அம் மனத்தில் இருப்பதாகக் கற்பித்து அவ்வீசனை அந் நிலையிற் கண்டறிவது. இம் மூன்றும், பார்த்து, உள்ளத்து, இருத்தி என்ற சொற்களாற் குறித்தார் என்க. அதிகாரப் பொருள் விளங்கக் கருத்து உற்று என்றதற்குச் 'சிந்தையும் பொருந்த' எனப்பட்டது. 'கருத்துற' என்றும் பாடம்.

**112.** குண்டலியி னுள்ளே குறித்தரனைச் சிந்தித்து
மண்டலங்கண் மேலாகப் பார்.

(இ - ள்.) குண்டலியின் உள்ளே - குண்டலி நிலையி னுள், சிந்தித்து - மனதினால் சிந்தித்து, மண்டலங்கள்

மேலாக - மும்மண்டலங்களுக்கும் மேலான நிலையில், அரனைக் குறித்து - சர்வேசுரன் இருப்பதைக் குறிப்பின் அறிந்து கொண்டு, பார் - பார்த்துக் கொள்க எ - று.

இது பார்வை யென்னும் முறை கூறியது. குண்டலியி னின்றும் எழும் மூலாக்கினி ஆறுதாரங்களையும் கடந்துபோக முடிவில் உள்ள சர்வேசுரனை அறிந்து கண்டுகொள்க என்ற வாறு. பார்த்தலாவது - மானச சக்தியால் அறிவது. ஆறு தாரமும் மூன்று மண்டலங்களாகப் பிரிவுபடுத்திய விதம் முன்னர்க் கூறப்பட்டது. அவை சூரிய, சந்திர, அக்கினி மண்டலங்களாம்.

**113. ஓர்மின்கள் சிந்தையி லொன்றச் சிவன்றன்னைப்**
**பார்மின் பராபரனே யாம்.**

(இ - ள்.) சிவன் தன்னை - பரமசிவனை, சிந்தையில் ஒன்ற - மனதில் பொருந்த, ஓர்மின்கள் - நினைந்து அறிந்து கொள்ளுமின், பராபரனே ஆம் பார்மின் - அவ்விதம் அறி யின், அவனே பராபரனாக இருக்கும் தத்துவம் கண்டுகொள் ளுங்கள் எ - று.

இதுவும் பார்வைத் தத்துவம் உரைத்தது. குண்டலி யின்மேலே உள்ளதன்றி, ஆறுதாரங்களிலும் கீழ் நோக்கியும் நிற்கும் சிவன், அந்த நிலைமையும் காண்க என்கின்றார். பரா பரன் - எல்லா உயர்ந்த பொருளுக்கும் உயர்ந்தவன் பராபரனே சிவன் என்றபடி. சிந்தை, ஈண்டு ஆறுதாரங்களையும் குறித் தது. 'பழம் பொருளே யாம்' என்னும் பாடபேதம்.

**114.** சிக்கெனத் * தேர்ந்துகொள் சிந்தையி லீசனை
மிக்க மலத்தை விடு.

(இ - ள்.) சிந்தையில் - உள்ளத்தில், மிக்க மலத்தை - மிகுந்துள்ள மும்மலங்களையும், விடு - நீக்குக; நீக்கியபின், சிந்தையில் - அவ் வுள்ளத்தில், ஈசனை - சர்வேசுரனை, சிக்கென - விரைவுடன், தேர்ந்துகொள் - சிந்தனையால் உணர்ந்து சேர்த்துக்கொள் எ - று.

இது மனதால் அடையும் வகை யுரைத்தது. உள்ளத்தில் மலம் ஒழிந்தால் ஈசன் உடனே சேருகின்றான் என்ற கொள்கையை வற்புறுத்துகின்றது. ஈசுர தியானத்தால் மும்மலக் கழிவும், மும்மல நீக்கத்தால் ஈசுர சிந்தனையும் உண்டாம் என ஒன்றன் ஒன்றின் தொடர்பு காட்டியிருப்பதும் உய்த்தறிக. மலம் - ஆணவம், மாயை, காமியம். சிக்கென - விரைவோடு வலிமையும் குறித்தது. தேர்தல் - மனதால் அறிந்து ஒருப்படுதல்.

**115.** அறுமின்கள் சிந்தையி லாதாரந் தைச்சேர்ந்
துறுமின்க ளும்முளே யோர்ந்து.

(இ - ள்.) உம்முளே ஓர்ந்து - உம் உள்ளத்தில் நன்கு அறிந்து, சிந்தையில் - மனதிலுள்ள (மலப் பொருள்களை), அறுமின்கள் - நீக்கி விடுங்கள்; பின்னர், ஆதாரத்தைச் சேர்ந்து - ஆறு நிலைகளிலும் ஈசனுடன் கலந்து, உறுமின்கள் - பொருந்தி யிருங்கள் எ - று.

* சேர்ந்து.

இதுவும் மனதின் வகை யுரைத்தது. மனதின்கண் மாசு இருப்பன ஒழிக்க வேண்டும் என்றும், அஃது ஒழிந்தால் ஈசனுடன் பொருந்தியிருக்கலாம் என்றும் உரைக்கின்றார். 'அறுமின்கள்' என்றதால் மும்மலங்களையும் ஒழிக்க எனப் பொருள் கொள்ளப்பட்டது. இஃதறியாது 'அறிமின்கள்' என்று பாடம் உரைத்து, உறுமின்கள் என்பதன் பொருளையே மறுபடியும் கூறுவர். ஓர்தல், மனதினால் ஆறாதாரங்களின் தன்மையும் மனதின் வலிமையும் அறிதல்.

**116. நித்த * நினைந்திரங்கி நின்மலனை † யொன்றுவித்தான் முற்று மவனொளியே யாம்.**

(இ - ள்.) நித்தம் - நாள் தோறும், நின்மலனை - பரிசுத்தமான சர்வேசுரனை, நினைந்து - மனதில் நிருமாணம் செய்யக் கருதி, இரங்கி - அவன் அருள் சித்திக்க வேண்டுமே யென்றி இரக்கங்கொண்டு, ஒன்றுவித்தால் - அச் சர்வேசுரனை மனதில் நிர்மாணஞ் செய்தால், முற்றும் - உடலின் உள்ளும் புறமும், அவன் ஒளியே ஆம் - அச் சர்வேசுரனது ஒளி மயக்கமாக ஆகிவிடும் எ - று.

இது, சங்கற்ப வகை யுரைத்தவாறு. சிவனை உள்ளத்தில் ஆவாகானஞ் செய்து சிந்திக்க வேண்டும் என்றபடி. நினைதலும் ஒன்றுவித்தலும், சிவனை நிருமாணம் செய்யும் தத்துவத்தைக் குறிப்பிட்டன. இவற்றின் விவரம் பெரியார் வாய்மொழியால் அறியத் தக்கன. முற்றும் - உள்ளத்தின்

* நினைந்தாங்கே. † யொன்றுவிக்கின்.

மட்டும் அன்றி உடலிலும் சோதி காணப்பெறும் என்றும் கொள்க. சிவனொளி காண்டலாவது, சிவசொரூபம் பெறுதல்.

**117.** ஓசை யுணர்ந்தங்கே யுணர்வைப் பெறும்பரிசா
லீசன் கருத்தா யிரு.

(இ - ள்.) ஓசை உணர்ந்து - ஓங்காரத்தில் எழுகின்ற சப்தத்தில் உண்டாகின்ற உணர்வைக் கொண்டு, உணர்வைப் பெறும் பரிசால் - கடவுண்மாட்டு அறிவினை அடைகின்ற விதத்தினால், ஈசன் கருத்தாய் இரு - ஈசனையே சதாகாலம் சிந்தனை செய்கின்ற நிலையில் இருக்க எ - று.

இதுவும் அது. ஈசனை உள்ளத்தில் நிருமாணம் செய்தால் மட்டும் போதாது; ஓங்கார வடிவமான அவனை எப்பொழுதும் சிந்தனை செய்ய அப்பிரணவத்தில் உண்டாகும் நாதவோசையையும் சிந்தித்திருக்க, ஈசன் உள்ளத்திலேயே குடிகொண்டிருப்பான் என்றபடி. ஈசன் கருத்தா யிருக்க, அவன் வீற்றிருப்பது நிச்சயம் என்பதாம். பரிசு - தன்மை. உணர்வு - முன்னர் விளக்கப்பட்டது. இனி ஓசை யென்பதை அநாகத்துவனி என்றும் கூறுவர்.

**118.** இராப்பக லன்றி யிருசுடர்ச் * சிந்திக்கிற்
பராபரந்தோ டொன்றலு மாம்.

(இ - ள்.) இராப் பகல் அன்றி - இரவு பகல் என்ற வேற்றுமை நீங்கும்படி, இருசுடர் - சூரிய சந்திர நிலையினை,

* யிருசுடரை.

சிந்திக்கின் - சிந்தனை செய்தால், பராபரத்தோடு - பரம் பொருளொடு, ஒன்றலும் ஆம் - ஒன்றாகக் கலப்பதும் இய லும் எ - று.

இது சிந்தனை செய்வது காலவேற்றுமை இல்லை என்று கூறியது. இரவும் பகலில்லாதபடி என்றதால் இரவும் பக லும் கடந்த நிலை, அந்நிலையிற் சூரியன், சந்திரன், நக்ஷத்திரம் என்ற ஒளி தரும் பொருள்கள் மிக்க பயன் தருவன அல்ல, அத்தகைய நிலையிற் சூரிய சந்திரர் பயன்படாதது போல் நான் என்பதும் பயன்படாமல் அந்நிலையிற் கலந்துவிடும் தன்மையை விளக்குகின்றார். ஈசுரன் கால எல்லையைக் கடந்த நிலையில் இருப்பதாக நூல்கள் கூறும். தாயுமானவ சுவாமிகளும் 'கங்குல்பக லறநின்ற எல்லை' என்று உரைத் துள்ளதும் காண்க. [இனிச் சந்திர சூரியர் என்பதற்கு இடைகலை பிங்கலை எனப் பொருளுரைப்பாரும் உளர். இவற் றினும் சுழுமுனையினுற் பெறும் நிலை விசேடமென முன் இவ்வாசிரியரே உரைத்ததால் அப்பொருள் விசேடமின்மை அறிக.

**119. வேண்டுவார் வேண்டும் வாக் † கப்பால் விரிந்தெங்கும் காண்டற் ‡ கரிதாஞ் சிவம்.**

(இ - ள்.) வேண்டுவார்-ஈசனைக் காமிய நினைவில் விரும்பு கின்றவர், வேண்டும் - விரும்பித் தோத்திரிக்கும், வாக்கப் பால் - சொற்களுக்கு அப்பால் கடந்து, எங்கும் விரிந்து -

† வகைதான் விரிந் தெங்கும். ‡ கரிய சிவம்.

ஏனைய இடங்களிற் பரந்து, சிவம் - பரமசிவன், காண்டற்கு - அத்தகையோரால் கண்டு அறிதற்கு, அரிது ஆம் - அருமை யான செய்கையாகும் எ - று.

இது நிஷ்காமிய பூசையாலன்றிச் சிவனருள் பெற முடியாது என்று விளக்குகின்றது. வேண்டுவார் - நினைத்த பொருள் சித்திக்க வேண்டும் என்ற வேட்கை யுடையவர். கடவுளிடத்து ஒன்றைக் கருதித் துதிப்பது காமிய பூசை யெனப்படும். அஃதுடையாருக்கு ஈசன் வெகு தொலைவி லுள்ளவன்; அவர்கள் சாதனங்களாற் குண்டலினி பதவி கண் டாலும், காமிய பூசையினால் ஈசனைக் காணமுடியாது என்றார். இதுபற்றியே, "அரியானை அந்தணர் தம் சிந்தையானை" எனப் பெரியார் உரைத்தார். அரியான் - அணுகுவதற்கு அருமையானவன்.

## 120. மிக்க மனத்தான் மிகநினைந்து சிந்திக்கு லொக்கச் சிவனுருவ மாம்.

(இ - ள்.) மிக்க மனத்தால் - பக்குவம் அடைந்த மனதினால், மிக நினைந்து - ஈசுர பக்தியிலேயே மிகவும் ஈடுபட்டு நிஷ்காமியமாகக் கருதி, சிந்தித்தால் - பூசையியற்ற, ஒக்க - பொருந்த, சிவன் உருவம் ஆம் - சிவனது தோற்றம் வெளிப் படும் எ - று.

இது நிஷ்காமிய பூசையின் பெருமையுரைத்தது. மிக்க, மிக என இரட்டித்தலால், நிஷ்காமிய பூசை எனப் பொருள் கொள்ளப்பட்டது. இனி, இவ் வதிகாரத்தின் புறனடை யாகவும் கொள்க. சிந்திக்கில் என்பதற்குச் 'சிக்கென்னில்' எனப் பிறழ்ந்த பாடமும் காணப்படுகிறது.

# பதின்மூன்றாமதிகாரம்

## தெரிந்து தெளிதல்

இது சிந்தனையின் பயனாகச் சிவனைத் தெரிந்துகொண்டு தெளிவுபெறும் தந்திரம் கூறுகின்றது. சிந்தனை உண்டாயின பின்னர், காம முதலிய மயக்கங்களாலும், ஐய முதலிய திரிபுகளாலும் வேறுபடாமல் தெரிந்துகொள்ளுதலாம்.

**121. தேறித் தெளிமின் சிவமொன்றே நெஞ்சத்துக்**
**கூடிற் பலகுணமு மாம்.**

(இ - ள்.) சிவம் ஒன்றே - சதாசிவம் என்ற ஒரு பொருளையே, நெஞ்சத்து - குண்டலினிநிலையில், தேறித் தெளிமின் - வீற்றிருப்பது அறிந்து தெளிவடையுங்கள், கூடில் - அவ்விதம் சிவன் சேரப்பெறின், பலகுணமும் ஆம் - சகலவிதமான நற்குணங்களும் உண்டாகும் எ - று.

இது தெளியும் வகை கூறியது. உள்ளம் என்கிற குண்டலியில் சதாசிவரூபத்தைத் தெளிக என்றபடி. 'சிவமென்றே' என்றும், 'உள்ளுணர்வில் கூறிய பல்குணம்' என்றும் பாடபேதம்.

**122. உண்டில்லை யென்னு முணர்வை யறிந்தக்காற்**
**கண்டில்லை யாருஞ் சிவம்.**

(இ - ள்.) உண்டு இல்லை என்னும் உணர்வை - ஈசன் உண்டோ இல்லையோ என்னும் ஐயத்தோடு கூடிய உணர்ச்சியினை, அறிந்தக்கால் - பரிசோதித்து அறிந்தாலும், சிவன் -

பரம்பொருள், கண்டு இல்லை ஆகும் - ஒருகாற் காணக்கூடிய தாகவும், ஒருகாற் காணமுடியாததாகவும் தோன்றிவிடும்.

இஃது ஐயத்தோடு கூடிய உணர்ச்சி பயன் அளிக்காது என்று விளக்கியது. ஈசன் உண்டோ இல்லையோ என்ற நினைவு எழுந்தாலும் உள்ளத்தில் அமர்ந்த பரம்பொருளும் தோன்றியும் தோன்றாமலும் போவான் என்க. 'என்றும்' என்ற பாடம் வினை முடிவில்லை.

## 123. ஒருவர்க் கொருவனே யாகு முயிர்க்கெல்லா மொருவனே பல்குணமு மாம்.

(இ - ள்.) உயிர்க்கு எல்லாம் - எல்லாச் சீவராசிக்கும், ஒருவர்க்கு ஒருவனே ஆகும் - ஈசன் ஒவ்வொருவர்க்கு ஒவ்வோர் உருவத்துடன் தோன்றுகின்றவனும், ஒருவனே - அவ்வொரு கடவுளே, பல்குணமும் ஆம் - ஒரு பொருளுக்கே உள்ளே பல குணங்களுமாய் அமைந்திருக்கின்றார் எ - று.

இது மேற்குறளுக்கும் புறனடை. உணர்ச்சி பலவகைப் பட்டது என்றால், ஈசன் அவ்வவ்வுணர்ச்சிக்கு ஏற்றபடி அமைகின்றான் என்றபடி. ஒற்றுமையில் வேற்றுமையும், பலவேறுவகைகளில் ஒற்றுமையும் காட்டுவது ஈசன் குணம் என்று விளக்குகின்றார். ஒவ்வோர் ஆன்மாவுக்கும் உள்ள குணங்களுக்கேற்றபடிச் சிவன் பொருந்தியுள்ளான்; அன்றியும் ஓரான்மாவுக்கே வேறுபட்ட குணங்களிருப்பின் அக் குணங்களும் அவ்வீசனே ஆகின்றான் என்பதும் கூறியபடி.

**124. எல்லார்க்கு மொன்றே சிவமாவ தென்றறிந்தாற்
பல்லோர்க்கு முண்டோ பவம்.**

(இ - ள்.) எல்லார்க்கும் - உலகில் உள்ள எல்லாச் சீவ ராசிக்கும், சிவம் ஒன்றே ஆவது - பரம்பொருள் ஒன்றுதான் உள்ளது, என்று அறிந்தால் - என்பது உணர்ந்தால், பல்லோர்க்கும் - அனைவர்க்கும், பவம் உண்டோ - பிறப்பு உண்டாகுமோ எ - று.

ஓர் ஆன்மாவுக்கே உரிய கடவுள் உலகமனைத்திலும் வியாபித்துள்ளான் என்றபடி. இவ்வுணர்வு உண்டாகியபிறகு பிறப்பு இல்லை என்றார். 'பல்லோர்க்கும் ஒன்றே சிவம்' என்றும் பாடம்.

**125. ஆயு மிரவியு மொன்றே யனைத்துயிர்க்கு
மாயுங்கா லொன்றே சிவம்.**

(இ - ள்.) அனைத்துயிர்க்கும் - எல்லாப் பொருள்களுக்கும், ஆயும் இரவியும் - ஆராய்ந்து அறியத்தக்க சூரியனும், ஒன்றே - ஒரு தன்மையாகத் தோன்றுகின்றான் அதுபோல, மாயுங்கால் - அப் பொருள்கள் ஒடுங்கும்போது, சிவன் ஒன்றே - பரம்பொருள் ஒன்றாகவே நிற்கும் எ - று.

கண்கூடாகப் பார்க்கும் சூரியன் எவ்விதம் அனைவர்க்கும் ஒரு தன்மையாக விளங்குகின்றானோ, எவ்விதம் நல்லோன் தீயோன் என்று வேறுபாடில்லாமல் அனைவர்க்கும் வெப்பம் அளிக்கின்றானோ, அதுபோல யுகாந்தத்தில் எல்லாப் பொருள்

களும் அழியும்பொழுது, அவ்வப்பொருட்கு ஏற்ற பலன் அளிக்க ஈசுரன் ஒருவனே என்றார். இனி ஆயுங்கால் எனப் பிரித்து, சூரியன் வியாபிப்பதுபோல் சிவனும் வியாபித் துளான் எனப் பொருள் கூறுவாருமுளர்.

**126.** **ஓவாத தொன்றே பலவா முயிர்க்கெல்லாந்**
**தேவர்க்கு மொன்றே தெளி.**

(இ - ள்.) உயிர்க்கு எல்லாம் - எல்லாச் சீவராசிகளுக் கும், ஓவாதது ஒன்றே - அழியாத அப் பரம்பொருளே, பல வாம் - பல சடப்பொருளாகத் தோன்றும்; தேவர்க்கும் - இனித் தேவநிலை அடைந்த ஆன்மாக்களுக்கும், ஒன்றே - அக்கடவுளே ஆதாரம் என்பதும், தெளி - அறிக எ - று.

ஒன்று பலவாக மாறும் இயல்பினது கடவுட்டன்மை என்பதை மீண்டும் உரைத்தது. பலபலப்பட்ட பொருள் களுக்கும் மூலநாடியாக இருப்பதும், தெய்வீக நிலையடைந்த முமுட்சுக்களுக்கும் அதுவே ஆதாரம் என்றும் கூறினார். தேவானதென்றே எனப் பாடங்கொண்டும், ஒன்று என்ப தற்குப் பிரணவம் என்றும் கூறுப.

**127.** **தம்மை யறியாதார் தாமறிவோ மென்பரோ**
**செம்மையா லீசன் றிறம்.**

(இ - ள்.) தம்மை அறியாதார் - தாம் இன்னார் என் பதை அறிந்து கொள்ளாதவர்கள், ஈசன் திறம் - ஈசுரனது நிலையை, செம்மையால் - உண்மை நெறியால், தாம் அறி

வோம் என்பரோ - யாங்கள் அறிந்து கொண்டோம் என உரைப்பரோ, மாட்டார் எ - று.

இது தன்னைத்தா னறிந்தார்க்கல்லாது ஈசுர ஞானம் உண்டாகாது என உரைத்தது. தன்னை அறிதல் - மேல் உரைத்த சாதனைகளால் குண்டலி சத்தியை எழுப்பி ஈச னுடன் கலக்கும்போ தெழும் அறிவு. அஃதுண்டானவர்க் கன்றி ஏனையோர் ஈசனிலை காணமுடியாதென எதிர்மறையா லுரைத்தார். 'என்பதென்' என்ற பாடம் உண்டு; சிறப் பின்மை யறிக.

**128.** உலகத்திற் பட்ட வுயிர்க்கெல்லா மீச
நிலவியே நிற்ப னிறைந்து.

(இ - ள்.) உலகத்தில் பட்ட - எல்லா வுலகங்களினும் தோன்றிய, உயிர்க்கெல்லாம் - எல்லாச் சீவராசிகளுக்கும், ஈசன் - சர்வேசுரன், நிலவியே நிறைந்து நிற்பன் - பரவியும் நிறைந்தும் நிலைபெற்றிருக்கின்றான் எ - று.

இது கடவுள் வியாபித்துள்ள எல்லை உரைத்தது. அதனை அறிந்துகொள்க என்றபடி. கண்ணுக்கு எட்டியதும் எட்டாததுமாகிய எல்லா உலகங்களினும் சீவராசிகளும் சடப் பொருள்களும் உள்ளன என்பது முன்னோரேயன்றிப் பூத பௌதிக விற்பன்னருக்கும் கொள்கையா யுள்ளது. அப் பொருள்களின் ஒவ்வொன்றிலும் நிறைந்துள்ளான் என்றார். 'நிலவுபோல்' என்றும் பாடம்.

**129.** உலகத்தின் மன்னு முயிர்க்கெல்லா மீச
னலகிறந்த வாதியே யாம்.

(இ - ள்.) உலகத்தின் மன்னும் - மேல் உரைத்த எல்லா வுலகங்களிலும் நிலைபெற்ற, உயிர்க்கு எல்லாம் - எல்லாப் பொருட்கும், ஈசன் - சர்வேசுரன், அலகு இறந்த - எல்லை கடந்த, ஆதியே ஆம் - மூலப் பொருளே ஆகும் எ - று.

இதுவுமது. ஈசன் ஒவ்வொன்றினு நிற்பதன்றி அவை யவை யுண்டாதற்கும் காரணம் என்றபடி. அலகு - எல்லை. 'அலகிலா விளையாட்டு' (கம்பர்) என்றதுங் காண்க. இதை யறியாது அலகு (மூக்கு) உடைந்த சீவராசி எனப் பொருள் கூறுவர்.

**130.** எல்லா வுலகத் திருந்தாலு மேத்துவர்க
ணல்லுலகி னாத னடி.

(இ - ள்.) எல்லா வுலகத்து - மேற்கூறிய உலகங்களில் எங்கே இருப்பின், நல்லுலகின் - மோக்ஷ சாதனை நல்க இருக்கும் உயர்ந்த உலகாகிய நிலையினிற்கும், நாதனடி - ஈசுரனது அடியிணையை, ஏத்துவர்கள் - பாராட்டுவார்கள் எ - று.

இது பயன் கூறியது. இவ்வகையாற் றெளிவு அடைந்த முமுக்ஷுக்குள் ஈசனைப் போற்றுவார்கள் என்றபடி. நல்லுலகு-கைலாயம், ஈண்டுக் குண்டலினிநிலை. இவ்வதிகாரத்தில்,

"திருவருட் டாலே தெரிந்து தெளியிற்
குருவிருப் பென்று கொளல்"

என்ற குறள் மிகை பாடமாகக் காணப்படுகிறது.

# பதினொன்காவ ததிகாரம்

## கலை ஞானம்

அஃதாவது பரம்பொருள் தன்மையை அறிந்த பின்னர் கலைகளின் அறிவினைக் கூறும் அதிகாரம். கலை - இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்பன. ஞானம் - அறிவு. 'கமல ஞானம்' என்றும் சில பிரதிகளிற் காணப்படும்.

**131.** சத்தியாஞ் சந்திரனைச் செங்கதிரோ னூடுருவின்
முத்திக்கு மூல மது.

(இ - ள்.) சத்தியாம் சந்திரனை - சத்தியைத் தருகின்ற சந்திரகலையை (பிங்கலையை), செங்கதிரோனோடு ஊடு உருவின் - சூரியகலையாகிய இடைகலையொடு ஊடுருவிக் கலந்தால், அது - அக் கலப்பு, முத்திக்கு மூலம் - சீவன்முத்தி நிலைக்குக் காரணமாகின்றது எ - று.

இது கலைகளை இயக்கி மூலக் கனலை யெழுப்பும் தந்திரத்தை உரைத்தது. சந்திரன் சூரிய னென்றது கலைகளை. இவற்றை இயக்குதல் குருமுகமாய் அறியத்தக்கது.

**132.** அயனங்கொள் சந்திரனு லாதித்த னொன்றி
னயனமா முத்திக்கு நாடு.

(இ - ள்.) அயனம் கொள் - வளர்ச்சி தேய்வு என்னும் வேறுபாடு உடைய, சந்திரனால் - சந்திரகலையால், ஆதித்தன் ஒன்றில் - சூரியகலையொடு பொருந்த, முத்திக்கு நயனமாம் -

சீவன்முத்தி அடைதற்குக் கண்போன்ற பயன் தரும். நாடு - தேடி அறிக எ - று.

இதுவும் அது. பிங்கலை இடைகலையைப் போலல்லாது நீட்சியும் குறைவுமான கால அளவுடைமையின் சந்திரனது வளர்ச்சி தேய்வுகள் உவமை பெற்றது. நயனம் - நயனம் போன்ற பலன். 'ஆயனங்கள்' என்றும், 'வீடு' என்றும் பாட பேதங்கள்.

**133. ஈசனே டொன்றி லிசையாப் பொருளில்லைத்
தேச விளக்கொளியே யாம்.**

(இ - ள்.) ஈசனோடு ஒன்றில் - மேற்கூறிய கலைகள் குண்டலி நிலையிலுள்ள பரம்பொருளை அடைந்தால், இசையாப் பொருள் இல்லை - சித்திப்பதற்கு முடியாத விடயங்கள் இல்லை, தேச விளக்கு ஒளியே ஆம் - அந்நிலையில் ஞானச் சுடர் பிரகாசமான தூண்டாவிளக்கின் ஒளியாகவே தோன்றும் எ - று.

இது கலைகளால் முடியும் ஆற்றல் உரைத்தது. குண்டலிநிலையிற் கலக்குங்கால் அமிர்தநிலை எய்தும் என்று முன்னரே கண்டோம். அப்போதுண்டாகும் உணர்வு என்னும் அறிவுச் சுடர், ஒளிவிட்டு அனைவரும் காணுமாறு விளங்கும் என்றார். தேச விளக்கு - தேஜஸ் (மிக்க ஒளி) பொருந்திய விளக்கு என்க. வடமொழிச் சிதைவு. இதை யறியாது நாட்டுக்கு விளக்கு என உரைத்து இடர்ப்படுவர்.

**134.** அஞ்சாலு மாயா வறம்பொரு ளின்பங்க
டுஞ்சா தவர்துறக்க வீடு.

(இ - ள்.) அஞ்சாலும் - பஞ்சேந்திரியங்களின் அடக்கத்தினுலும், மாயா - அழியாத, அறம் பொருளின்பங்கள் - தர்மார்த்த காமங்களை, துஞ்சாதவர் - அழிவில்லாத முமுக்ஷுக்கள், துறக்க - விட்டு நீங்கவும், வீடு - மோக்ஷ நிலையை அடைவர் எ - று.

இதுவுமது. அற முதலிய மூன்றினை பஞ்சேந்திரியங்களால் அனுபவித்தே ஒழிக்க வேண்டுமன்றி அவற்றை விலக்கிக்கொள்ளும் ஆற்றல் சீவன்முத்தி நிலை அடைந்தவர்க்கே முடியும் என்றபடி. துஞ்சாதவர் - பிறப்பு இறப்புக் கடந்தவர். 'மாயாதறம்' என்றும் 'துறக்குமாறு' என்றும் பாடம். விசேடமின்மை யுய்த்துணர்க.

**135.** தாஞ்செய் வினையெல்லாந் தம்மை யறவுணரிற்
காஞ்சனமே யாகுங் கருது.

(இ - ள்.) தம்மை அற உணரில் - ஒரு கருமம் செய்யுங்கால் தாம் அன்று என்ற உணர்ச்சி பெற்ருல், தாம் செய் வினையெல்லாம் - அவ்விதம் அவர்கள் செய்யும் கருமம் அனையவும், காஞ்சனமே ஆகும் - பொன்னெனத் தகும், கருது - இதனைக் கருதுக எ - று.

இது கலைகளை அடக்குங்கால் மனதை அடக்கும் தொழில் முறை கூறியது. வினை ஈண்டுக் கலைகளை மாற்றும்

தொழில். கலைகளை இயக்கும்போது தம் நினைவு கூடாது ஈசுர நினைவு இருத்தல் வேண்டும் என்றபடி. தான் என்பது மாய்க்க வேண்டும் என்பதும் இதுபற்றி. 'கருத்து' எனப் பாடங்கொண்டு மனம் பொன்னாகும் என்பர்: பொருந்தாது. வினை பொன்மயமாவது - அமிர்தநாடி பெறும் வழியில் பொருந்துவ தென்க.

**136. கூடக மான குறியெழுத்தைத் தானறியில்**
**வீடக மாகும் விரைந்து.**

(இ - ள்.) கூடக மான - மறை பொருளான, குறி எழுத்தை - குறிப்பான எழுத்தென்னும் ஓங்காரத்தை, தான் - கலைகளை மாற்றும் சீவான்மா, அறியின் - தெரிந்து கொள்ளின், விரைந்து - சீக்கிரமாக, அகமாகும் - மோக்ஷ நிலையை அடையப்பெறும் எ - று.

இதுவும் பயன். உட்சுவாசம், நிச்சுவாசம் செய்யும் போது பிரணவ வோசை உள்ளின்றெழுமென முன்னரே அறிந்தோம். அதன் தத்துவத்தை அறியின் மற்ற பந்தங் கள் அறுந்து மோக்ஷமடையலாம் என்றபடி. 'கூடகமான வெழுத்தினை' என்றும் பாடம்.

**137. வீடக மாக விரைந்தின்மை வேண்டுமேற்**
**கூடகத்திற் சோதியோ டொன்று.**

(இ - ள்.) வீடு அகம் ஆக - பந்தபாச நீக்கம் பெறுதற்கு, விரைந்து - சீக்கிரத்தில், இன்மை வேண்டுமேல் - சூனிய

நிலை அடைய விரும்பினுல், கூடகத்தில் - பிரணவ நிலையில், சோதியோடு - குண்டலி சத்தி (கடவுள்) யோடு, ஒன்று - பொருந்தியிரு எ - று.

இதுவுமது. வீடகம் - பந்தம் அற்ருல் மோக்ஷம் நிச்சயம் என்பதுபற்றி விடுதல் (நீக்கம்) எனப்பட்டது. சூனிய நிலையாவது விருப்பு வெறுப்பு முதலிய அனையவும் நீங்கிய துல்லிய நிலை. இதனையே சிவன் தவஞ்செய்யும் மயானம் என்றும், நடனஞ் செய்யும் அம்பலம் என்றும் கூறுப. கூடகம் - பிரணவம். 'விரைந்தொல்லை' என்றும், 'விரைந்தின்மை' என்றும் பாடம்.

**138.** பூரித்து நின்ற சிவனைப் புணரவே
பாரித்த தாகுங் கருத்து.

(இ - ள்.) பூரித்து நின்ற - பூரகம் செய்த நிலையில் குண்டலியிற்ருேன்றி நிற்கும், சிவனை - பரமனை, புணர - கலைகளாற் சூழ்ந்து கலக்க, பாரித்தது ஆகும் - மிக்க பலனைத் தரும் எ - று.

இதுவுமது. பூரகம் செய்யும்போது சிவதியானமிருப்பின் இது பலன் என்க. பாரித்தல் - பெருமை தரும் எனினுமாம்.

**139.** இரேசக மாற்றி யிடையரு தேநிற்கிற்
பூரிப்ப துள்ளே சிவம்.

(இ - ள்.) இரேசகம் இடையருது மாற்றி - இரேசகஞ் செய்து கலைகளை இடைவிடாமல் மாற்றிமாற்றி, நிற்கில் - ஒரு

நிலையில் நின்றால், உள்ளே பூரிப்பது - குண்டலியிற் பூரண நிலை அடைவது, சிவம் - பரம்பொருள் எ - று.

இதுவுமது. இரேசகஞ் செய்யும் வகையாகவும் ஈசனைக் கருத, உடல் முழுதும் ஈசன் தங்கியிருப்பன் இக்கருத்து முன்னரே விளக்கப்பட்டது.

**140.** சிந்தையி னின்ற நிலைவிசும்பிற் சங்கரனுஞ்
சந்திரனுய்த் தோன்று முணர்வு.

(இ - ள்.) சிந்தையில் நின்றநிலை - குண்டலியில் தங்கிய நிலைமையாகிய, விசும்பின் - ஆகாயத்தில், சங்கரனும் - பரம சிவனும், சந்திரனுய் - சந்திரகலையாக, உணர்வு தோன்றும் - உணர்வினிடத்தில் தோன்றும் எ - று.

நிலையாகிய விசும்பு சந்திரனுயர்வது தண்ணென்றிருத்தல் முதலியனவும் கொள்க. தந்தையாய் நின்ற என்றும், சாக்கிரமாம் என்றும், சந்திரனில் என்றும் பாடம்.

---

# பதினைந்தாமதிகாரம்

## உருவொன்றி நிற்றல்

கலைகளாற் பெற்ற அறிவினுல், ஈசுரன் நிலையும், அவர் உருவதனோடு உடம்பின் உள்ளும புறமும் தோன்றுவதும் கூறுதல்.

**141.** எள்ளகத் தெண்ணெ யிருந்ததனை யொக்குமே
யுள்ளகத் தீச னிலை.

(இ - ள்.) உள்ளகத்து ஈசன் நிலை - குண்டலி நிலைக்குள் ஈசன் இருக்கும் தன்மை, எள் அகத்து - எள்ளி

னுள்ளே, எண்ணெய் இருந்ததனை ஒக்குமே - எண்ணெய் இருந்த அந்நிலையை ஒத்திருக்கும் எ - று.

இது கடவுள் உருவத்தோடு தோன்றும் தத்துவம் கூறுகின்றது. எண்ணெய் எள்ளுக்குள் அடங்கி யிருப்பது போல் குண்டலிக்குள் ஈசன் அடங்கி யிருக்கின்றான் என்றபடி. ஈசனொளி என்றும் பாடம்.

**142.** பாலின்க ணெய்போற் பரந்தெங்கு நிற்குமே
நாலின்க ணீச நுழைந்து.

(இ - ள்.) ஈசன் - பரமசிவன், நாலின்கண் நுழைந்து - நாடிகளின் உள்ளே நுழைந்து, பாலின்கண் நெய்போல் - பாலினுள் வெண்ணெய் பரந்து அடங்கியிருப்பதுபோல, எங்கும் பரந்து நிற்கும் - அந்நாடிகள் முழுவதும் எங்கும் பரவிப் பொருந்தியிருக்கும் எ - று.

இதுவும் அது. எள்ளைப்போல் ஓரிடத்தேயிருப்பதன்றி பாலினுட்போல் எங்கும் பரவி யிருக்கும் ஈசன், நால் - நாடிகள்; அவற்றின் மூலமாகவே அமிர்தநிலை எய்துவதும் ஈண்டு கருதற்பாலது.

**143.** கரும்பினிற் கட்டியுங் காய்பாலி னெய்யு
மிரும்புண்ட நீரு மியல்பு.

(இ - ள்.) கரும்பினில் - கரும்புக்குள், கட்டியும் - கற்கண்டு எடுபடுவதும், காய்பலன் - காய்ச்சிச் சுண்டிய பாலில், நெய்யும் - வெண்ணெய் எடுபடுவதும், காய் இரும்பு உண்ட

நீரும் - காய்ச்சிய இரும்பானது இழுத்துக்கொள்ளும் நீரும்போன்ற, இயல்பு - தன்மையது ஈசன்குணம். எ - று.

இதுவுமது. சற்கண்டு, கருப்பஞ்சாற்றினிலும், வெண்ணெய், பாலிலும் உண்டாகின்றன. அதுபோல, கடவுள் நிலைமையை அடைந்த முழுமுக்ஷுக்களாகிய உத்தமர் உள்ளத்திலும், கடவுள் பக்தி கொண்டு மத்திமர் எனத்தக்க அடுத்த நிலையினர் உள்ளத்திலும் ஈசன் அபேதமாகப் பொருந்தியிருக்கின்றான். ஆனால் அதமர்கள் நீரின் குணத்தை யுடையவராதலால், இரும்புபோன்ற தீயொழுக்கத்தில் இழுக்கப் பெற்றுத் தம் நிலைமையை இழக்கின்றனர்; அத்தகைய ஒழுக்கம் ஒழிக்க. என்றபடி. 'காய்கின்ற பாலும்' 'நீரு நிலை' என்பன பிரதிபேதம்.

**144.** பழத்தி னிரதம்போற் பரந்தெங்கு நிற்கும்
வழுத்தினு லீச னிலை.

(இ - ள்.) ஈசன் நிலை - ஈசனது உருவத் தோற்றம், வழுத்தினுல் - அறிந்து வணங்குங்கால், பழத்தின் இரதம் போல் - பழத்தின் சாறு, அப்பழம் முழுவதும் பரவி யிருப்பதுபோல, எங்கும் பரந்து நிற்கும் - சரீரமுழுவதும் பரவிப் பொருந்தியிருக்கும் எ - று.

இதுவுமது. அத்தகைய உருவினை வழுத்தினுல்மட்டில் காணமுடியும் என்றார். பழத்தின்சாறு முழுவதும் வியாபித்திருத்தல் முற்றிலும் நன்சுவை தருவதுபோல, ஈசனும்

முழுவதும் பாவி நற்பயன் தரும் என்றபடி, அழுத்தினல் என்றும் பாடம்.

**145.** தனுவொடு தோன்றுமே தானெல்லா மாகி
யணுவதுவாய் நிற்கு மது.

(இ - ள்.) தான் எல்லாம் ஆகி - உலக முழுவதும் தானே ஆகி, அணு அதுவாய் - மிகவுஞ் சிறிய பிரமாணமாக, நிற்கும் அது - பொருந்தி இருக்கும் ஈசுரன், தனுவொடு தோன்றுமே - முமுக்ஷுக்களுக்கு, காட்சிதாச் சட சரீரத்துடனும் தோன்றுவான் எ - று.

இது, கடவுள் உருவம் பெறும் முறை கூறியது. அன்பர்களுக்குக் காட்சிதரும்பொருட்டு அவர்கள் விரும்பிய உருவில் தோன்றுவான் ஈசன் என்றபடி. அணு - மிகவும் சிறியபகுதி. அதனிலும் ஈசனிருப்பது,

> "அணுவு ளவனு மவனு ளணுவுங்
> கணுவற நின்று கலப்ப துணரார்."

என்ற திருமூலர் வாக்கினு லறிக. 'அதுவதுவாய்' என்றும் பாடம்.

**146.** வித்து முளைபோல் விரிந்தெங்கு நிற்குமே
யொத்துளே நிற்கு முணர்வு.

(இ - ள்.) உள்ளே ஒத்து நிற்கும் உணர்வு - குண்டலியினுள் சேர்ந்து நிற்கும் உணர்வு, வித்து முளைபோல -

விதையின் முளை கிளம்பிப் பின் பரவுவதுபோல, எங்கும் விரிந்து நிற்கும் - உடல் முழுவதும் பரந்திருக்கும் எ - று.

இதுவுமது. முளை உண்ணின்று சிறிதாய் எழுந்து வளர்ந்து பின்னர் மரமாவதுபோல குண்டலியி லெழுந்து வளர்ந்து சூனிய நிலையிற் (கபாலத்திற்) கடவுள் பொருந்தி யிருப்பார் என்றபடி, உணர்வு - பிரணவப் பொருளுமாம்.

**147.** அச்சமாங் கார மகத்தடக்கி ஞற்பின்னை
நிச்சயமா மீச னிலை.

(இ - ள்.) அச்சம், ஆங்காரம் - அச்சத்தையும் அகங் காரத்தையும், அகந்து அடக்கினல் - மேல் எழாதபடி அடக்கி விட்டால், பின்னை - பிறகு, ஈசன் நிலை - ஈசன் உருவொடு நிற் பது, நிச்சயமாம் - திண்ணம் ஆகும் எ - று.

இதுவுமது. அகமாசுகளை ஒழித்தல் அவசியமாகும். அச்சம் - உண்மை நெறியில் ஒழுகுங்கால் உண்டாகும் இடை யூறுக்கு அஞ்சுதல். அகங்காரம் - மமதை முதலிய தீக் குணம். இனி அச்சம் என்பதை உயிர் [அச்சு - உயிர் (தெலுங்கு)] என்றும், ஆங்காரம் - ஓங்காரம் என்றும் கொண்டு சுவாசத்தொடு பிரணவத்தைக் குண்டலியில் நிரப்ப எனப் பொருள் உரைப்பினும் பொருந்தும்.

**148.** நினைப்பவர்க்கு நெஞ்சத்து ணின்மலனாய் நிற்கு
மனைத்துயிர்க்குந் தானு மவன்.

(இ - ள்.) அனைத்து உயிர்க்கும் தானும் அவன் - எல் லாச் சீவராசிகளுக்கும் உயிர்போன்ற ஈசுரன், நினைப்பவர்க்கு -

தன்னைக் கருதுவர்க்கு, நெஞ்சத்துள் - அவர்கள் மனதில், நின்மலனாய் நிற்கும் - பரிசுத்தமான தோற்றத்தோடு விளங்குவான் எ - று.

இதுவுமது. நின்மலன் என்றுதல், தான் பிறர் உள்ளத்தில் தோன்றின போதிலும், தான் ஓர் உருவொடு காணப் பெறினும் தன்வரையில் அப்பற்றுக்கள் பற்றப்பெறுதவன் என்பதற்கு, பிள்ளைப்பூச்சி என்னும் புழு சேற்றிலிருப்பினும் அச்சேறு அதனைப் பற்றுதல் இன்மைபோல் என்க.

**149.** ஓசையி னுள்ளே யுதிக்கின்ற தொன்றுண்டு
வாசமலர் நாற்றம்போல் வந்து.

(இ - ள்.) வாசமலர் - வாசனையுடைய புஷ்பத்தின், நாற்றம்போல் - நாற்றத்தைப்போல, வந்து - வெளியில் விகசித்து, ஓசையின் உள்ளே - ஓங்கார சப்தத்தினுள், உதிக்கின்றது - உற்பவிக்கின்ற, ஒன்று உண்டு - ஈசுரன் என்ற ஒன்று உளது எ - று.

இது கடவுள் உருவொடு தோன்றும் விதமுரைக்கின்றது, மலர் மணம் பக்கமுழுவதும் வியாபித்துக் கமழ்வதுபோல, ஓங்காரமென்னும் நிலையினின்றும் உருவொடு வெளியாகும் ஈசுரன் உலகம் முழுவதும் வியாபித்துள்ளான் என்றபடி.

**150.** மோட்டினீர் நாற்ற முளைமுட்டை போலவே
விட்டுளே நிற்கும் வியப்பு.

(இ - ள்.) மோட்டின் நீர் - உயர்வான நிலையிலுள்ள நீர், நாற்றம் - வாசனை, முளை - வித்தினின்றும் எழும் முளை,

முட்டை - கருவுயிர்ப்பு, போலவே - இவைபோல, வீட்டுளே - குண்டலி என்னும் அகத்தில், நிற்கும் வியப்பு - ஈசுரன் நிற்கின்ற ஆச்சரியமாகும் எ - று.

இதுவுமது. சிவம் நீராகவும், முளையாகவும் முட்டையாகவும் உருப்பெற்றுத் தோன்றுகின்றார் என்றபடி. நீர் - தன்னியல்பின் செல்வதும், நிலத்தியல்பால் மாறுபடும் தன்மையும் உடையது; அதுபோற் கடவுள் தன்னியல்பிற் றோன்றி உத்தமர் தன்மைக்கேற்ற உருப்பெறும். நாற்றம் - மலருட்டோன்றி நுகர்ந்தா ரனைவரும் கவரும் வனப்பினது அதுபோல் கடவுள் அடியார்கள் உள்ளத்துதித்து அவர்களை அணுகியவர் அனைவர்க்கும் பக்திவாசனை ஊட்டுவது. முளை - சிறிய உருவிற் றோன்றிப் பருவத்தாலும் எரு முதலியவற்றாலும் பெரு மரமாக வளர்வது. அதுபோற் பக்தி என்னும் விதை அன்பர்கள் மனதில் உதித்து யோகத்தாலும் சாதனையாலும் முமுக்ஷுநிலை என்னும் பெரிய விருக்ஷமாதல். முட்டை - உயிரையும் பிண்டத்தையும் உள்ளடக்கியது; வெயில் முதலிய உபகரணங்களால் வளர்ந்து பிண்டம், சரீரமாகத் தோன்றுவது, அதுபோல் பல சாதனைமுகங்களால் வருந்தி உடலை மேனிலையை அடையச் செய்வது. இங்ஙனம் அவரவர் பரிபக்குவ நிலைக்கேற்ப பலனை ஏற்றபடிப் பரமன் நல்குகின்றான் என்றபடி விரிக்கிற் பெருகும்.

---

# பதிஞருவதிகாரம்

## முத்தி காண்டல்

பரம்பொருளின் உருவைக் காணப்பெற்ற பிறகு முத்தியின் நிலை காணும் தந்திரம் கூறுகின்றது. முத்தி இன்னதென நேர்முகமாக விளக்குவ தரிது ஆகலின், எதிர்முகமாக விளக்குகின்றார்.

**151.** மனத்தோ டுறுபுத்தி யாங்காரஞ் சித்த
மனைத்தினு மில்லை யது.

(இ - ள்.) மனத்தோடு உறு புத்தி - மனதிலும் அதனோடு பொருந்திய அறிவிலும், ஆங்காரம் - அகங்காரத்திலும், சித்தம் - சித்தத்திலும், அனைத்திலும் - ஆகிய இந் நான்கிலும், அது இல்லை - முத்தி என்னும் பொருள் காணப் பெறாது எ - று.

இது முத்திக்கு இலக்கணங் கூறியவாறு. மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கு களங்களாலும் முத்தியை அடையலாம் எனினும், இவற்றிலேயே அதனைக் காண முடியாது என்றார். 'மனத்தொடு புத்தி யகங்காரம்' என்றும் பாடம்.

**152.** வாக்குங் கருத்து மயங்குஞ் சமயங்க
ளாக்கிய நூலினு மில்.

(இ - ள்.) வாக்கும் - சொல்லும், கருத்தும் - எண்ணமும், மயங்கும் - மயங்கி, விபரீதச் செயல்கள் காட்டும், சம

யங்கள் - சமய மதங்கள், ஆக்கிய - தம் மதக்கொள்கைகளை விளக்க எழுதிய, நூலினும் இல் - சாஸ்திரங்களிலும் முத்தி காணப்பெறாது எ - று.

இதுவும் அது. சாஸ்திரங்களாலும் அறிய முடியாதது. சமயங்கள், ஒவ்வொரு கொள்கையையே வற்புறுத்துவன, அன்றியும், மற்ற சமயத்தினர் கொள்கைகளை மறுத்துக் கண்டிப்பன ஆதலின் அவை ஒவ்வொன்றும் சிந்தையும் மொழியும் செயலும் மாறுபட்டவையாயிருக்கும் என்றார். இனி அக்கொள்கைகளைக் கேட்பார் மயங்கும் சமயம் எனினு மாம்.

**153.** **தனக்கோ ருருவில்லை தானெங்கு மாகி**
**மனத்தகமாய் நிற்கு மது.**

(இ - ள்.) அது - அம்முத்தி, தனக்கோர் உருவு இல்லை-தனக்கு என்று குறிப்பிட்ட உருவம் கொண்டதன்று, தான் எங்கும் ஆகி - தான் எவ்விடத்தும் வியாபித்து, மனத்து அகத்து நிற்கும் - குண்டலிக்குள் அடங்கி யிருக்கும் எ - று.

இதுவுமது. கடவுளே முத்தி யாதலின், கடவுளைப் போல் உருவற்றது என்றார்; அரூபி என்றும் 'அருகன்' என்றும் பாராட்டப்படுவது இதுவெனவும் அறிக.

**154.** **உருவமொன் றில்லை யுணர்வில்லை யோது**
**மருவமுந் தானதுவே யாம்.**

(இ - ள்.) அதுவே - அம்முத்தி தான், உருவம் ஒன்று இல்லை - ஒருவகையான உருவமும் கொண்டதன்று, உணர்வு

இல்லை - பிறரால் வேறு முறையாக அறியப்படுந் தன்மையு மன்று, ஓதும் - ஆதலின், பெரியோர் பாராட்டும், அருவமும் தான் ஆம் - உருவற்ற நிலையாகிய அருவம் எனப்படுவதே ஆகும் எ - று.

இதுவுமது. அம்முத்திக்கு உருவமும், குண்டலி சாதனை யொழிந்த மற்றைய வழியால் அடைவதும் இல்லை என உரைத்தார்.

**155.** பெண்ணு ணலியென்று பெயரொன் றிலதாகி
விண்ணாகி நிற்கும் வியப்பு.

(இ - ள்.) விண் ஆகி - ஆகாயத்தைப்போன்று, பெண் ஆண் அலி என்று - பெண் என்றும், ஆண் என்றும், இரண்டு மற்ற அலி என்றும், பெயர் ஒன்று - ஒருவிதமான குறியீடும், இலது ஆகி - இல்லாததாய், நிற்கும் - அது நிலை பெற்றுளது, வியப்பு - வியப்பல்லவா எ - று.

• இதுவுமது. முத்தி ஆண் பெண் என்ற வேற்றுமையும் கடந்தது; இரண்டும் இல்லாதது அலி என மயங்கக்கூடா தென அதுவுமில்லை என்றார். பேத அபேத நிலையைக் கடந்த தாகலின் ஆகாயத்தை உவமை கூறினார் என்க.

**156.** அனைத்துருவ மாய வறிவை யகலிற்
றினைத்துணையு மில்லை சிவம்.

(இ - ள்.) அனைத்து உருவம் ஆய - பலவகைப்பட்ட உருவத்தொடுகூடிய, அறிவை - பிரணவ நிலையை, அகலில் -

சீவான்மா நீங்கினால், தினைத்துணையும் - ஒரு சிறிதும், சிவம் இல்லை - அவ்வான்மாவில் இல்லை எ - று.

இது பிரணவத்தால் முத்தியின்றன்மை அறியும்விதம் கூறியது. கடவுள் எவ்வுருவினும் எப்போதும் பொருந்தியில்லாதவர் எனினும், பிரணவப் பொருள், அவரைப்போலவே எல்லாப் பொருளுமாக அமைந்திருக்கும் தத்துவத்தை அறிதல் அவசியமென்றும், அறிந்தால முத்தியின் நிலையும அடையலாம் என்றும் கூறினார். அறிவு - சிவம் எனினுமாம்.

**157. துணி முகத்துக் காதியாத் துன்னறி வன்றி யணிந்தா ரிரண்டு விரல்.**

(இ - ள்.) துணி முகத்துக்கு - துன்பங்களைத் துணிக்கும் தன்மைக்கு, ஆதியா - காரணமாக, துன் அறிவு அன்றி - நெருங்கிய பிரணவ அறிவே அல்லாது, ஆர் இரண்டு விரல் - பொருந்திய இரண்டு விரல்கள், அணிந்து - நெருங்கி உள்ளன எ-று.

இது சின்முத்திரையின் விசேடம் உரைத்தது. துன்பத்தை ஒழிப்பன என்பதற்கு துணிமுகம் என்றார். பிரணவமே அல்லாமல் சின்முத்திரையும் துன்பத்தை ஒழிக்கும் என்க. இரண்டு விரல் - பெருவிரல், சுட்டுவிரல்கள். சின்முத்திரை யிலக்கணம் குருமுகமாய் அறியத்தக்கது. 'அணிய' எனப் பன்மையில் வரவேண்டியது, ஈண்டு மயக்கம்.

**158. மயிர் முனையிற் பாதி மனத்தறி வுண்டே லுயிர்ப்புண்டாங் காதி நிலை.**

(இ - ள்.) மனத்து அறிவு - பிரணவ வுணர்ச்சி, மயிர் முனையில் பாதி உண்டேல் - மயிர் முனையிலும் பாதி அளவு

இருந்தாலும், ஆதி நிலை - பரமசிவனது தன்மை, ஆங்கு - அக் குண்டலிநிலையில், உயிர்ப்பு உண்டாம் - உயிர் பெற்றுத் தோன்றும் எ - று.

இதுவும் பிரணவத்தின் உயர்வு கூறியது. மிகவுஞ் சிறிய அளவாயிருப்பினும் உயிர்ப்பு உண்டாகும் என்பதற்கு மயிர் முனையிற் பாதி என்றார்.

**159.** **தற்பரமாய் நின்ற சதா சிவத்தோ டொன்றி**
**லுற்றறி வில்லை யுயிர்க்கு.**

(இ - ள்.) தற்பரமாய் - சீவராசிகளின் உயர் நிலையாக, நின்ற - பொருந்திய, சதாசிவத்தோடு - பரமசிவத்தொடு, ஒன்றில் - அச்சீவராசியே முத்தி நிலையில் பொருந்தினால், உயிர்க்கு - அச்சீவராசிக்கு, உற்ற அறிவு இல்லை - பொருந்திய இந்திரிய உணர்ச்சிகள் பிற கிடையா எ - று.

இதுவுமது. ஈசுர ஞானமே முத்தி ஆதலின் அது கிடைக்க, ஐம்புலன்களான் உண்டாகும் உணர்ச்சியும் அவற்றின் அனுபவமும் இல்லையாகும் என்றபடி.

**160.** **உறக்க முணர்வு பசிகெடப் பட்டாற்**
**பிறக்கவும் வேண்டாம் பெயர்ந்து.**

(இ - ள்.) உறக்கம் - தூக்கமும், உணர்வு - ஐம்புல நுகர்ச்சியும், பசி - வயிற்றுக் காகாரமளிக்கு முணர்வும், கெடப் பட்டால் - ஆகிய இவை இல்லையென நீக்கியபொழுது, பெயர்ந்து - மறுபடியும், பிறக்கவும் வேண்டாம் - பிறக்க வேண்டிய நியதி இல்லாமற் போகும் எ - று.

இதுவுமது. உறக்கம் - தேகாரோக்கியத்துக் கின்றி யமையாதது. இது நீக்கிச் சமாதி நிலையாகிய உறக்கம் வேண்டும் என்பது கூறுமற் கூறினார். உணர்வும் பசியும் - பிறவியின் வளர்ச்சிக்கு உபகரணம், இவை விலகப் பிறப்பும் இன்மையாம் என்றபடி.

---

# பதினேழா மதிகாரம்

## உருபாதீதம்

அஃதாவது, கடவுள் உருவத்தில் ஒன்றி நிற்கும் நிலை. இரண்டறக் கலத்த லென்பதும் இதுவே.

**161.** கருவின்றி வீடாங் கருத்துற வேண்டி
லுருவின்றி நிற்கு முணர்வு.

(இ - ள்.) கரு இன்றி - மறுபிறவி இல்லாமல், வீடு ஆம் கருத்து உற - பந்தங்களினின்றும், நீங்கிக்கொள்ளும் எண்ணம் பொருந்த, வேண்டில் - மனதில் விரும்பவும், உணர்வு - உணர்ச்சி, உரு இன்றி நிற்கும் - சரீர சம்பந்தமான, பொருள்களின் உருவத்தினின்றும் விலகி அரூபமாய் நிற்கும் எ - று.

இது பிறப்பறுத்தலுக்கு வழிகூறியவாறு. எண்ணம் உண்டான அளவில், அதை யடையும் வழியும் பயனும் பெறப்படும் என்று கூறுகின்றார். பந்தங்களை விலக்கிக்

கொள்ள விரும்பினாலும் அதற்கு வேண்டிய சாதனங்கள் உண்டாகும் என்றபடி.

**162 பிறத்தலொன் றில்லை பிறவாமை வேண்டி**
**லறத்துறுவ மாற்றி யிரு.**

(இ - ள்.) பிறவாமை வேண்டில் - மறுபிறப்பு வேண்டாமென விரும்பினால், அறத்து - தரும சிந்தனையில், உறுவ - பொருந்தியிருக்கும் கொள்கைகளை, மாற்றி இரு - வேறுபடுத்தி இருக்க; அப்படிச் செய்ய, பிறத்தல் ஒன்று இல்லை - பிறப்பது என்றும் ஒன்று கிடையாது எ - று.

இதுவுமது. தரும சிந்தனையும் நற்பயன் றருவதும், அதனால் மறுபடியும் பிறப்பு எய்தும் ஆதலின், அவ்வெண்ணத்தையும் விலக்கிச் சூனிய நிலையில் இருப்பின் பிறப்பு நீங்கும் என்றார். புண்ணியச் செய்கையும் பிறப்புக்கு ஏது என்பது நூற் றுணிபு. இஃதறியாது அறத்துருவம் என உரையில் மட்டும் பாடம் திருத்திப் பொருள் கூறுப.

**163. உருவங்க ளெல்லா மறத்திற மாக்கிற்**
**கருவொன்று மில்லைக் கருத்து.**

(இ - ள்.) உருவங்கள் எல்லாம் - சரீர சம்பந்தமான பொருள்களின் தன்மை எல்லாம், அறத்திறம் ஆக்கின் - தரும சிந்தனையில் செல்லச் செய்தால், கரு ஒன்றும் இல்லை - பிறப்புக்கு ஆதாரம் ஆகாது, கருத்து - இதனை கருத்தில் இருத்துக எ-று.

இதுவுமது. உருவங்களை மாய்ப்பதைவிட அறவழியில் செலுத்துவது விசேடம் என்றபடி.

**164. கறுப்பு வெளுப்புச் சிவப்புப்பொன் பச்சை யறுத்துருவ மாற்றி யிரு.**

(இ - ள்.) கறுப்பு வெளுப்பு சிவப்பு பொன் பச்சை- கறுப்பு, வெண்மை, சிவப்பு, மஞ்சள், பச்சை என்ற இவ் வைந்நிறம் முறையே கொண்ட காற்று, ஆகாயம், தீ, நிலம், நீர் என்ற பூதங்களை, உருவம் அறுத்து - இந்திரிய நுகர்ச் சிக்கு ஏற்ற தன்மையை வெட்டி, மாற்றி - குண்டலி யனுப வத்துக்கு ஏற்ற மாற்றி, இரு - அந்நிலையில் இருக்க எ - று.

இதுவும் அது. நிறங்கள் பரியாயமாக ஐம்பூதங்களையும் குறித்தன. பொன்-மஞ்சள்நிறம்.

**165. அனைத்துருவ மெல்லா மறக்கெடுத்து நின்றால் வினைப்பிறவி யில்லையாம் வீடு.**

(இ - ள்.) அனைத்து உருவம் எல்லாம் - தேகத்தின் உள்ளும் புறமும் காணும் எல்லா உருவங்களையும், அறக் கெடுத்து - முழுவதும் அழித்து, நின்றால் - அக்குண்டலி நிலையிலேயே இருந்தால், வினைப்பிறவி - வினைப்பயனால் பெறும் மறு பிறப்புக்கள், இல்லையாம் - இல்லையாகும், வீடு - அதுவே ஜென்ம விமோசனமாம் எ-று.

இது பிறவியில்லாமல் ஒழித்துக்கொள்ளும் தந்திர முறைத்தது. உருவம் - மேலுரைத்த பூதங்களும் இந்திரி யங்களும்.

**166.** நினைத்துருவ மெல்லா நீசெம்மை கண்டாற்
பிறத்தலொன் றில்லையே யாம்.

(இ - ள்.) உருவம் எல்லாம் - எல்லாப் பொருளின் தன்மையிலும், நீ நினைத்து செம்மை கண்டால் - நீ ஒன்று கருதி அவற்றின் நன்மையினைமட்டும் கண்டு அனுபவித்தால், பிறத்தல் ஒன்று இல்லையே ஆம் - மறுபிறவி என்பதொன்றில்லை காண் எ - று.

இதுவுமது. உருவங்களை அழித்தலினும் தனக்கேற்பப் பயன்படுத்திக் கொள்ளுதல் சிறந்தது என்பது செம்மை ஆவதிலுள்ள பயன்றரும் குணம்.

**167.** நினைப்புமறப் பின்றி நிராதரமாய் நின்றுற்
றனக்கொன்று மில்லைப் பிறப்பு.

இ-ள். நினைப்பு மறப்பு இன்றி - உலக விடயங்களில் விருப்பும் வெறுப்பும் இல்லாமல், நிராதரமாய் நின்றால் - ஆசைநீங்கிய நிலையிலிருப்பின், தனக்கு - அவ்வான்மாவுக்கு, பிறப்பு ஒன்றும் இல்லை - மேற்பிறவிகளொன்றும் கிடையாது.

இதுவுமது. நினைப்பு, மறப்பு - இச்சையில் நினைப்பும் அதை வெறுப்பதாலெழும் மறதியுமெனக்கொள்க. ஆதரம் - ஆசை. நிராதரம் என்பது நிஷ்காமிய பூசையையும் உட்படுத்தியது.

**68.** தோற்று முணர்வை யறுத்துப் புறத்துணர்வை
மாற்று முணர்வது வீடு.

(இ - ள்.) தோற்றும் உணர்வை - உள்ளத்தில் இச்சையை உண்டாக்கும் உணர்ச்சியினை, அறுத்து - விலக்கி,

புறத்து உணர்வை - பஞ்சபூதங்களின் இயைபால் எழுவன வற்றை, மாற்றும் உணர்வு - தன் யோகத்துக்கேற்ப மாற்றிக் கொள்ளும் உணர்ச்சியாகிய, அதுவீடு - அக்குணம் மோக்ஷ சாதனமாம் எ - று.

இதுவுமது. உணர்வு உள்ளத்தெழுவதும், பூதங்களின் இயைபால் தோன்றுவனவும் பகுத்தறியும் தன்மையும் எனப் பிரித்தார். இவற்றின் குறைகுணங்களை வல்லார்வாய் கேட்க.

**169.** பிறப்பறுக்க வீடாகும் பிண்டத்து ணின்ற
வறத்துருவ மாற்றி யிரு.

(இ - ள்.) பிண்டத்துள் நின்ற - குண்டலியகத்து உள்ள, அறத்து உருவம் ஆற்றி இரு - தருமசொரூபமான ஈசுரனைக் கண்டு இருக்க, அதுசெய்ய பிறப்பு அறுக்க - பிறவியும் அறுபட்டு, வீடு ஆகும் - மோக்ஷநிலை எய்தும் எ-று.

இதுவுமது. ஈசுரன் 'அறவாழியந்தணன்' ஆதலின் அறத்துருவம் என்றார். பிண்டம் ஈண்டுக் குண்டலி, பிறப் பறுத்தல் - மேலுரைத்த சாதனைகளாம்.

**170.** ஓசை யுணர்வோ டுயிர்ப் பின்மை யற்றக்காற்
பேசவும் வேண்டா பிறப்பு.

(இ - ள்.) ஓசை - நாதவோசையற்ற மற்ற சப்தமும், உணர்வொடு - குண்டலியல்லாத மற்ற உணர்ச்சியும், உயிர்ப்பு இன்மை - மூலாக்கினி ஒழிந்த மற்ற வாயுவின் இயக்கம்

நீங்கிய நிலையும், அற்றக்கால் - அழிந்தால், பிறப்பு பேசவும் வேண்டா - மறுபிறப்பு உளது என்று சொல்லவும் வேண்டியதில்லை எ - று.

இதுவுமது. இம்மூன்றும் விலக்குதல் அருமை காட்டவே 'அற்றக்கால்' என்றார்.

---

# பதினெட்டாமதிகாரம்

## பிறப்பறுத்தல்

முன்னதிகாரத்தில் மறுபிறவியை ஒழிக்குந் தந்திரத்தை உரைத்து இதில் இப்பிறவியையும் ஒழிக்கும் உபாயம் கூறுகின்றார். இனி முன்னதிகாரத்தின் புறனடை எனினுமாம். பிறப்பறுத்தல் என்றும் பாடம்.

**171. தன்னை யறியு மறிவு தனையறியிற்**
**பின்னை பிறப்பில்லை வீடு.**

(இ - ள்.) தன்னை அறியும் - தான் இன்ன தன்மையன் என்றறியும், அறிவுதனை அறியின் - உணர்ச்சியை அறிந்துகொள்ளின், பின்னைப்பிறப்பு இல்லை - அதன் பிறவி கிடையாது, வீடு - மோக்ஷமேயாம் எ - று.

இது பிறப்பினை ஒழிக்கும் உபாயம். தன்னைத் தானறிதல் முன்னரே விளக்கப்பட்டது. ஈசுரநிலை யடைந்தார்க்குச்

சித்தியாம் அஃதென்பதால் அந்நிலை யடைந்தார்க்குப் பிறவியும் இன்மையாய் விடும்.

**172. அறம்பாவ மாயு மறிவுதனை யறிந்தாற்**
**பிறந்துழல வேண்டாம் பெயர்ந்து.**

(இ - ள்.) அறம் பாவம் ஆயும் அறிவுதனை - நன்மை தீமை என்பன ஆராயும் உணர்ச்சியை, அறிந்தால் - அடைந்தக்கால், பெயர்ந்து - மீண்டும், பிறந்து - பிறந்த பிறகும், உழலவேண்டாம் - பிறவியின் தீமையில் அவஸ்தை வேண்டியதில்லையாய்விடும் எ - று.

இதுவும் அது. 'தக்க இன்ன தகாதன இன்ன' என்பதறியின் மீண்டும் சஞ்சிதப்பெருக்கு இல்லையாக இப்பிறவியிலும் தீமை யணுகா வழியாகும் என்க. இனிப் பெயர்ந்து பிறந்து என்பதற்கு மறுபடியும் வேறுபிறவி எடுத்து எனினுமாம்.

**173. சிவனுவந் தாளுச் செறிந்தடங்கி நிற்கிற்**
**பவனாச மாகும் பரிந்து.**

(இ - ள்.) சிவன் உருவம் - சதாசிவத்தின் உருவம், தாளு - குண்டலியாகவே, செறிந்து அடங்கி நிற்கின் - அதில் நெருங்கி உள்ளடங்கி நிற்க, பவன் நாசம் பரிந்து ஆகும் - அன்பினால் பிறப்பு நாசமடையும் எ - று.

இதுவும் இப்பிறவியின் தீமையை மாற்றும்வழி கூறியது. குண்டலியிற் சிவநிலை கண்டார்க்குப் பிறந்தும் பிறவாத சூக்கும நிலையை யெய்தும். பவன் - பவம், பிறப்பு.

**174.** **உறக்க முணர்வோ டுயிர்ப்பின்மை கெட்டாத**
**பிறப்பின்றி வீடாம் புறம்.**

(இ - ள்.) உறக்கம் - தூக்கம், உணர்வு - ஐம்புல வுணர்வு, உயிர்ப்பு இன்மை - இடைகலை பிங்கலை சுழுமுனையும் அடங்கிய நிலை இவை, கெட்டால் - ஒன்றாகி நீங்கவும், புறம் பிறப்பு இன்றி - வெளியான (அடுத்த) பிறப்பில்லாமல், வீடு ஆம் - மோக்ஷமாகும் எ - று.

இதுவுமது. உறக்கம் தூங்காமற் றூங்கும் யோகநிலை, உறக்கம் உணர்வு உயிர்ப்பு என்ற இவையும் ஒன்றோடொன்றிசைந்து நீங்கியபிறகு பிறப்பும் நீங்கும் என்றபடி. இப்பொருள் கொள்ளாவிடின் மேல் 'ஓசையுணர்வோடு' (குறள் - 170) கூறியது கூறல் என்னும் குற்றமாம்.

**175.** **நினைப்பு மறப்பு நெடும்பசியு மற்று**
**லனைத்துலகும் வீடா மது.**

(இ - ள்.) நினைப்பு - பொருள்பால் விருப்பு, மறப்பு - அவற்றை விலக்க எண்ணும் வெறுப்பு, நெடும்பசியும் - உடலை வளர்க்க வுதவும் தீயாகிய பசி, அற்றால் - இவை ஒழிய, அது அனைத்து உலகும் - உலக முழுவதிலும் எங்கிருப்பினும் மோக்ஷமாம் எ - று.

இதுவுமது. விருப்பு வெறுப்பற்ற நிலை முன்னர் கூறப்பட்டது. நினைப்பு - சாக்கிரதை நிலையென்றும், மறப்பு - சுழுத்தி - பசி - துரியம், துரியாதீதம் எனினு மமையும்

இவை விரிப்பிற் பெருகும். உலகில் உயிர் வாழினும் உலகப் பற்றில்லாத பெரியார் நிலை எய்துவிக்கும்.

**176. தன்னை யறிந்து செறிந்தடங்கு தானத்தாற்**
**பின்னைப் பிறப்பில்லை வீடு.**

(இ - ள்.) தன்னை அறிந்து - தன் நிலை உணர்ந்து, செறிந்து அடங்கு தானத்தால் - அது சதாசிவத்துடன் நெருங்கி அடங்குகின்ற குண்டலி நிலையினால், பின்னை - அதன்பிறகு, பிறப்பு - பிறப்பினால் அடையும் தீப்பயன், இல்லை வீடு - இன்மையும் அதுவே மோக்ஷமென்க எ - று.

இதுவுமது. தன்னைத்தானறிந்து குண்டலியில் நோக்குக என்றார்.

**177. உடம்பிரண்டுங் கெட்டா லுறுபொருளொன் றுண்டு**
**திடம்படு மீசன் றிறம்.**

(இ - ள்.) இரண்டு உடம்பும் கெட்டால் - தூல சூக்கும உடல்கள், இரண்டும் வேற்றுமை நீங்கி ஒன்றுபட்டால், திடம்படும் ஈசன் திறம் - நிச்சயமான சதாசிவத்தின் சக்தியாகிய, உறு பொருள் ஒன்று உண்டு - அடையும் பொருள் ஒன்று உள்ளது எ - று.

இது தூல சூக்கும வேற்றுமை நீக்க வேண்டுமென்றது. இரண்டும் ஒன்றாகியபோது ஈசுரனே உள்ளத்திற் குடி யிருப்பன். அதனால் பிறப்பு அழியும் என்க.

**178.** மருளன்றி மாசறுக்கின் மாதூ வெளியா
யிருளன்றி நிற்குஞ் சிவம்.

(இ - ள்.) *மருளன்றி - காமவெகுளி மயக்கமில்லாமல், மாசு அறுக்கின் - உள்ளக்களங்கம் ஒழித்தால், மாதூவெளியாய் - பெரிய பரிசுத்தமான வெட்டவெளி என்னும் சிதாகாசமாகச், சிவம் இருள் அன்றி நிற்கும் - சதாசிவம் இருள் கடிந்த தன்மையில் நிலைத்திருக்கும் எ - று.*

*பிறவி யொழிந்தால் மனமயக்கமுறுமெனில் அப்போழ்து சதாசிவன் அவ்வுள்ளத்திற் குடியிருப்பன் என்றபடி. தூவெளி - மனம் அதனையே சிதாகாசமென்றார்.*

**179.** விகாரங் கெடமாற்றி மெய்யுணர்வு கண்டா
லகாரமாங் கண்டீ ரறிவு.

(இ - ள்.) *விகாரம் கெட மாற்றி - மனச்சேட்டைகளை அகற்றி மாற்றி, மெய் உணர்வு கண்டால் - தத்துவஞானம் காணப்பெறின், அறிவு அகாரமாம் - அறிவு ஆனது அகாரரூபமாய், பிரணவத்தின் மூலப்பொருளாய்விடும், கண்டீர் - இதனை அறிமின் எ - று.*

*இதுவுமது. அகர இகர உகரமே ஓங்காரம் ஆயிற்று என்பது நூற்றுணிபு ஆதலின், ஓங்காரமென்னும் பிரணவத்துக்கு மூல எழுத்து அகரமயமாகும் என்றார்.*

**180.** **சிந்தையாங் காரஞ் செறிபுல னற்றக்கான்**
**முந்தியே யாகுமாம் வீடு.**

(இ - ள்.) சிந்தை - மனம், ஆங்காரம் - மமதை, செறி புலன் - செறிந்த ஐம்புலசேட்டை ஆகிய இவை, அற்றக்கால் - நீங்கி ஒன்றுபட்டால், வீடு முந்தியே ஆகும் - மோக்ஷ நிலை முன்னரே அடையப்பெறும் எ - று.

இதுவுமது. அடைவது நிச்சயம் என்பதற்கு முந்தியே ஆகும் என்றார்.

---

# பத்தொன்பதா மதிகாரம்

## ஒளி காண்டல்

பிறப்பறுத்த பின்னர் ஈசுரக்காட்சி சித்திக்கவேண்டும். ஈசுரன் ஒளி வுருவாதலின் அவ்வொளியை காணும் பகுதி யிது. தூயவொளி காண்டலென்றும் பாடம்.

**181.** **தோன்றிய வெல்லாந் தொடக்கறுத்துந் தூய்வெளியாய்த்**
**தோன்றியக்காற் றூய வொளி.**

(இ - ள்.) தோன்றிய எல்லாம் - உலகத்தில் உதித்த எல்லாவற்றையும், தொடக்கு அறுத்து - சம்பந்தத்தை விலக்கி, தூய்வெளியாய் - பரிசுத்த சூனிய நிலையாய், தோன்றக்கால் - காணப்பெறும்போது, தூய ஒளி - பரிசுத்தமான வெளிச்சம் (பிறக்கும்) எ - று.

இது அமிர்தநிலை கண்டபிறகு பேரொளி உள்ளிடத்தில் திகழப் பெறும் தத்துவ முறைத்தது. எல்லாப் பொருளும் இன்மை என்ற சூனியநிலை யடைந்தபிறகு எரிக்கும் பொருள் ஒளிதருவதுபோல், மிக்க பிரகாசமாக விளங்கும். வெளி - வெட்டவெளி, சூனியநிலை.

**182.** **தெளிவாய தேச விளக்கொளி காணில்**
**வெளியாகி வீடதுவே யாம்.**

(இ - ள்.) தெளிவாய - தெளிந்த, தேசவிளக்கு ஒளி காணில் - அந்தராத்துமாவின் மிக்க ஒளியை உள்ளிடத்துக் காணப்பெறில், வெளியாகி - தூலசரீரமும் சூனிய நிலையாய், வீடு அதுவே - மோக்ஷ நிலை எய்தும் எ - று.

இதுவுமது. உடலும் சூனியநிலையில் பேரொளி பெறும் என்றபடி தேச (தேஜஸ்) ஒளி - மிக்க ஒளி.

**183.** **மின்போ லுறுவ விளக்கொளிபோன் மெய்க்காணிற்**
**பொன்போல மூலம் புகும்.**

(இ - ள்.) மின்போல் - மின்னலைப்போலவும், விளக்கொளிபோல் - விளக்கின் ஒளியைப்போலவும், மெய் காணில் - உடல் விளங்கப் பெற்றால், பொன்போல - பொன் மூசினுள் உருகி யிறங்குதல்போல், மூலம் புகும் - மூலாதாரத்தினுள் ஈசன் புகுவன் எ - று.

இதுவுமது. மின்னல் விட்டுவிட்டுப் பிரகாசமாய் விளங்கும் விளக்கு விடாமல் சிறிய ஒளியுடன் விளங்கும். அது

போல, குறுகிய காலத்திற் பரிபக்குவமடைந்த தேகம் சூனிய நிலை அடைதலும், நீண்டநேரத்தில் சிறிது சிறிதாக அந்நிலை பெறுதலும் குறிப்பிடப்பட்டது. பொன் மூசில் உருகிய போது கீழே இறங்கி விடுவதுபோல ஈசனும் மூலத்தை அடைவன் என்றார்.

**184.** பளிங்கு வலம்புரி பானிறத்த னாகிற்
· றுளங்கொளி யாந் தூயவொளி.

(இ - ள்.) தூய ஒளி - பரிசுத்தமான ஒளிமயம் பெற்ற உடல் உடையவன், பளிங்கு வலம்புரிபால் - கண்ணாடி, சங்கு, பால் என்பனவற்றின், நிறத்தன் ஆகின் - தன்மையை உடையவனெனில், துளங்கு ஒளியாம் - உலகத்தையே அசைக்கும் மிக்கொளி பெற்றவனும் எ - று.

இதுவுமது. அடுத்தது காட்டும் பளிங்கும், தன்னடைந்த நீரைத் தூய்மை செய்யும் சங்கும், அழுக்கும் வியாதியும் அகற்றும் பாலும்போல அவற்றின் செய்கையையும் நிறத்தையும் கொண்ட உடல் என்க. விரிக்கிற் பெருகும்.

**185.** சங்கு நிறம்போற் றவள வொளிகாணி
லங்கையி லெல்லியத்தே யாம்.

(இ - ள்.) சங்கு நிறம்போல் - சங்கின் நிறத்தைப்போல, தவள ஒளி காணில் - வெண்மையாகச் சரீரத்தின் ஒளியை அடைந்தால், அங்கையில் - உள்ளங்கையில், எல் - சூரியனது, இயத்தே ஆம் - கிரணத்தின் தொகுதியைக் கண்டதாம்.

இதுவுமது. தூயநிலை அடைந்ததால் உடலைத் தவள ஒளி என்றார். இனி நீறுபூசிய சிவனுருவின் ஒளி எனினு மாம். சூரியனது கிரணம் ஆகாயத்தினின்றும் புறப்படுவ தன்றிப் பரிபக்குவம் அடைந்தால் உள்ளங்கையினும் அத னைப் பெருகச் செய்யலாம் என்றபடி, 'அங்கையி னெல்லி' என்ற பாடத்திற் கண்ட உவமையின் கருத்து இன்மையின் விலக்குக.

**186.** **துளங்கிய தூண்டா விளக்கொளி காணில்**
**விளங்கிய வீடாம் விரைந்து**

(இ - ள்.) துளங்கிய - மனமாசினை அசைக்கும், தூண்டா விளக்கு ஒளி - தூண்டாவிளக்குப்போன்ற குண்டலி சத்தி யின் ஒளியினைக், காணில் - காணப்பெறில், விளங்கிய - விளக்கமான, வீடு விரைந்து ஆம் - மோக்ஷநிலை சுடுதியில் கிடைக்கும் எ - று.

இது குண்டலியினும் அச்சத்தி உண்டாமாறு கூறியது தூண்டாவிளக்குப்போல் நிச்சலமாய்ச் சுடர்வீசுதலின் குண் டலிக்குப் பரியாயமாய் வந்தது.

**187.** **மின்மினி போன்ற விளக்காகத் தான்றோன்றி**
**லன்னைப்* பிறப்பியையு மாம்.**

(இ - ள்.) மின்மினிபோன்ற-மின்மினிப் பூச்சிபோன்ற, விளக்காகத் - அறியாமை சூழ்ந்து விட்டுவிட்டு விளங்கும்

* அன்னைப் பிறப்பையுமாம், அன்னப் பறவையே யாம்.

ஒளியுடையதாகத், தான் தோன்றில் - ஒரு சீவன் பொருந்தி னால், அன்னைப்பிறப்பு - அவற்கு மறுபடியும் தாய் வயிற்றில் உதிக்கும் பிறவி, இயையும் ஆம் - பொருந்திவிடும் எ - று.

இஃது ஒளிபெறினும், அதனை வளர்த்தாலன்றிப் பிறவி இயைந்துவிடுமென்றபடி. மின்மினி ஒவ்வொரு சமயத்தில் (பறக்கும்போது) மட்டில் ஒளிகாட்டுவதுபோல் தான் முயற் சிக்கும்போதுமட்டில் ஒளிகாண்பான் என்றும், அதனால் தந்த பலம் பெறாது, அப்பலனைமட்டில் அனுபவிக்க மற்று மொரு பிறவி கிடைத்துவிடுமென்றும் கூறியது.

**188.** உள்ளொளி தோன்றி லுன்னி வருமொளியால்
யவ்வொளி யாதி யொளி.

(இ - ள்.) உன்னி - மூலக்கனலை எழுப்பக் கருதிச் சாதனைசெய்து, உள்ளொளி தோன்றில் - அம் மூலக்கனல் உதிக்கவும், ஒளியாய்விடும் - குண்டலி யொளியாகத் தோன் றும், அவ்வொளி - அவ் ஒளியே, ஆதி ஒளி - மூலாக்கிரத்தி னின்றும் உண்டாகி ஒளிக்கும் பிரகாசம் எ - று.

இதுவுமது. மூலாதாரத்தின் ஒளியே உடன் முழுவ தும் பரவினும், குண்டலி ஒளியாகச் சிரசில் இறங்குதல் ஆதியொளி என்றார்.

**189.** பரந்த விசும்பிற் பரந்த வொளிகாணிற்
பரம்பரமே யாய வொளி.

(இ - ள்.) பரந்த விசும்பில் - பரந்துள்ள சூனிய நிலை யில், பரந்த ஒளி காணில், விசாலித்த ஜோதிப் பிரகாசம்

கண்டால், பரம்பரமே ஆய ஒளி - அது சதாசிவரூபமாகிய மூலப்பிரகாசம் எ - று.

இதுவுமது. சூனியநிலையாவது 'சிரசு' நிலையை இனி ஆகாயத்திற் சூரியனைப்போன்ற, அல்லது மற்ற ஒளிதரும் கிரகங்களைக் காணப்பெறில் சதாசிவநிலை எய்தியபடி எ - று.

**190.** ஆதியொளியாகி யாள்வானுந் தானாகி
யாதி யவனுருவ மாம்.

(இ - ள்.) ஆதி ஒளியாகி - மூலாக்கினியின் ஒளியாகவும், ஆள்வானும் தானாகி - உடலின் உள்ளும் புறமுமாய் ஆள்பவனுமாய், ஆதி அவன் உருவம் ஆம் - பிறப்பிறப்பு யாவற்றுக்குந் தலைவரும் அவனது சொரூபமே யாம் எ - று.

இது குண்டலி யொளியும் கடவுள் ஒளி என்று வற்புறுத்துகின்றது. அவன் - சதாசிவன்.

இவ்வதிகாரத்தில் கீழ்க்கண்ட குறள் மிகைபாடமாக ஒரு பிரதியிற் காணப்படுகிறது.

கற்கினுங் கேட்கினு ஞானக் கருத்துற
நிற்கிற் பரமனே நீ.

---

# இருபதா மதிகாரம்

## சதாசிவம்

அஃதாவது தூய்மையான ஒளியின் றன்மை யறிந்த பின்னர் அவ்வொளியில் விளங்கும் சதாசிவத்தை யறிதல். சதாசிவம் குண்டலியிற்கப்பால் சூனிய நிலையில் இருப்பது சூனியநிலை, ஆகாயம். இவ்வதிகாரத்துக்கு, வெளிகாண்டல், என்ற பெயரும் காணப்பெறும்.

**191.. பத்துத் திசையும் பரந்த கடலெங்கு
மொத்தெங்கு நிற்குஞ் சிவம்.**

(இ - ள்.) சிவம் - சதாசிவம், பத்துத் திசையும் - பத்துத் திக்குகளிலும், பரந்தகடலெங்கும் - விசாலித்த கடல் போல் கீழ் முழுவதும், ஒத்து எங்கும் நிற்கும் - ஒரே தன்மையாய் எல்லா இடத்திலும் பொருந்தியிருப்பார் எ - று.

இது சிவன் பொதுவாக இருக்கும் நிலைகூறியது. யாதொன்றும் இல்லா இடமே சூனியம், வெட்டவெளி என்பது. பத்துத்திசையும் என்றதால் பத்துத் திசையினும் உள்ள சூனிய இடத்தை. திசையும் கடலும் கூறவே, பொருளின்மை உண்மை என்ற இருநிறத்தும் பொருந்தியது அறிக. பத்துத்திசை - வடக்குமுதலிய திசைகள் நான்கு, வடமேற்கு முதலிய கோணங்கள் நான்கு, பூமி ஆகாயம்.

**192. விண்ணிறைந்து நின்று விளங்கு சுடரொளிபோ
லுண்ணிறைந்து நிற்குஞ் சிவம்.**

(இ - ள்.) விண் நிறைந்து - ஆகாய முழுவதும் நிறைய, விளங்கும் சுடர் ஒளிபோல் - பிரகாசிக்கும் சூரிய சந்திர

உடுகணங்களின் ஒளிபோல, உள் நிறைந்து - குண்டலினியினுள்ளும் சுவாதிட்டான முடிவிலும், சிவம் நிற்கும் - சதாசிவம் பொருந்தியிருக்கும் எ - று.

இதுவுமது. உள் - ஆறு தாரங்களையும் எனினும் பொருந்தும்.

**193. காயமுஞ் சீவனு மோசையுந் தானாக
யேகமாய் நிற்குஞ் சிவம்.**

(இ - ள்.) காயமும் - சரீரமும், சீவனும் - அதிற் பொருந்திய உயிரும், ஓசையும் - அச்சரீரத்தை இயக்கும் ஒலிச்சத்தியும், தானாக - அவனேயாகி, சிவம் - சதாசிவம், ஏகமாய் நிற்கும் - வேறுபொருளோ டிடையின்றித் தனித்து நிற்பன் எ - று.

இதுவுமது. சரீரத்தின் ஒவ்வோ ரமிசமும் கடவுளியக்கத்தினாலன்றும், தாண்மட்டில் பிள்ளைப்பூச்சி எனும் ஜெந்துப்போல் சேற்றிலிருந்தும் தன்னிடம் சேறு கலவா நிலையில் உளன் என்றபடி.

**194. வாயுவாய் மன்னுயிராய் மற்றவற் றுட்பொருளா
யாயுமிடந் தானே சிவம்.**

(இ - ள்.) வாயுவாய் - காற்றாகவும், மன்னுயிராய் - நிலைபெற்ற சீவராசிகளாகவும், மற்று அவற்று உட்பொருளாய் - அவற்றுள் அடங்கிய அந்தராத்மாவும், ஆயும் இடந் தானே சிவம் - இவ்வண்ணம் ஆராய்ந்து அறியும் இடம் யாங்கணும் உளன் சதாசிவம் எ - று.

இதுவும் சூனியநிலை கூறியது. வாயு உயிர் பொருள் யாவற்றினுள்ளும் அவற்றுக்கப்பால் சூனிய நிலையிற் காண்க என்றபடி

**195.** எண்ணிறந்த யோனிப் பரமாய்ப் பரந்தெங்கு
முண்ணிறைந்து நிற்குஞ் சிவம்.

(இ - ள்.) எண் இறந்த - கணக்கற்ற, யோனிப் பரமாய் - பிறவிவகையாக, எங்கும் பரந்து - உலகமுழுவதும் வியாபித்து, உள்நிறைந்து சிவம் நிற்கும் - சிதாகாசத்தினுள் நிறைவாக நிற்பன் சதாசிவன் எ - று.

இதுவுமது. யோனி என்றது பல்வகை யோனியின் வாயிலாக எய்தும் பிறவிகளை. எல்லாப் பிறவிகளிலும் ஈசன் உளன் என்பது.

**196.** ஒன்றேதா னூழா முதலாகி யெவ்வுயிர்க்கு
மொன்றாகி நிற்குஞ் சிவம்.

(இ - ள்.) தான் ஒன்றே ஊழாம் முதலாகி - தான் தன்னந் தனியனாகிய ஊழ் யாவற்றுக்கும் வித்தாக அமைந்து, எல்லா உயிர்க்கும் ஒன்றாகி - அவ்வூழின் றன்மையை ஏற்று எல்லாச் சீவராசிகளுக்கும் ஒருதன்மையாய், சிவம் நிற்கும் - பரமசிவனிருப்பன் எ - று.

இதுவுமது. ஊழ் - சீவான்மா செய்யும் பாவபுண்ணிய கருமங்கள். அவற்றுக்கும் ஏகனே அதிபதி என்க. ஒவ்

வொருவர் செய்கைக்கேற்றன அனுபவிப்பினும் அவற்றை வழிகாட்டுவதுபோல் உள்ளதென்க.

**197.** மூலமொன் ருகி முடிவொன்ரு யெவ்வுயிர்க்குங்
காலமாய் நிற்குஞ் சிவம்.

(இ - ள்.) எவ்வுயிர்க்கும் - சீவராசிகள் யாவற்றுக்கும், மூலம் ஒன்ருய் - பிறப்புக்குத்தானே ஒரு காரணமாய், முடிவு ஒன்ருய் - அழிவுக்குந் தானே காரணமாய், காலமுமாய் - பிறப்புக்கும் இறப்புக்கும் இடைப்பட்ட ஆயுட்காலமுமாய் சிவன் நிற்கும் எ - று.

இது சிவன் ஆக்கல் அழித்தல் அளித்தல் என்ற முத்தொழிலுமுடையவ னென்பது விளக்குகின்றது. காலம் எனவே, ஆயுட்காலத்தி லுயிரொடு வாழ வுதவுதலின் அளித்தலாம்.

**198.** மண்ணிற் பிறந்த வுயிர்க்கெல்லாந் தானுகி
விண்ணகமே யாகுஞ் சிவம்.

(இ - ள்.) சிவம் - பரமசிவன், மண்ணிற்பிறந்த - உலகி லுதித்த, உயிர்க்கு எல்லாம் - எல்லாச் சீவராசிக்கும், தானுகி- தானே அவ்வவற்றிலும் வியாபித்து, விண் அகமே ஆகும் - தான் இருப்பதுமட்டில் யாவும் அழிந்த ஆகாயமென்னும் சூனிய நிலையில் ஆகும் எ - று.

இது சிவன் உயிரொடு கலந்தும், பிரிந்து சூனிய நிலை யிருப்பவ னென்பதை வருத்துகின்றது. விண் - சண்டுக் குண்டலி பீடம்.

**199. தோற்றமது வீடாகத் தொல்லைமுத லொன்றாகி
லேற்றிவரு மீச னுறன்.**

(இ - ள்.) தோற்றமது - உருவத்தில், வீடாக - சூனிய நிலையாகவே, தொல்லைமுதல் - அனாதிகாலந்தொட்டு, ஒன்று ஆகி - ஒருதன்மையதாய், ஏற்றிவரும் ஈசன் உளம் - பொருந்தி வழங்கி வருகின்றது ஈசன் மனம் எ - று.

இதுவும் சூனியநிலை கூறியது. வீடு - சூனிய நிலை.

**200. நிற்கும் பொருளு நடப்பனவுந் தானாகி
யுற்றெங்கு நிற்குஞ் சிவம்.**

(இ - ள்.) நிற்கும் பொருள் - நிலைத்திணை பொருட்களும், நடப்பனவும் - இயங்கு திணை பொருட்களும் பிறவும், தானாகி - தானே ஆக, உற்று - பொருந்தி, எங்கும் சிவன் நிற்கும் - எவ்விடத்திலும் எப்பொழுதும் சிவன் கலந்திருப்பன் எ - று.

இது கடவுள் அந்தரியாமி என்பதை வற்புறுத்துகின்றது. அவனன்றி யோரணுவு மசையாது' என்பதும் இதனால் விளங்குகின்றது.

---

மூன்றுவது

## தன் பால்

அஃதாவது திருவருள் பெற்ற ஓர் ஆன்மா. தன்னியல் பாக ஏனைச் சாதனங்களை அடையும் வழி கூறுகின்ற பகுதி. இது பதினொரு அதிகாரங்கள் கொண்டது.

# இருபத்தோரா மதிகாரம்

## குருவழி

எத்துணை ஞானம் பெறினும் ஆசான் காட்டுகின்ற வழியாலல்லது பயன் அடைதல் முடியாதென்பதனால் குரு வுபதேசம் கூறுகின்ற இயலாகும்.

"கோடிபல நூலறிவு வேதமுறை பேசினுங்
குருபாதம் வெளியாகுமோ" எனவும்

"குருமொழியே மலையிலக்கு மற்றமொழி யெல்லாங்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்."

எனவும் பெரியோர் உரைத்தமையால் அறிக. இவ்வதிகாரத் துக்குச் 'சதாசிவம்' என ஓரேட்டுப் பிரதியில் காணப்படும்.

**201.** குருவி னடிபணிந்து கூடுவ தல்லார்க்
கருவமாய் நிற்குஞ் சிவம்.

(இ - ள்.) குருவின் - ஆசானது, அடிபணிந்து - பாதத் தில் வணங்கிப் பூசனைசெய்து, கூடுவது அல்லார்க்கு - ஈசர நிலையை அடையும்வழி யில்லாத ஏனையோர்க்கு, சிவம் - பரம

சிவன், அருவமாய் நிற்கும் - காணாத பொருளாக மறைந்து நிற்கும் எ - று.

இஃது ஆசானது ஆதரவினால்தான் சிவசிந்தனை உண்டாம் என்றவாறு. குருவினடிபணிந்தவர்க்கு சிவன் உருவம் பெற்றுத் தோன்றியும் ஏனையோர்க்கு அருவமாய் மறையும் என்பதும் பெறப்படும். குருவிலா விச்சை பயனின்று என்றபடி.

**202. நிற்கும் பொருளு நடப்பனவுந் தானாகி**
**யுற்றெங்கு நிற்குஞ் சிவம்.**

(இ - ள்.) சிவம் - பரம்பொருள், நிற்கும் பொருளும், நடப்பனவும், நிற்கின்ற நடக்கின்ற என்னும் நிலத்திணை யியங்குதிணைப் பொருள் யாவற்றிலும், உற்று - உள்ளே பொருந்தி, எங்கும் நிற்கும் - எல்லாவிடத்தும் வியாபித்திருக்கும் எ - று.

இதுவுமது. குருவினருளாற் பெற்றார்க்கு எல்லாப் பொருளிலும் சிவனுண்மை விளங்கும் என்றபடி.

இக்குறள் ஓரேட்டுப் பிரதியிற் கண்டது இதற்கு மாறாக,

பஞ்சமா சத்த மறுப்பவர்க் கல்லாஅ
லஞ்ச லென்றாது சிவம்.

என்பது காணப் பெறும்.

**203. தன்பா லறியுந் தவமுடையார் நெஞ்சகத்து**
**ளன்பா யிருக்குஞ் சிவம்.**

(இ - ள்.) சிவம்—, தன்பால் அறியும் குருவினது வணக்கத்தால் - தனதுள்ளத்திலேயே சிவனை அறிகின்ற, தவம் உடையார் நெஞ்சகத்துள் - தவத்தினையுடைய மனோநிலையுடையவர்களுக்குள், அன்பாய் இருக்கும் - ஆதரவுடன் பொருந்தி யிருப்பான் எ - று.

இதுவுமது. குருவுபதேசத்தாற் சிவனைச் சிந்தையிலடக்கியவர்க்குப் பயனுண்டாம்.

**204.** சிந்தை சிவமாகக் கொண்டவர் சிந்தையுட்
சிந்தித்து நிற்குஞ் சிவம்.

(இ - ள்.) சிந்தை - குருவினால் வழிப்பட்ட மனதை, சிவமாகக்கொண்டவர் - சிவன் குடிகொள்ளும்படிச் செய்து கொண்டவர், சிந்தையுள் - உள்ளத்தில், சிவம்—, சிந்தித்து நிற்கும் - சிந்தனையுடன் என்றைக்கும் பொருந்தியிருப்பன்.

இதுவுமது. மேற்கூறியாங்குச் சிவமயமான மனதில் என்றும் சிவன் பொருந்துவன்.

**205.** தலைப்பட்ட சற்குரு தன்னரு ளல்லால்
வலைப்பட்ட மானதுவே யாம்.

(இ - ள்.) தலைப்பட்ட - சிறந்த, சற்குரு தன் அருள் அல்லால் - நல்லொழுக்கத்து ஆசானது அருளினாலல்லாமல், வலைப்பட்ட மான் அதுவே ஆம் - ஒருவன் கற்ற வித்தை வலையிலகப்பட்ட மானைப்போற் பயனற்றுத் தீமையே நல்கும் எ - று.

இதுவுமது. எத்துணை நூல் கற்றாலும் நற்பயன் பெறச் செய்வது குருவின் உபதேசத்தால் ஆதலின், அஃதில்லா விடில் பயனின்றாம். அன்றியும் மான் தானே வலையிற் சிக்குவதுபோல். உபதேசமில்லாதவழிப் பஞ்சபூதங்களென் னும் வலையிற்சிக்கிக்கொண்டு ஊழ் என்னும் வேடனிடம் அகப்பட்டு அழியும் என்றபடி. அதனால் குருவுபதேச மில் லாவிடிற்றான்கற்ற கல்வி தீமையே உண்டாக்கும்.

**206.** நல்லன நூற்பல கற்பினுங் காண்பரிதே
தொல்லையில் லாத சிவம்.

(இ - ள்.) நல்லன நூல் பல கற்பினும் - நன்மையே தரும் நூல்கள் பலவற்றை வாசித்தறியினும், தொல்லையில் லாத சிவம் - பழைமை மாறாத பரம்பொருளை, காண்பரிதே - குருமுக மில்லாவிடில் காணமுடியாது எ - று.

இதுவுமது. குருவுபதேசமில்லாவழி இப்பயன் என்க. தொல்லை - தொன்மை, பழைமை. இல்லாத - மாறாத. புராணன் என்றபடி.

**207.** நெறிப்பட்ட சற்குரு நேர்வழி காட்டிற்
பிரிவற் றிருக்குஞ் சிவம்.

(இ - ள்.) நெறிப்பட்ட - உண்மைவழியிற் பொருந்திய, சற்குரு - உத்தம ஆசான், நேர்வழி காட்டில் - ஈசுரதியானத் துக்கு நேர்மையான முறைகாட்டினால், சிவம் - பரம்பொருள்,

பிரிவு அற்று இருக்கும் - உள்ளத்தைவிட்டுப் பிரிவது நீங்கித் தங்கி யிருப்பன் எ - று.

இதுவும் அது. சிவம் பிரிவற்றிருப்பதாவது, குண்டலி நிலை எய்த யுதவி ஆங்கே என்றும் தங்கியிருப்பது.

**208.** நினைப்பு மறப்பு மிலாதவர் நெஞ்சந்
தனைப்பிரி யாது சிவம்.

(இ - ள்.) நினைப்பு மறப்பும் - விழிப்பு சுழுத்தி என்ற இருநிலையும், இலாதவர் - கடந்திருப்பவரது, நெஞ்சம்தனை - மனதினை, சிவம் - பரம்பொருள், பிரியாது - நீங்காது எ - று.

இதுவுமது. குருவருளால் நினைப்பு மறப்புக் கடந்த நிலையடைந்தால் சிவன் நீங்காது என்றபடி அறியாது பாட மாயின் நீங்குத லறியாது என்க.

**209.** ஒன்றிலொன் றொத்த தவமுடை யாரன்றி
யென்றுமொன் றாது சிவம்.

(இ - ள்.) ஒன்றில் ஒன்று ஒத்த - பொருளுக்குப் பொருள் ஒற்றுமை வேற்றுமை கடந்து ஒரு தன்மையான, தவம் உடையாரன்றி - தவத்தை உடையவர்க்கு அல்லாத ஏனையோரிடம், சிவம் - பரமசிவம், என்றும் ஒன்றாது - எந்நாளும் பொருந்தியிராது எ - று.

இது குருமுகத்தால் நன் ஞான முணர்ந்து தன்னிலை யடைந்து ஒற்றுமை வேற்றுமை கடந்த நிலையும் அடைந்தால் சிவன் பொருந்துவான் என்றும், ஒன்றிலொன்று ஒத்தல் -

'ஓடும் பொன்னு முறவறக் கலந்த நிலை' இல்லாத மனம் - என்ற பாடம் வெண்டளை தட்டுவதால் விலக்கற்பாலது.

**210. நாட்டமில் லாவிட நாட்ட மறிந்தபின்
மீட்டுநா டாது சிவம்.**

(இ - ள்.) நாட்டம் இல்லா இடம் - ஞானக்கண்ணின் பார்வை, செல்லா இடமாகிய கபாலத்தில், நாட்டம் அறிந்த பின் - குண்டலி சத்தியால் பார்வைபெற்ற பிறகு, சிவம் - பரமசிவம், மீண்டும் நாடாது - வேறோரிடத்தை மறுபடியும் நாடி விலகாது எ - று.

இதுவுமது. குண்டலி சத்தி எய்தி ஈசுரனை ஆங்கு நிலைநிறுத்தும் தந்திரமும் குருமுகத்தான் அறியக் கிடந்தது.

---

# இருபத்திரண்டா மதிகாரம்

## சித்தமோ டொன்றல்

இது குருவருட்பெற்ற ஆன்மா சரீரத்தை மனத்தொடு பொருந்த வைத்தல் உரைத்தது. இவ்வதிகாரம் அச்சுப் பிரதிகளில் 'சூனிய காலமறிதல்' என்னுந் தலைப்பில் 25-ம் அதிகாரமாகக் காணப்பெறும். 'சித்தமோ டொன்றல்' என்ற இவ் வதிகாரத்தின் முதற்குறளின் முதற்குறிப்பு என்பது மறியற்பாலது.

**211. சித்தமோ டொன்றி மனமு மிருந்தக்கா**
**லுடம்பு முற்று மழியா துடம்பு.**

(இ - ள்.) சித்தமோடு மனம் ஒன்றி - குண்டலியும் உள்ளமும் பொருந்தி, இருந்தக்கால் - ஓரிடத்து இருந்தால், உடம்பு முற்றும் அழியாது - தூல வுடம்பு முழுவதும் அழிய வேண்டியதில்லை எ - று.

இது குண்டலிப்பதவி யடைந்த பின்னர் சூக்கும நிலை யெய்தும்; அதனால் தூல சரீரத்தை விலக்கவேண்டிய நியதி உண்டோ என எழும் ஐயத்தை விலக்குகின்றது.

இக்குறள், அச்சுப் பிரதியிற் காணப் பெற்றிலது.

**212. நிரவி யழலுருவாய் மீண்டிடக் காணி**
**லரனவனே யாகு முடம்பு.**

(இ - ள்.) அழல் உருவாய் - குண்டலிசக்தி நெருப்புச் சுவாலையுடன், நிரவி - சரீர முழுவதும் பரவி, மீண்டிடக் காணில் - சூனிய நிலையாகிய கபாலத்தை யடைந்து மீண்டும் மூலாதாரத்தை யடையப்பெற்றால், உடம்பு - சரீரமே, அரன் அவனே ஆகும் - பரமசிவத்தன்மையை அடையும் எ - று.

இதுவுமது. குண்டலி தத்துவம் முன்னர் விளக்கப் பட்டது. அக்கினி சுரூபமாய் ஆறு தாரத்தையும் கடந்து ஆஞ்ஞாசக்கரத்தை அடைந்து மீண்டும் மூலாதாரத்தை அடைந்தால் அதுவே சிவசொரூபமளிக்கும் என்றார்.

**213. உருவத் தழலாக வுள்ளத்தே சென்று**
**புருவத் திடையிருந்து பார்.**

(இ - ள்.) உருவம் - சூக்கும சரீரம், தழலாக - அக்கினிமயமாக்கி, உள்ளத்தே சென்று - குண்டலி நிலையாக உட்புகுந்து, புருவத்து இடை இருந்து - இரு புருவத்தின் மத்திம பாகத்தை இலக்காகக் கருதிப் பார்வையைச் செலுத்திப்பார் - ஈசுரசொரூபத்தைப்பார் எ - று.

பார்க்க அழலுருவத்தானாகிய ஈசுரனையும் தன்னுளே காணப் பெறலாம் என்றார். மனோநிலை அடைதற்கு உரைத்த தந்திரங்களும் புருவத்தினிடை நோக்கல் ஒன்றாதலின், அந்நிலையிற் குண்டலியோகம் செய்க என்றார். இப்பார்வை இடைகலை பிங்கலை யொழிந்த சுழுமுனைப் பார்வையாற் செய்க என்பர். இக்குறட்குப் பின்னர் சில பிரதிகளில்,

"புருவத்திடை யிருத்திப் புண்ணியனைக் காணி
லுருவற் றிருக்கு முடம்பு"

என்ற குறள் மிகைபாடமாகக் காணப்படுகின்றது.

**214. அகம்புறம் பேராப் பொருளை யறியி
லுகம்பல காட்டு முடம்பு.**

(இ - ள்) அகம்புறம் பேரா - அகத்திலும் வெளியிலும் மாறுத, பொருளை - குண்டலியால் அறியத்தகும் மூர்த்தியினை, அறியில் - அறிந்தால், உகம்பல உடம்புகாட்டும் - தூல சரீரமே, பல யுகாந்தங்களைத் தானிருந்து சரீரத்தின் அழியாத்தன்மையைக் காட்டும் எ - று.

சரீரத்திற் சித்தம் பொருந்தச் சிவமாகினுல், தூல சரீரம் அழியாமல் பல ஆண்டுகள் இருக்கும் தந்திரத்தை அடைய

லாம். பிறவியே ஆசையைப்போல் வேண்டும்போது மாற்றிக்கொள்ளும் தன்மையினது என ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையில் உரைத்ததுபோல், அவ்வாசையே யிருக்கவேண்டினும் மாற்றுமல் நிறுத்திக்கொள்ளும் ஆற்றலும் ஆன்மாவுக்கு உண்மை பெறலாம்.

**215. ஆவிபாழ் போகா தடக்கி யிருந்தபிர**
**னோவிய மாகு முடம்பு.**

(இ - ள்.) ஆவி - சுவாச ஆவியை, பாழ் போகாது அடக்கி - பாழாகாதபடி நிறுத்தி, இருந்தபின் - ஆறு தாரங்களிலும் சஞ்சரித்திருந்த பிறகு, உடம்பு ஓவியம் ஆகும் - சரீரமானது சித்திரத்தைப்போலசைவற்ற சமாதி அடையும் எ - று.

இது வாயுவினியக்கத்தால் சரீரத்தை அழியாநிலையெய்துவிக்கலாம் என்றது. சுவாசத்தின் முயற்சி முறை முன்னரே கூறப்பட்டது. சமாதி நிலையை ஓவியம் எனக் குறிப்பிட்டார், ஓவியம் அசையாதாகலின். "ஓவியமான வுணர்வை யறிமின்கள்" எனத் திருமூலர் உரைத்தது மிது கருதியே.

**216. தீயாக வுள்ளே தெளிவுற நோக்கினுன்**
**மாயாது பின்னை யுடம்பு.**

(இ - ள்.) உள்ளே - மூலாதாரத்தினுள், தீயாகத் தெளிவுற நோக்கினல் - குண்டலி சக்தியால் நெருப்பு மயமாகத்

தெளிந்து பார்த்தால், பின்னை உடம்பு மாயாது - அதன் பிறகு சரீரம் அழியாது எ - று.

இது மூலாக்கினியால் சக்தியை எழுப்பும் தந்திரம் உரைத்தது. குண்டலியில் எழும் தீயினால் உடல் முழுவதும் பார்க்க என்றார்.

**217.** அஞ்சு மடக்கி யறிவோ டறிந்தபின்
றுஞ்சுவ தில்லை யுடம்பு.

(இ - ள்.) அஞ்சும் அடக்கி - பஞ்ச இந்திரியங்களையும் தன்வயப்படுத்தி, அறிவோடு - ஆசான் காட்டிய அறிவோடு, அறிந்தபின் - தன் அனுபவத்தாலும் குண்டலி யோகததைக் கண்டபிறகு, உடம்பு துஞ்சுவதில்லை - ஏனைய மானிடரது சரீரத்தைப்போல் உடம்பு அழிவது கிடையாது எ - று.

இதுவுமது. அக்கினி எழும்பினாலும் இந்திரியங்களை அடக்குதல் அவசியம் என்பது. இந்திரியங்கள் கூறவே அவற்றால் அறியப்படும் மண், நீர், தீ, வளி, விண் என்பன வற்றையும் உட்கொண்டன. இவற்றை வசியஞ் செய்யும் மந்திரம் முறையே ந, ம, சி, வ, ய என்பன. இவற்றின் முறைமை குருமுகத்தா னறியத் தக்கது.

**218.** தானந்த மின்றித் தழலுற நோக்கிடி
லானந்த மாகு முடம்பு.

(இ - ள்.) தான் - ஆன்மா, தழல் அந்தம் இன்றி - மூலாக்கினியின் முடிவு இல்லாதபடி, உறநோக்கிடில் - குண்

டலியையும் கபாலத்தையும் பொருந்தப்பார்த்தால், உடம்பு ஆனந்தம் ஆம் - சரீரம் ஆனந்தமயமாய்விடும் எ - று.

இதுவுமது. ஆனந்தம் - துக்க நிவாரணமடைந்த சூனிய நிலை.

**219.** **ஒழிவின்றி நின்ற பொருளை யுணரி
லழிவின்றி நிற்கு முடம்பு.**

(இ - ள்.) நின்ற பொருளை - சாதனையால் குண்டலியில் நிற்கப் பெற்ற ஈசுரனை, ஒழிவின்றி உணரில் - காலந் தாழ்க்காமல் உணர்ந்திருந்தால், உடம்பு அழிவின்றி நிற்கும் - சரீரம் அழிதலில்லாமல் நிலைத்திருக்கும் எ - று.

இதுவுமது. எல்லாம் ஈசுரமயம் என்றறிந்தாலும் உடல் அழியாது என்பதுமாம். இக்குறளுக்குப் பிரதியாக,

"ஏழாயிரத்தி னிருநூறு கால்களைப்
பாழாகா தேற்றப் பயன்"

என்ற குறள் மிகையாகக் காணப் பெறும்.

**220.** **பற்றற்று நின்ற பழம்பொருளைச் சிந்திக்கின்
முற்று மழியா துடம்பு.**

(இ - ள்.) பற்று அற்று நின்ற - எப்பற்றும் இல்லாமல் நிற்கும், பழம்பொருளை - புராணனை, சிந்திக்கின் - மேன் முறையாற் சிந்தித்தால், உடம்பு முற்றும் அழியாது - சரீரம் முழுவதும் அழியாது எ - று.

இதுவுமது. பற்றற்றவனெனினும் யோகசாதனையாற் கட்டுப்படுவன் என்பது குறிப்பு.

---

# இருபத்துமூன்றா மதிகாரம்
## அருணோதய தரிசனம்

உடம்பிற் சித்தம் பொருந்த நிலைக்கும் தந்திரம் அறிந்த பிறகு கலைகளி னியக்கத்தால் ஞானம் பெறும் முறைமை கூறுகின்றது. அருணம் உதயம் - சூரிய உதயம்.

இவ்வதிகாரம் 'சூரிய தரிசனம்' என்ற பெயருடன் 30-ம் அதிகாரமாக அச்சுப்பிரதிகளிற் காணப்படும்.

**221** வன்னிய தெட்டு மதியம் பதினறு
முன்னினன் பன்னிரண்டு முன்.

(இ - ள்.) முன் - நாம் சுவாசிக்கு முன்னிடத்து, வன்னியது. அக்கினிக்கு எட்டும் - எட்டுக் கலைகளும், மதியம் - சந்திரனுக்கு, பதினறும் - பதினறு கலைகளும் முன்னினன். முற்பட்ட சூரியனுக்கு, பன்னிரண்டும் - பனிரண்டு கலைகளு மாம் எ - று.

இது சுவாசங்களுக்கு அதிபதிகளாகிய சூரிய சந்திர அக்கினிகளின் அளவும், சுவாசங்களின் அளவும் கூறியது. சூரியன் - இடைகலை. சந்திரன் பிங்கலை, அக்கினி - சுழுமுனை என முன்னமே அறிந்தோம்.

**222. சூரியன் வன்னியொன் ருகவே சோமனும்
பாரு மினிது பயன்.**

(இ - ள்.) சூரியன் வன்னி ஒன்று ஆகில் - சூரிய, அக்கினி கலைகள் ஒன்றுபட்டால், சோமன் ஆம் - சந்திரனது தன்மை வெளியாகும்; இனிது பயன் பாரும் - அவ்விதம் செய்து இனிய பயனை அடைமின்கள் எ - று.

இடைகலையும் சுழுமுனையும் ஒன்றுபடப் பிங்கலையின் றன்மை வெளியாம் என்றபடி. கலைகளை ஒன்றுபடுத்தலும் பிரித்தலும் முதலியவை குருமுகத்தானறியக்கிடந்தது.

**223. மதியொடு காலும் வன்னியொன் ருகவே
கதிரவ னுமெனவே காண்.**

(இ - ள்.) மதியொடு காலும் - சந்திரனிற் பொருந்திய காற்றென்னும் கலையும், வன்னியொன்று ஆகவே - அக்கினிக் கலையும் ஒன்றுபட, கதிரவன் ஆம் எனவே காண் - சூரியகலை (இடைகலை) யாகவே காணப்பெறலாம் எ - று.

இது சந்திர அக்கினிக் கலைகளின் இயைபால் சூரியகலை தோன்றுமென்பது கூறுகின்றது. இவ்விரண்டு குறட்களால் முக்கலைகளும் ஒன்ரோடொன்று இயைகின்ற இயல்பு கூறப் பட்டது.

**224. வன்னி கதிரவ னென்ருகக் கூடிடி
லொன்றிசை யாகு மிவ்வாக்கு.**

(இ - ள்.) வன்னி - அக்கினியும், கதிரவன் - சூரியனும், ஒன்ருகக்கூடிய - ஒன்ருக இயைய, இவ்வாக்கு - இவ்வார்த்

தையிலேயே, உன் ஓசை யாகும் - உன்னிய ஓசை பிறக்கும் எ - று.

இது மீண்டும் அக்கினி சூரியன் சம்பந்தமும், சூரிய சம்பந்தமும் கூறுகின்றது. வன்னி எனப் பொதுப்படக் கூறியதால், சந்திரனும் கொள்ளப்பட்டது. இவ்வியைபால் எழும் சப்தமும் நாதவோசை யென்றபடி.

இம்முக்குறளால் முக்கலேயும் ஒன்றோடொன்று பொருந்தும் தந்திரம் கூறப்பட்டது. இனி மதி கதிரவன் இயைபும் மேலுரைப்பார்.

**225.** மதிக்குட் கதிரவன் வந்தொடுங்கி னும்
முதிக்குமாம் பூரணையென் றோது.

(இ - ள்.) மதிக்குள் - சந்திரனுள், கதிரவன் - சூரியன், வந்து - புகுந்து, ஒடுங்கினும் - அடங்கிவிட்டாலும், பூரணை உதிக்குமாம் - பூரணை என்னும் முழுமதி, என்று ஓது - என்று உரை எ - று.

சந்திரன் தன் கலை முற்றிலும் சூரியன் கலையி லடங்கினல் சூரியகலை மாறிப் பதினொரு கலையுடன் பௌரணையாகி விளங்கும் என்றபடி.

**226.** ஏறு மதிய மிறங்கி லுறங்கிடுங்
கூறுமப் பூரணையாக் கொள்.

(இ - ள்.) ஏறும் மதியம் - சூரியனுடன் இயைந்து தேகத்தில் மேனோக்கும் பிங்கலை, இறங்கில் - கீழ் நோக்குங்

கால், உறங்கிடும் - சூரியனதுகலை அடங்கிவிடும், கூறும் அப் பூரணையாக் கொள் - அப்பொழுது அதனை உரைக்கின்ற நிறைமதியின்கலை விளங்குவதால் பௌரணையாகவே கருதுக எ - று.

இதுவுமது. சந்திரகலை மேனோக்கும்போதும் பதினாறு கலைகளுடன் விளங்குதலின் சூரியகலை (12) யையும் அடக்குவதால் பௌரணை என்றார்.

227. தோன்றுங் கதிரவ னுண்மதி புக்கிடிற்
சாற்று மமாவாசை தான்.

(இ - ள்.) தோற்றும் - விளங்கும், கதிரவனுள் - சூரிய கலைக்குள், மதி புக்கிடின் - சந்திரகலை புகுந்து அடங்கிவிட்டால், சாற்றும் - உரைக்கப்படும், அமாவாசைதான் - இருண் மூடிய உவாமதியே எ - று.

இது கதிர்மதி கலைப்பில் அமாவாசை தோன்றுதல் கூறியது. இதுவும், சந்திரகலை மறைவதாற் சூரியகலை (12) யால் அமாவாசை தோன்றிய தென்க.

228. உதிக்குங் கதிரவ னோடு மதிபுகுந்தால்
மதிக்கு மமாவாசை தான்.

(இ - ள்.) உதிக்கும் - முதன் முதற் காலையிற் றோன்றும், கதிரவனொடு - சூரியகலையொடு, மதி புகுந்தால் - சந்திர கலை புகுந்து அடங்கிவிட்டால், மதிக்கும் - கருதப்படும், அமாவாசைதான் - அமாவாசையே எ - று.

**229.** அமாவாசை பூரணை யாகு மவர்க்குச்
சமனு முயிருடம்பு தான்.

(இ - ள்.) அமாவாசை பூரணை ஆகும் அவர்க்கு - நிறைமதி உவாமதி யிரண்டும் தன்னுள் ஆக்கிக் கொள்ளு பவர்க்கு, உயிர் உடம்பு சமன் ஆம் தான் - உயிரும் உடலும் ஒருதன்மையதாய்ப் பொருந்தும் எ - று.

இது பயனுரைத்தது. இரண்டும் தம்முன் காணப்பெறு வார் உடலும் உயிரும் ஒன்றாகக் காயகற்பமாவர்.

**230.** அட்டமாசித்தி யடையுமோ ராண்டிலிற்
றிட்ட மதனைத் தெளி.

(இ - ள்.) அட்டமாசித்தி - இப்பயனைக் கண்டோர் அஷ்டமாசித்தியினையும், ஓராண்டில் அடையும் - ஒருவருடப் பயிற்சியில் அடையப் பெறுவர், அதனைத் திட்டமாய்த் தெளி - அதன் பயனை நிச்சயமாய் அனுபவத்தில் அறிக எ - று.

இதுவும் பயனுரைத்தது. கலைகளினால் தத்தமக்குள் திதிகளையும் நாள் கோள்களையும் கண்டால் அஷ்டசித்தி களையும் செய்ய வல்லவராவர் என்றார். எண் சித்திகளும் முன்னருரைக்கப்பட்டது.

இக்குறள், அச்சுப்பிரதிகளில் 'மெய்ந்நெறி' என்று அதிகாரத்திற் காணப் பெறும். இதற்கு மாறாக, ஈண்டு,

"அண்டத்திலுமிந்த வாறென் றறிந்திடு
பிண்டத்திலு மதுவே பேசு"

என்பது காணப்படுகின்றது. இனி, ஓரேட்டுப் பிரதியில்

"பங்குனி சித்திரையிற் பானுதய நோக்கிடின்
றங்குறிற மாறுதேகந் தான்"

என்னுங் குறள் அதிகமாகக் காணப்பெறும்.

---

# இருபத்துநான்கா மதிகாரம்

## காலசரம்

இது, கலையியக்கத்தால் பெறும் பயனை அனுபவித் தற்கு ஏற்ற காலம் அறிதல் அவசியமாதலின், முக்கலைகளையும் எவ்வெக்காலத்தில் எவ்வாறு இயங்கச்செய்ய வேண்டுமென்று கூறுகின்றது. காலத்தின்சரம் (இயைபு) என்க.

இஃது, 'உயர் ஞான தரிசனம்' என்ற தலைப்புடன் இறுதியதிகாரமாக முந்திய அச்சுப் பிரதிகளிற் காணப் பெறுகிறது.

**231.** கோண்டிடு மண்டல மூன்றங்கி தன்னையிப்
பிண்டத்தி னுள்ளாய் விடும்.

(இ - ள்.) மண்டலம் - உலகமுற்றும், கொண்டிடும் - தன்னிடத்து உட்கொண்டடக்கிய, மூன்று அங்கிதன்னை -

முச்சுடரையும், இப்பிண்டத்தினுள் ஆய்விடும் - இத்தூல சரீரத்தின் உள்ளிடத்தும் அடங்கிவிடும் எ - று.

இது முச்சுடரும் சரீரத்தினுள் அடங்கிய தத்துவ முரைத்தது. முச்சுடர், சூரியன் சந்திரன் அக்கினி முறையே இடைகலை, பிங்கலை சுழுமுனையும் குறித்தது.

**232.** வெள்ளி புதனொடு திங்க ளிடமெனத்
தள்ளுமின் கால சரம்.

(இ - ள்.) வெள்ளி, புதனொடு திங்கள் - வெள்ளி, புதன் திங்கள் என்று மூந்நாட்களிலும், கால சரம் - காலத்தைக் காட்டும் சரமாகும், சுவாசத்தை இடம் எனத் தள்ளுமின் - இடப்புறமாகிய சந்திரநாடியிற் செல்லுமாறு அமையுங்கள் எ - று.

இது நாடோறும் நாடிகள் செலுத்தவேண்டிய பாகத்தை யுணர்த்தியது. வைகறையில் எழுந்தவுடன் அவ்வந்நாட்களிற் குறித்த நாசியில் நாடி செல்லும்படி யமைத்துக்கொண்டே எனைக் கருமம் முயலவேண்டுமென்பது பெரியார் நியதி ஈண்டு அறியற்பாலது.

**233.** செவ்வாய் குருசனி ஞாயிறு வலமாய்க்
கொள்ளுமின் கால சரம்.

(இ - ள்.) செவ்வாய், குரு, சனி ஞாயிறு - செவ்வாய், வியாழன், சனி, ஞாயிறு என்ற நான்கு நாட்களிலும், கால

சரம் - சுவாசத்தை, வலமாய் - வலப்புற சூரிய நாடியாகக், கொள்ளுமின் - அமைத்துக் கொள்ளுங்கள் எ - று.

இதுவுமது. இந்நான்குநாளும் சூரியகலையாம்.

**234.** இயங்கும் பகல்வல மிரவி லிடமதாய்த்
தயங்குற னடிக்குட் டான்.

(இ - ள்.) நாடிக்குள் தான் - நாடிகளில், பகல் வலம் - பகற்பொழுதில் வலமாகவும், இரவில் இடமதாய் - இராப் பொழுதி லிடமாகவும், தயங்க உறல் - ஒன்றுக்கொன்று மாறி வழங்குதல், இயங்கும் - பொருந்தும் எ - று.

இது புறனடை. வெள்ளி, புதன், திங்களில் பகலில் இடம் எனில் இரவில் வலமெனவும், ஏனையநாட்களில் பகலில் வலம் எனின், இரவில் இடமெனவும் கொள்க.

**235.** வளர்பிறை பொன்னிடம் வலமது தேய்பிறை
யளவினி லொன்றே யறி.

வளர்பொன் னிடம்பிறைத் தேய்வு வலமா
வளர்பிறை யென்றே மதி.

(இ - ள்.) பொன் - வியாழனுக்கு, வளர்பிறை இடம் - வளர்பிறையில் இடப்புறமும் (சந்திர நாடி), வலம் அது தேய்பிறை - தேய்பிறையில் வலப்புறமும் (சூரிய நாடி) என்றும், அளவினில் ஒன்றே - முறையையில் இருபுறமும் ஒருபயனே, என்றும் அறி - அறிக எ - று.

இது மேலவற்றுக்குப் புறனடையும் விலக்கும் வியாழனுக்கு வலமே யுரைத்திருப்பினும், பிறைநோக்கி இருபுறமும் பொருந்தும் என்றபடி.

**236. வலத்துச் சனிக்கே யிராப்பகல் வாயு**
**செலுத்தப் போயின்று செயல்.**

•(இ - ள்.) வாயு - சுவாசத்தை, சனிக்கே - சனிக்கிழமைகளில், இரா பகல் - இரவும் பகலுமாக, வலத்து - வலப்புறமாகவே, செலுத்து - செல்லச் செய்தால், செயல் - மற்றை நாட்களின் செயல்களும், போயின்று - அமைந்துபோயிற்று எ - று.

இதுவும் புறனடை. சனிக்கிழமைகளில் இரு முப்பொழுதும் வலப்புறமாகவே சுவாசம்விடின் வாரத்தில் ஏனைய நாட்களில் சுவாசம் விதிக்கு மாறியிருப்பினும் செபீபனுகுமென்றபடி. போயின்று - போயிற்று.

**237. சூரிய னீராறுஞ் சோமன் பதினாறுஞ்**
**சேர விளையுஞ் சரம்.**

(இ - ள்.) சரம் - சுவாசம், சூரியன் ஈராறும் - சூரிய கலையில் பனிரெண்டும், சோமன் பதினாறும் - சந்திரகலைக்குப் பனிரண்டும் ஆக, சேரவிளையும் - பொருந்த விளையும் எ - று.

இது சூரிய சந்திர கலைகளின் அளவு கூறியது. எண் - அங்குல அளவை.

**238. ஒன்றரை யொன்றேகா லொன்றுமுக்கா லேயரை
மண்முதலா மாம்பூத மைந்து.**

(இ - ள்.) மண்முதல் ஆம் ஆம் பூதம் ஐந்து - மண் முதலிய பூதங்கள் ஐந்துக்கும் சுவாச அளவு, ஒன்றரை, ஒன்றேகால், ஒன்று, முக்காலே அரை - முறையே ஒன்றரை ஒன்றேகால், ஒன்று, முக்கால், அரை என்பவாம் எ - று.

இது சுவாசத்திற்கும் பஞ்ச பூதங்களுக்கும் தொடர் புரைத்தது. மண், நீர், தீ, வளி, விண் என்ற பூதங்கள் ஐந்துக்கும் முறையே ஒன்றரை முதலிய அங்குல அளவை சுவாசமென்க. இவற்றையும் குருமுகமாய் அறியத்தக்கது.

**239. இருபத்தோ ராயிரத் தறுநூற்றுக் காலு
மொருதினத்துக் குள்ளதென் றோது.**

(இ - ள்.) இருபத்தோ ராயிரத் தறுநூற்று காலும் - சுவாசம் இருபதிற்றோர் ஆயிரமும் அறுநூறும் என்ற எண்ணிக்கையாக ஒருதினத்துக்கு - ஒவ்வொரு நாளுக்கும், உள்ளது என்று ஓது நடைபெறுகிற தென்பதை உரை எ - று.

இது நாடோறும் ஒவ்வொருவரும் சுவாசிக்கும் எண் ணிக்கை கூறியது. இத்தனைச் சுவாசத்தையும் அடக்கி வேண்டியவழியில் இடை, பிங்கலை சுழுமுனைகளிற் செலுத் தக் கருதிய பயன்றரும் என்பதறியலாம்.

**240. அச்ச மறியா தமலன் பொருந்தாதா**
**ரெத்தனை மாண்டார் சகம்.**

(இ - ள்.) சகம்-உலகில், **அச்சம் அறியாது - இத்துணைச்** சுவாசமும் பழுதாகின்றனவே என்று அஞ்சாமலும், அமலன் பொருந்தாதார் - ஈசுரனை யடையாதவராய், எத்தனை மாண்டார் - எத்தனையோ மனிதர் அழிந் தொழிந்தனரே! எ - று.

வெகுசுலபமாய் சுவாசத்தம்பனத்தால் கலைகளை இயக்கி அமலனை அடையலாகுமென்றிருக்க இஃதறியாது எத்தனையோ மக்கள் அழிகின்றனரே என இரங்குகின்றார்.

இவ்வதிகாரத்தின் இறுதி நான்கு குறள்கள் அச்சுப் பிரதிகளில் காணப்படவில்லை. அவற்றுக்கு மாறாக,

*அரசறியாம லவன்பே ருறைந்து*
*தரைதனை யாண்ட சமன்.*

*கல்லாத மூடர் திருவுருக் கொண்டிடச்*
*சொல்லாத தென்ன செயல்.*

*திருவருட் பாலைத் தெரிந்து தெளியிற்*
*குருவிருப் பாமென்று கொள்.*

*கற்கிலும் கேட்கிலு ஞானக் கருத்துற*
*நிற்கிற் பரமவை வீடு.*

என்பன காணப்படுகின்றன.

அன்றியும் எட்டுப் பிரதியில் அதிகமாகக் கீழ்க் குறள் உள்ளது.

*கண்மூக்குத்தண்ட முகம்கீழ் மென்காற் பக்கம்*
*விண்ணுலு பக்கமிலை போம்.*

# இருபத்தைந்தா மதிகாரம்

## கண்ணாடி

காலசரம் அறிந்து சுவாசத்தை வயப்படுத்திய சீவான்மா, அச்சுவாசத்தை மூலக்கனலுடன் சேர்த்து முத்தி பெறும் முறை கூறுவது. கண்ணாடி - கண்ணில் ஆகும் பொருள் (பார்வை) என்றும், முகம் பார்க்கும் பளிங்கு என்றும் பொருள் கொள்க. பளிங்கைப்போல் உள்ளத்தினுள்ளே யிருப்பதை அறிய உதவும் என்று இவ்வதிகாரத்துக்குப் பெயராயிற்று. அன்றியும் இதுவும் குறள் முதற் குறிப்பாகவும் அமைந்தது.

இஃது அச்சுப் பிரதியில் இருபத்து நான்காம் அதிகாரமாக அமைந்துளது 'கண்ணாடி நிலையாமை' என்பது ஏட்டுப் பிரதியின் பாடம்.

241: கண்ணாடி தன்னி லொளிபோ லுடம்பதனு
ளுண்ணாடி நின்ற வொளி.

(இ - ள்.) கண்ணாடி தன்னில் ஒளிபோல் - பளிங்கினுள் காணும் வெளிச்சத்தைப்போல், உடம்பு அதனுள் - தூல சரீரத்தினுள், உள் நாடி நின்ற ஒளி - குண்டலியினின்றும் பொருந்தி எழும் ஒளியுள்ளது எ - று.

இது குண்டலியின் ஒளிவிசேஷம் கூறியது. குண்டலியின் ஒளி வேறு முயற்சியாற்றான் புலன் ஆகும், எதுபோல் எனில் வெளிச்சம் கண்ணாடியினால் நன்கு அறியப்படுதல் போல்.

**242.** அஞ்சு புலனின் வழியறிந்தாற் பின்னை
துஞ்சுவ தில்லை யுடம்பு.

(இ - ள்.) அஞ்சு புலனின் - பஞ்ச இந்திரியங்களின், வழி - மார்க்கங்களை, அறிந்தால்,—அறிந்து அடக்கினால், உடம்பு பின்னை துஞ்சுவது இல்லை - சரீரம் அதன் பின்னர் உறங்குவது கிடையாது எ - று.

*பஞ்சேந்திரியம் அடங்கிய பின்னர், தூல சரீரமும் சூக்கும சரீரமும் தன் ஜாக்கிரதா நிலையில் மாறுவது இல்லை என்றபடி. இந்திரிய அடக்கமும் குண்டலிசக்தியால் என்க.*

**243.** நாவி யகத்தே நலனுற நோக்கிடிற்
சாவது மில்லை யுடம்பு.

(இ - ள்) நாவி அகத்தே - உந்திக்கமலமாகிய மூலாதாரத்தில், நலன் உற நோக்கிடில் - நலம்பொருந்தக் குண்டலி சக்தியை எழுப்புமாறு பார்க்க, உடம்பு சாவதும் இல்லை - சரீரம் தானும் அழிவது கிடையாது எ - று.

*இதன் கருத்து முன்னமே விளக்கப்பட்டது. நாவி - நாபி.*

**244.** கண்டத் தளவிற் கடிய வொளிகாணி
லண்டத்த தாகு முடம்பு.

(இ - ள்.) கண்டத்து அளவில் - சுழுத்தி நிலையில், கடிய ஒளி காணில் - பொருந்த குண்டலியின் தேஜோமயத்தைக்

காணப்பெற்றால், உடம்பு - சரீரம், அண்டத்தது ஆகும் - முட்டையின்தன்மை யடைந்ததாகும் எ - று.

இதுவும் அது. சுழுத்தி நிலைக்கும் மேற் சூனிய நிலைக்கும் வேற்றுமை அதிகம் இன்மையால் அந்நிலை யடைந்ததும் முட்டைக்கு மேற்றோலிருந்து உலக வியவகாரத்தினின்றுங் காக்கப் பெறுதல்போல் சரீரமும் குண்டலியின் சக்தியில் எழும் நெருப்புச் சுவாலையே ஒரு காவலெனச் சூழ்ந்து பலன் றரும் என்க. இஃதறியாது அண்டத்தர் எனப் பாடம் கூறி தேவநிலை எனப் பொருளுரைப்பர்.

**245.** சந்திர னுள்ளே தழலுற நோக்கினு
லந்தர்மு மாகு மவன்.

(இ - ள்.) சந்திரன் உள்ளே - சந்திர மண்டலத்தினில், தழலுற - சந்திரகலையினால் குண்டலித்தழலினால், நோக்கினால் - பார்க்கவும், அவன் - அவ்வான்மா, அந்தரம் ஆகும் - உயர்பதவி அடைவான் எ - று.

இதுவுமது. சந்திரமண்டலம் முன்னர் விளக்கப்பட்டது.

**246.** ஆர்க்குந் தெரியா வுருவந் தனைநோக்கிப்
பார்க்கப் பராபரமே யாம்.

(இ - ள்.) ஆர்க்கும் தெரியா - சாதனையாலன்றி மற்றெவருக்கும தெரியாத, உருவம் தனை - ஓங்கார சொரூபத்து ஈசனை, நோக்கிப் பார்க்க - உட்கண்ணால் உள்ளிடத்துப் பார்க்க, பராபரமே ஆம் - உடம்பினுள்ளும் அவ் வீசனைக் காணலாம். இதுவுமது. உருவம்-ஈண்டு ஓங்காரரூபம்.

**247.** **வண்ணமில் லாத வடிவை யறிந்தபின்**
**விண்ணவ ராகு முடம்பு.**

(இ - ள்.) வண்ணம் இல்லாத - தனக்கென்று ஒரு நிற மும் இல்லாத, வடிவை - ஓங்கார ரூபத்தை, அறிந்தபின் - கண்டபின், உடம்பு விண்ணவர் ஆகும் - சரீரம் தேவநிலை அடையும் எ - று.

இதுவுமது. ஓங்காரத்துக்கு நாதமன்றி உருவம் நிற முதலிய இன்மை தெளியலாம்.

**248.** **நெற்றிக்கு நேரே நிறைய வொளிகாணின்**
**முற்று மழியா துடம்பு.**

(இ - ள்.) நெற்றிக்கு நேரே - நெற்றிக்கு நேராகப் (பதினறங்குல அளவில்) ஒளி நிறையாகவும் ஓங்கார ரூபத் தைப் பொருந்தக் கண்டால், உடம்பு முற்றும் அழியாது - சரீரம் முழுவதும் அழியாமல் காயகற்பம் பெறும் எ - று.

இதுவுமது. மூலாக்கினியின் பெருக்கால் நாசிமுனைக்கு எதிரிலும் அவ்வக்கினியைக் காண்பது ஒரு சாதனை ஆதலின் அதனை உரைத்தார்.

**249.** **மாதூ வெளியின் மனமொன்ற வைத்தபின்**
**போதக மாகு முடம்பு.**

(இ - ள்.) மாதூ வெளியில் - சிறந்த பரிசுத்தமான வெட்டவெளியாகிய சூனிய நிலையில், மனம் ஒன்ற வைத்த பின் - மனம் பொருந்திய பிறகு, உடம்பு போதகம் ஆகும் - சரீரம் ஞானமயமாகும் எ - று.

இதுவுமது. தூவெளி - வெட்டவெளி, கபாலம்.

**250. சுத்தமோ டொன்றி மனமு மிறந்தக்கால்**
**முத்திக்கு மூல மது.**

(இ - ள்.) மனமும் - உள்ளமும், சுத்தமோடு ஒன்றி - பரிசுத்தமான ஓங்கார பிரணவத்துடன் பொருந்தி, இறந்தக்கால் - தன் இயல்பு அழிந்தால், அது முத்திக்கு மூலம் - அதுவே மோக்ஷத்துக்கு விதையாகும் எ - று.

இதுவுமது. தன்னியல்பு அழிந்து ஈசுரநிலை எய்துதல் வேண்டும் என்றபடி.

---

# இருபத்தாறும் அதிகாரம்

## ஞானநிலை

ஞானக்கண் கொண்டறிந்த குண்டலியின் சக்தியை உணர்ந்து, சுவாச முறைகளை ஞானத்தைப் பெருமாறு காட்டும் பகுதியாம். ஞானத்தை நிற்கச் செய்வது என்றபடி. இவ்வதிகாரம் 'சிவயோக நிலை' என்னும் 26-ம் அதிகாரமாக அச்சுப்பிரதிகளிற் காணப்படும்.

**251. ஒளியொன்றி நின்ற பொருளை யுணரி**
**லழிவின்றி நிற்கு முடம்பு.**

(இ - ள்.) ஒளி ஒன்றி நின்ற பொருளை - குண்டலியின் ஜோதியிற் பொருந்தி நின்ற சர்வேசுரனை, உணரில் - மனதால் அறிந்தால், உடம்பு அழிவின்றி நிற்கும் - உடல் அழியாமல் நிலைத்திருக்கும் எ - று.

இது ஞானத்தின் மூலபுருடனாகிய அழல்வடிவான கடவுளை அறிக என்று கூறுகின்றது. ஈசானே அழல் வடிவமாதலின் ஒளியொன்றி நின்ற பொருள் என்பதுமாம்.

இக்குறட்கு மாறாகத் "தயாவினில் வாயு வலத்தி லியங்கிற் றியான சமாதிகள் செய்" என்னுங் குறள் அச்சுப் பிரதியிற் காணப்பெறும்.

**252.** அடிமிசை வாயு வடுத்தடுத் தேகி
முடிமிசை யோடி முயல்.

(இ - ள்.) அடிமிசை வாயு - உந்திக் கமலத்தின்கீழ் மூலாதாரத்தினு மடியிலெழும் அபானனெனும் வாயுவை, அடுத்து அடுத்து - பலமுறை முயன்று, ஏகி - ஆறாதாரங்களிலும் போகச்செய்து, முடிமிசை - கபாலத்திடத்து, ஓடி முயல் - வேகமாய்ப் போயடையும்படி முயல்க எ - று.

இது ஞான புருடனை அடையும் வழியொன்று கூறியது. அபானன் என்ற வாயு கீழ்நோக்கியது; அதனைக் குண்டலி சக்தியால் மேல் நோக்கச்செய்து ஆதாரங்கள் ஆறையும் கடந்து கபாலமாகிய உச்சத்தை யடையச் செய்க என்றபடி.

**253.** உண்ணாடி வாயு வதனை யுடனிரப்பி
விண்ணோடு மெள்ள விடு.

(இ - ள்.) உள் நாடி வாயு அதனை - உள் நாடியாகிய குண்டலியிற் றங்கிய ஓங்கார வாயுவை, உடன் நிரப்பி - சுவாச

வாயுவுடன் கலந்து, விண்ணோடு மெள்ள விடு - சிதாகாய மெனும் கபாலத்திடம் செல்லுமாறு மெல்ல மேல் எழுப்புக எ - று.

இதுவுமது. குண்டலியில் உள்ள சக்தியை வாயு வென்றார். இனி வாயு - அபானனெனுமாம்.

**254. மெள்ள விரேசித்து மெய்விம்மிப் பூரித்துக்**
**கொள்ளுமின் கும்பக் குறி.**

(இ - ள்.) மெய் விம்மி - சரீரம் பெருக்கும்படி, பூரித்து- உட்சுவாசஞ்செய்து பின்னர், மெள்ள இரேசித்து - மெதுவாக நிச்சுவாசம்செய்து, பின்னரும், கும்பக் குறிகொள்ளுமின் குண்டலி வாயுவைக்கொண்டு - கும்பகஞ் செய்து அடக்கிவிடுங்கள் எ - று.

இது பிராணயாமமுறை வகுத்தது. இவற்றின் விவரமும் முன்னர் உரைக்கப்பட்டது.

**255. ரேசக முப்பத் திரண்டதே மாத்திரை**
**பூரகம் பத்தாறு புகும்.**

(இ - ள்.) ரேசகம் - இரேசகம் (வெளிச்சுவாசத்துக்கு), முப்பத்து இரண்டதோ மாத்திரை - முப்பத்திரண்டு மாத்திரையாம், பூரகம் பத்தாறு புகும் - பூரகத்துக்கு (உட் சுவாசத்துக்கு) பதினாறு மாத்திரையளவாகச் செல்லும் எ - று.

இஃது இரேசக பூரக கும்பக கால அளவை கூறுகின்றது.

**256. கும்பக நாலோ டறுபது மாத்திரைத்
தம்பித் திடுவது தான்.**

*(இ - ள்.) கும்பகம் - கும்பகம் என்னும் சாதனை, நாலோடு அறுபது மாத்திரை - அறுபத்துநாலு மாத்திரை காலம், தம்பித்திடுவதுதான் - உள்ளடங்கிய கூற்றினைத் தம்பகம்செய்து நிறுத்துவது எ - று.*

*இதுவுமது. பூரகஞ்செய்யும்போது அகாரமும், கும்பகஞ் செய்யும்போது உகாரமும், பூரகமும் கும்பகமுஞ் செய்யும்போது மகாரமும் சிந்திக்க என்பர். இது வல்லவர் வாய் கேட்டுணர்க.*

**257. முன்ன மிரேசி முயலும்பின் பூரகம்
பின்னது கும்பம் பிடி.**

*(இ - ள்.) முன்னம் - முதலில், இரேசி - இரேசகம் செய்க, பின் முயலும் பூரகம் - அதன்பின் முயல்கின்ற பூரகம் செய்க, பின்னது - அதன்பின், கும்பம்பிடி - சுவாசத்தைக் கும்பகம் செய்க எ - று.*

*இதுவுமது. உள்ளடங்கிய சுவாசத்தை வெளிப்படுத்திப் பின்னர் பூரகஞ்செய்து அதனைக் குண்டலியில் அடக்கிக் கும்பகம் செய்க என்றபடி.*

*இனிப் பூரகம் பனிரெண்டும் ஓங்காரம், கும்பகம் பதினாறும், இரேசகம் பத்தும் எனக் கணக்கும் உரைப்பர்.*

**258. ஈரைந் தெழுபத்தீ ராயிர நாடியுஞ்
சேருமின் வாயுச் செயல்.**

(இ - ள்.) ஈர் ஐந்து - இரண்டு ஐந்து பொருள்களையும், எழுபத்து ஈராயிர நாடியும் - எழுபத்தீராயிர நாடிகளுடன், வாயுச்செயல் - வாயுவின் இயக்கத்தால், சேருமின் - ஒன்று சேருங்கள் எ - று.

இது வாயுவின் இயக்கத்தாற் பெறும் பயன் கூறியது. ஈரைந்தாவன - ஐந்து மூர்த்தங்களும், ஐந்து இந்திரியங் களும். இவற்றை ஒன்றுபடுத்தலாவது குண்டலினிநிலையில் ஐக் கியப்படுத்துதல் இவற்றையே வாயில் என்றும் மேற் கூறு வர். மூர்த்தங்கள்: தற்புருடம், ஈசானியம், வாமனம், அகோரம், சத்திபோசாதம் என்பன.

**259. வாசலீ ரைந்து மயங்கிய வாயுவை
யீசன்றன் வாயுவி லேற்று.**

(இ - ள்.) ஈர் ஐந்து வாசல் மயங்கிய வாயுவை - பத்துப் பொருள்களினும் கலந்த வாயுவை, ஈசன் தன் வாயுவில் - ஈசனது வாயுவெனும் குண்டலி சக்தியில் - ஏற்று - சேரும் படி செய்க எ - று.

இதுவுமது. பத்துப்பொருள்கள் அர்த்தங்களும் இந்திரி யங்களும்.

**260. ஆதி யழல்போ லறிந்தைந் தெழுந்தினைப்
பேதியா தோது பினை.**

(இ - ள்.) ஆதி அழல்போல் - யோகத்திற்கு முதன்மையான அக்கினி ரூபத்தைப்போல, ஐந்து எழுத்தினை - ந, ம, சி, வ, ய என்ற எழுத்துக்களை, அறிந்து - உண்மையாக உணர்ந்து, பேதியாது - குண்டலி யோகத்திற்கு வேற்றுமை உண்டாகாமல், பிணை ஓது - அவ்வாயுவுடன் சேர்த்து ஓதுக எ - று.

இது வாயுவை யுட்சுவாச நிச்சுவாசங்களிற் செய்யவேண்டிய நியதி கூறியது. மூலமந்திரம் நமசிவய என்பது ஆகலின் அதனை ஐம்புலனாலும் ஐம்மூர்த்தத்தினாலும் ஒவ்வோரெழுத்தாகப் பொருத்திக் குண்டலிக்கனலை அவ்வைந்தெழுத்தாக அமைத்து ஞானம் பெறுக என்றார். இதை மேலும் 'ஞான நிலை' என்ற அதிகாரத்தில் விளக்குவர்.

---

# இருபத்தேழா மதிகாரம்

## மெய்யகம்

ஞானநிலை கண்டு தெளிந்த ஆன்மா, அகத்தில் உண்மை கண்டு தெளிந்து அநுபவமடைதல். மெய்யகம் - குண்டலி. இதுவும் முதற்குறட் குறிப்பாகப் பெயர் பெற்றது.

இஃது அச்சுப்பிரதிகளில் 23-ம் அதிகாரமாக அமைந்துள்ளது.

**261. மெய்யகத் துள்ளே விளங்கச் சுடர்காணிற்
கையகத்து ணெல்லிக் கனி.**

(இ - ள்.) மெய் அகத்து உள்ளே - உண்மையான உள்ளிடமாகிய குண்டலியினுள், சுடர் விளங்கக் காணில் - ஈசுரனது சோதிச் சொரூபம் விளங்குமாறு பார்த்தால், கை அகத்துள் நெல்லிக்கனி - அச்சுடர்தான் உள்ளங்கையி லுள்ள நெல்லிக்கனிபோற் றெற்றென விளங்கும் எ - று.

இறைவன் தன்மையைக் குண்டலியிற் காணலாம் என்றபடி. 'கரதலாமலகம்' என்பது வடசொற் பழமொழி.

**262. கறையற்ற செல்வத்தைக் காணுங்கா லில்லாத
வுரையற் றிருப்ப துணர்வு.**

(இ - ள்.) கறையற்ற செல்வத்தை - குற்றமில்லாத சிவானுபவச் செல்வத்தை, காணுங்கால் - அனுபவிக்கும் போது, இல்லாத உரை அற்று - பயனில்லாத வார்த்தையு மின்றி, இருப்பது உணர்வு - இருப்பதே உணர்ச்சி எனப் படும் எ - று.

இது மௌனநிலை கூறியது. சிவானுபவம் குண்டலி யோக அனுபவம். அந்நிலை எய்தினால், பேச்சும் அற்று மௌனநிலை உண்டாகும் என்பது பெறப்படும் "கண் மூடி மௌனியாய்ச் சும்மா இருக்கின்ற திறம்" என்று பெரியார் பணித்தது மறிக.

**263. உண்டு பசிதீர்ந்தார் போலுமுடி பெல்லாஅங்
கண்டுகொள்வ தாகு மது.**

(இ - ள்.) அது - அச்சிவானுபூதியான செல்வம், முடிபு எல்லாம் - முடிந்த எல்லாம் அனுபவிக்கத்தக்க பொருள்களையும், உண்டு பசி தீர்ந்தார் போலும் - உண்டு நுகர்ந்து பசியை ஒழித்துக்கொண்டதுபோல, கண்டு கொள்வதாகும் - (அச்செல்வத்தையும்) கண்டு நுகர்ந்ததாகும் எ - று.

இதுவுமது. விடயப் பொருள்களை நுகர்வதுபோலவே ஐம்புலனாலும் சூக்கும வுடலாலும் குண்டலியோகப் பயனை நுகர்வதாகும்.

**264. உரைசெயு மோசை யுரைசெய் பவர்க்கு
நரைதிரை யில்லை நமன்.**

(இ - ள்.) உரைசெயும் ஓசை - உள்ளெழுந்து எழுந்து சப்தம் செய்கின்ற ஓங்கார நாதவோசை, உரைசெய்பவர்க்கு - தம்முள் குண்டலிசக்தியில் உரைக்கின்றவர்க்கு, நரை திரை நமன் இல்லை - மூப்பும், கிழமும் இறப்பும் கிடையாது எ - று.

இது செல்வத்தை நுகருங்கால் எழும் நாதவோசையின் பெருமை யுரைத்தது. ஓசை - ஓங்காரம்.

**265. தோன்றுத தூயவொளி தோன்றியக்கா லுள்ளுற்ற
தோன்றுமற் காப்ப தறிவு.**

(இ - ள்.) தோன்றாத தூய வொளி - எளிதில் புலப் படாத தூய்மையான குண்டலியின் தேஜஸ், தோன்றியக்

கால் - சூக்குமத்தில் புலப்படும்போது, உள்ளூறத் தோன்றா மல் - ஆன்மாவில் மனம் பொருந்தாதபடி, காப்பது - அவ் வொளியைக் காப்பாற்றுவது, அறிவு - அறிவுடைமையாம் எ - று.

இது மனதை அடக்குந் தந்திரம் உரைத்தது. இறை வனது ஒளி உள்ளிடத்துத் தோன்றியதும், சிந்தை யின் சேட்டையை அடக்கவேண்டு மென்றபடி, அது தானு கவே அடங்குமென்பதும் விளங்கும். அவ்விதம் 'செய்யாக் கால் அறிவின்மையாம்.

**266.** வாக்கு மனமு மிறந்த பொருள்காணி
லாக்கைக் கழிவில்லை காண்.

(இ - ள்.) வாக்கும் மனமும் இறந்த பொருள் - வாக் கும் உள்ளமும் கடந்து நின்ற கடவுளை, காணில் - குண்டலி யோகத்திற் காணவும், ஆக்கைக்கு அழிவில்லை - தூல சூக்கும சரீரத்துக்கு அழிவில்லை எ - று. காண் - அசை.

இது சிந்தையும் வாக்கும் இரண்டும் கடந்தநிலை கூறி யது. பொருள் - கடவுள்.

**267.** கண்ணகத்தே நின்று களிதருமே காணுங்கா
லுள்ளகத்தே நின்ற வொளி.

(இ - ள்.) உள் அகத்தே நின்ற ஒளி - குண்டலியினுள் எழும் தேஜோமயம், காணுங்கால் - உற்று நோக்கில், கண் அகத்தே - கண்ணின் எதிர்முகமாக (ப்பிரத்யக்ஷமாக) காணுமே - தூலவுருவுடன் காணப்பெறும் எ - று.

சிந்தனையும் வாக்கும் கடந்தால் அருவமாகிய பதியும் உருவத்துடன் காட்சிதரும். ஈசன் காட்சி தந்ததாகப் புராணத்திற் கூறுவன யாவும் இத்தன்மையது என்றுணர்க.

**268. மறவாமற் காணும் வகையுணர் வாரு**
**மிறவா திருக்கலு மாம்.**

(இ - ள்.) மறவாமல் - இந்திரிய இயல்பால் சாதனையை விடாமல், காணும் - அத்தகைய ரூபத்தைத் தரிசிக்கும், வகை உணர்வாரும் - தன்மையை அறிந்த முமுக்ஷுக்களும், இறவாது இருக்கலும் ஆம் - ஆன்மலாபம் அடைவதன்றி மரணமில்லாமலும் சஞ்சீவிகளாகவும் இருக்கமுடியும் எ - று.

இது மேற்காட்சியின் பயன் கூறியது.

**269. ஆனந்த மான தறிந்தபின் னவ்வாசி**
**யானந்த மாகு மவர்க்கு.**

(இ - ள்.) ஆனந்தம் ஆனது - அக் காட்சி இன்பமயமானது என்று, அறிந்தபின் - உணர்ந்தபிறகு, அவ் வாசியான் - அச் சுவாச விசேஷத்தான், அவர்க்கு அந்தம் ஆகும் - அவ்வான்மாவுக்கு முடிவான ஊழ்ப்பயன் ஆகும் எ - று.

இதுவுமது. கடவுளைக் காண்பதே ஆனந்தமாதலின் என்க. வாசி - சுவாசம். ஈண்டு பூரக முதலிய மூன்றும், அந்தம் எனவே உலகவிடயத்தினும், ஊழ்வினையினும் முடிவு எனப் பொருள் கொள்க.

**270.** விண்ணிறைந்து நின்ற பொருளே யுடம்பத
னுள்ணிறைந்து நின்ற வொளி.

(இ - ள்.) உடம்பு - சீவன் முத்தியின் உடல், விண் நிறைந்து நின்ற பொருளே - ஆகாய முழுவதும் பரவியிரா நின்ற பராபரப்பொருளே, உள் நிறைந்து நின்ற ஒளி - அதுவே உள்ளே குண்டலியுள் நிறைந்திருக்கும் ஒளியாகும் எ - று.

இதுவும் அது. அங்நிலை யடைந்தால், உலகத்தையும் தூல சரீரம் வியாபித்திருக்கும் என்றபடி. திருமால் திருவிக் கிரமாவதாரமாகி மூவுலகுமளந்த தத்துவம் இதனால் அறியக் கிடப்பது உய்த்துணர்வார்க்குப் புலனும்.

---

# இருபத்தெட்டா மதிகாரம்

## அங்கியிற் பஞ்சு

மெய்யகங்கண்ட வுத்தமரும் ஊழ்வினையை ஒழித்த ல்வசிய மாகலின் பஞ்சுப்பொதிபோன்ற அதனைக் குண்டலி யழலால் எரிக்கும் முறை கூறியது. இதுவும் முதற் குறட், குறிப்பாற் பெயராயிற்று.

இஃது அச்சுப்பிரதிகளில் 22-ஆம் அதிகாரமாம்.

**271.** அங்கியிற் பஞ்சுபோ லந்தரத் தேநினைக்கிற்
சங்கிக்க வேண்டாஞ் சிவம்.

(இ - ள்.) அங்கியிற் பஞ்சுபோல் - நெருப்பினிடத்துப் பஞ்சு அழிவதுபோல, அந்தரத்தே நினைக்கில் - அந்தர நிலை

யாகிய கபாலத்தில் குண்டலியழல்பொருந்த-ஏனை புணர்வுகள் அழிந்தால், சிவம் - சிவசொரூபம் தன்னிடம் உண்டாவது, சங்கிக்கவேண்டாம் - சந்தேகப்பட வேண்டியதில்லை- எ-று.

கபால நிலையின் குண்டலிசத்தி தாக்கவும் ஏனை புணர்வுகளுடன் சஞ்சித ஊழ்வினையும் அழியும், அப்போது சிவகுணம் சூக்குமத்திற் றோன்றும், அது சந்தேகிக்க வேண்டாமென்றார்.

**272.** மெய்ப்பா லறியாத மூடர்த நெஞ்சத்தி
னப்பால தாகுஞ் சிவம்.

(இ - ள்.) மெய் பால் அறியாத - மெய்யகம் ஆகிய குண்டலி தத்துவத்தை உணராத, மூடர்தம் நெஞ்சத்தில் - மூர்க்கரது மனதிற்கு, சிவம் அப்பாலது ஆகும் - சிவ சின்னம் அப்புறமாகச் சென்றுவிடும் எ - று.

இது, தத்துவமறியாதவர்க்கு அங்கியிற் பஞ்சு அழியாது என்றபடி. மெய்ப்பால் உண்மைத் தத்துவமுமாம்.

**273.** நெஞ்சார நீக்கி நினைப்பவர்க் கல்லாஅ
லஞ்சலென் னாது சிவம்.

(இ - ள்.) நெஞ்சு ஆர நீக்கி - மனம் பொருந்தச் சஞ்சிதப் பொதியை ஒழித்து, நினைப்பவர்க்கு அல்லால் - ஈசனைச் சிந்திப்பவர்க்கல்லாத மற்றவர்க்கு, சிவம் அஞ்சல் என்னாது - சிவபிரான் பயப்படாதே என்று அபயம் அளிக்கான் எ - று.

இதுவுமது. நீக்குதல் - பாபச் செயல்களும் நினைவுகளும்.

**274.** பற்றிலா னொன்றினைப் பற்றினு லல்லாது
கற்றதனு லென்ன பயன்.

(இ - ள்.) பற்று இலாது - வேறு விடயப் பற்று இல்லாமல், ஒன்றினை - சர்வேசுரனை, பற்றினுல் அல்லாது - பிடித்துக்கொண்டாலல்லாமல், கற்றதனுல் பயன் என்ன - குண்டலியோகம் கற்று இயன்றதன் பயன்தான் யாது எ - று.

நிஷ்காமியமாகவும் ஈசுர சிந்தையாகவும் குண்டலி யோகம் பயிறல் வேண்டும் என்பது. 'பற்றுக பற்றற்ருன் பற்றினை' என்றும் 'கற்றதனுலாய பயன் என்கொல் வாலறிவன் நற்ருள் தொழாஅ ரெனின்' என்றும் நாயனுர் உரைத்ததும் ஈண்டு அறியற்பாலது.

**275.** தம்மை யறிவாரைத் தாமறிந்து கொண்டபின்
றம்மை யறிவாரோ தான்.

(இ - ள்.) தம்மை அறிவாரை - தம்மைத்தாமே அறிந்தவரைத், தாம் அறிந்து கொண்டபின் - தாமும் உணர்ந்து கொண்டபிறகு, தம்மை அறிவாரோ - தம் உலக வாசனையுடன் கூடியிருக்கும் இலெளகிக விடயங்களை அறிந்து கொள்வரோ எ - று. தான் - அசை.

இஃது ஈசுரநிலையை எய்தியவர் உலகப்பாசத்தினின்றும் விடுபடுவர் என்பது. தாம் என்பது தான் என்னும் உள்ளத்தறிவு.

**276.** **அசைவை யறிந்துள்ளே யழலெழ நோக்கி**
**லிசையாது மண்மேற் பிறப்பு.**

(இ - ள்.) அசைவை அறிந்து - அசைவு என்பதன் தன்மை அறிந்து, அழல் எழ உள்ளே நோக்கி - மூலாக்கினி எழுமாறு குண்டலியினுள் பார்த்தால், மண்மேல் பிறப்பு இசையாது - இப் பூமண்டலத்தில் மீண்டும் பிறப்பு உண்டாகாது எ - று.

இஃது அசபாயோக முறைத்தது. அசபை - ஆது அதன் றன்மை அசைவிடுதல். அதைப்போல் தூல சரீரத்தின் உறுப்புக்களை யோகசாதனைக்கு ஏற்றபடி அமைப்பதாம். இனி அசபை, என்பது சுவாச முயற்சியில் எழும் 'ஹம் - சம்' 'ஸோ-ஹம்' என்னும் ஓசையும், அவற்றை மந்திரமாக உச்சரிக்கும் தந்திரமென்றும் கூறுப. இவற்றைச் *சிவயோக சாரம் முதலிய பரந்த நூலுட் கண்டு கொள்க. அழல் எழ நோக்கல் - மூலாக்கினி உண்டாக்குதல். இஃது அசபா மந்திரத்தால் முடியும் என்பதும் அறியலாம்.

**277.** **இமையாத நாட்டத் திருந்துணர் வாருக்**
**கமையாத வானந்த மாம்.**

(இ - ள்.) இமையாத நாட்டத்து - அசைவு இல்லாத பார்வையுடன், இருந்து - குண்டலி நிலையிற் பொருந்தி,

---

* இது, பெரிய ஞானக்கோவை யென்னும் எமது (பி. நா. சி. பிரதர்ஸ்) பதிப்பில் அடங்கியது. விலை. 1—8—0.

உணர்வாருக்கு - ஜோதி யொளியை அறிபவருக்கு, அமை யாத ஆனந்தம் ஆம் - நீங்காத ஆனந்தம் ஆகும்.

இதுவுமது. இமையாத நாட்டம் பரியாயமாக அசபா யோகத்தை யுணர்த்தியது.

**278. துரியங் கடந்த சுடரொளியைக் கண்டான்
மரணம் பிறப்பில்லை விடு.**

(இ - ள்.) துரியங் கடந்த சுடர் ஒளியைக் கண்டால் - துரியநிலையையும் கடந்திருக்கும் பரஞ்சோதியாகிய கடவுளின் ஒளியைக் கண்டபிறகு, வீடு - மோக்ஷமே யாம், மரணம் பிறப்பு இல்லை - ஜென்மமும் மரணமும் கிடையாது எ - று.

இதுவுமது. சுடரொளி; கடவுள் - அன்றிக் குண்டலி யொளியுமாம்.

**279. மதிபோ லுடம்பெல்லா மாசற நோக்கில்
விதிபோ யகல விடும்.**

(இ - ள்.) மதிபோல் - சந்திரகலையைப்போல், உடம்பு எல்லாம் மாசு அற நோக்கில் - தேக முழுவதும் குற்றம் நீங்குமாறு பார்க்க, விதிபோய் அகலவிடும் - ஊழ்வினைச் சஞ்சிதம் வெகு தொலைவில் அகன்றுவிடும் எ - று.

இதுவும் பயனுரைத்தது. சந்திரகலையாக உடல் முழுவதும் செய்யக் குற்ற நீங்கும், நீங்க ஊழ்வினை யழியும்.

**280. சீவன் சிவலிங்க மாகத் தெளிந்தவர்தம்
பாவ நசிக்கும் பரந்து.**

(இ - ள்.) சீவன் சிவலிங்கம் ஆக - சீவான்மாவே சிவ லிங்கமாக அமைந்துவிட்டது என, தெளிந்தவர்தம் - தெளிவு அடைந்த அறிவுடையவருடைய, பாவம் பரந்து நசிக்கும் - பாவமுற்றும் விசாலித்து இருப்பினும் அழிந்துவிடும் எ - று.

இதுவுமது. சிவலிங்கமாவது, தன்னுள்ளேயே சிவ சொரூபத்தைக் காண்பது. இத்தந்திரம் முன்னரே விளக்கப் பட்டது.

இவ்வதிகாரத்திற்
"பஞ்சமா சத்தி யறுப்பவர்க் கல்லாதை
யஞ்சலென் னாது சிவம்"
என்ற குறள் மிகையாக ஏட்டுப்பிரதியிற் காணப்படுகிறது.

---

# இருபத்தொன்பதா மதிகாரம்

## ஞான நிலை

சஞ்சிதப் பாவழியப்பெற்ற சீவன் ஞானநிலை எய்தும் வழி கூறுகின்றது. இஃது 27 - ஆம் அதிகாரமாக அச்சுப் பிரதிகளிற் கண்டது.

**281. தற்புருட மாமுகந் தன்னிற் றனியிருந்
துற்பன மஞ்சை யுரை.**

(இ - ள்.) தற்புருட மாமுகம் தன்னிற் - தற்புருடம் என்னும் சிறந்த முகத்தில், தனி இருந்து - தனிமையில்

இருந்து, உற்பனம் அஞ்சை - உயர்ந்ததாகிய ஐந்தெழுத்தை, உரை - உச்சாடனஞ் செய்க எ - று.

இது சிவமுகூர்த்தம் ஐந்தனுள் தற்புருட உருவில் உபாசனைசெய்யும் விதம் கூறியது. ஐம்முகமாவது: தற்புருடம், ஈசானியம், வாமனம், அகோரம், சத்தியோசாதம் என்பன. இவை முன்னர் விளக்கப்பட்டன.

தற்புருடம் - விந்துக் கலையுமாம்.

**282. தற்புருட மேலாகத் தாரகை நிற்பது
முற்பே ரொளியா மது.**

(இ - ள்.) தற்புருட மேலாக - தற்புருட முகத்தின் மேல், தாரகை நிற்பது - நக்ஷத்திரத் தொகுதி யிருப்பது, முன்பேர் ஒளியாம் அது - அதுவே அம்முகத்துக்கு முந்திய பெரிய ஒளியாகும் எ - று.

இதுவுமது. தற்புருடத்தின்மேல் தாரகையாவது கபாலத்தில் எழும் பேரொளி என்க.

**283. ஓதிய தற்புருடத் தொவ்வெச் சுழுமுனையிற்
பேதியா தோது பிணை.**

(இ - ள்.) ஓதிய - உரைத்த, தற்புருடத்து - தற்புருஷ ரூபத்திலிருந்து செபிக்குங்கால், சுழுமுனையில் ஒவ்வை - சுழுமுனைச் சுவாசத்தில் ஓங்காரத்தை, பேதியாது பிணை ஓது - பேதமுண்டாகாதவாறு கலந்து உச்சரிக்க எ - று.

இதுவுமது. ஓங்கார ஓசை எழுங்கால் சுவாசம் மாறுபடாதவாறு இடைகலை, பிங்கலைகளையும் பயின்றபின்னர்ச் சுழுமுனையில் நிறுத்துக என்றார்.

**284. கொழுந்துற வன்னி கொடுவுற வொவ்வி**
**லெழுந்தா ரகையா மிது.**

(இ - ள்.) ஔவில் - ஓங்காரத்தில், கொடு உற - செம்மையுற, வன்னி - மூலாக்கினி, கொழுந்து உற - கொழுந்துவிட்டதுபோற் சுவாலை பொருந்தவும், தாரகையாம் இது - நக்ஷத்திரக் கூட்டமாகிய இது, எழும் - தோன்றும் எ - று.

இதுவுமது. ஓங்காரநாதம் மூலாக்கினியுடன் கலக்கும் தந்திரமுரைத்தது. (நக்ஷத்திரக் கூட்டம், கபாலமென முன்னர்க் கண்டோம்)

நின்றிடு விந்துவென் னுள்ள வெழுத்தெலா
நின்றிடு நாதமு மோங்கு மெழுத்துடன்
நின்றிடு மப்பதி யவ்வெழுத் தேவரின்
நின்றிடு மப்புறந் தாரகை யானதே.

என்ற திருமந்திரமும் அறிக.

**285. மறித்துக் கொளும்வீடு வன்னி நடுவே**
**குறித்துக் கொளுஞ் சீயைக் கூட்டு.**

(இ - ள்.) வீடு மறித்து கொளும் - மோக்ஷ நிலையாகிய சிதாகாயத்தைத் தன்னிடம்விட்டு மீண்டும் போகவிடாது

செய்து கொள்ளுப், வன்னி நடுவே - மூலாக்கினியின் நடுவிடத்தில், குறித்துக்கொளும் - பஞ்சாட்சரத்தில் குறிப்பாகக் கொள்ளப்படும், சீயைக்கூட்டு - சிகாரத்தைச் சேர்த்துமுடிக்க எ - று.

இதுவுமது. ஓங்காரத்தின் பின்னர், நமசிவாய என்னும் பஞ்சாட்சரத்திற் சிறப்பாகப் பாராட்டப்படும் சிகாரத்தை மூலாக்கினியுடன் சேர்க்க என்றார். இனிக் குறித்துக் கொளும் என்றதால், நமசிவாய என்ற முழு மந்திரத்தையும் கூறியதாகக் கொள்ளினுமாம்.

**286.** **காலுந் தலையு மறிந்து கலந்திடிற்**
**சாலவும் வேண்டாம் பிறப்பு.**

(இ - ள்.) காலும் தலையும் - அடியும் முடியுமாகிய (ந, ய) எழுத்துக்களையும், அறிந்து - உணர்ந்து, சாலவும் கலந்திடில் - மூலாக்கினியுடன் மிகவும் சேர்த்துவிடில், பிறப்பு வேண்டும் - மறு பிறவியே அடையவேண்டியதில்லை எ - று.

இது. பஞ்சாட்சரத்தை உச்சரிக்கு முறை தெரிந்து ஒவ்வோரெழுத்தையும் பொருத்துவதன்றி, முதல் கடையெழுத்துக்களை மூலாக்கினியுடன் புணர்த்தும் தந்திர முரைத்தது; இதுவும் குருமுகத்தானறியக் கிடந்தது. இனிப் பிராணவாயுவும் உள்ளிடத்து வாயுவும் கலக்கும் தத்துவமென்பாருமுளர் எ - று.

**287.** **பொன்னொடு வெள்ளி யிரண்டும் பொருந்திடி**
**யன்னவன் றாளதுவே யாம்.**

(இ - ள்) பொன்னொடு வெள்ளி இரண்டும் - நாதமும் விந்துவும் ஆகிய இரண்டும், பொருந்திடில் - ஆறு தாரங்களி லும் பொருந்திவிட்டால், அதுவே - அந்நிலையே, அன்னவன் - நாதவிந்து சுரூபனான ஈசனது, தாள் ஆம் - திருப்பாதங்க ளாம் எ - று.

இஃது ஈசன் திருப்பதங்களை யுள்ளிடத்திலேயே தெரிசிக்கும் தத்துவ முறைத்தது. நாத விந்துக் கலைகளை ஈசுர நிலை யென்பது "நாதவிந்து கலாதீ நமோ நமோ" என்று அருணகிரிநாதர் திருவாக்கானு மறிக.

**288.** **நின்ற வெழுத்துட னில்லா வெழுத்தினை**
**யொன்றோசை வைக்கி லொளி.**

(இ - ள்.) நின்ற எழுத்துடன் - மனதுடன் நில்லா, எழுத்தினை - சுவாசத்தை, ஓசை ஒன்ற வைக்கின் - நாத வோசை பொருந்தவைத்தால், ஒளி - தேஜோமய ஒளி உள்ளிடத்தே உண்டாகும் எ - று.

இது மனதுடன் இரேசக பூரக கும்பக இயைபு கூறு கின்றது. நின்ற எழுத்து - பேசுமெழுத்து. மனம் நில்லா எழுத்து - பேசா எழுத்து. வாசி, (சுவாசம்), பரியாயப் பெயர்கள். இனி நாத விந்து என்பாரு முளர்.

**289. பேசா வெழுத்துடன் பேசு மெழுத்துறி
ஞசான் பரனந்தி யாம்.**

(இ - ள்.) பேசா எழுத்துடன் - சுவாசத்துடன், பேசும் எழுத்து உறின் - மனம் பொருந்தியக்கால், பரன் ஆசான் ஆம் - பரமனுகிய சிவபிரானை ஞானுசாரியனுக அமைவன் எ - று.

இதுவுமது. மனதில் சுவாசம் அடங்குவ்து முற் கூறிஞர். இதில் சுவாசத்தில் மனம் ஐக்கியமாகும் ததுவ் முரைத்தார். அவ்விதம் உள்ளம் அடங்கியக்கால், ஈசனே ஞானுசிரியனுய் உபதேசம்செய்து ஞானதீக்ஷை செய்வான் என்றபடி.

**290. அறியா வுயிரை யருளுடன் வைக்க
வறியாத தொன்றில்லை யாம்.**

(இ - ள்.) அறியா உயிரை - உலகச் சேட்டையின் கொடுமையை அறியமாட்டாத ஆன்மாவை, அருளுடன் வைக்க - அருள் வழியான ஈசுர தியானத்தில் வைக்க, அறி யாதது ஒன்று இல்லையாம் - தத்துவம் அறியவேண்டியவை யாதொன்றும் எஞ்சியிராது எ - று.

இது புறனடை. உயிர் - ஆன்மா. அருள் - அருள் வடிவான ஈசன். இது கூற, குண்டலி யோகத்திற் காணும் உருவினைக் கூறியதாம்.

இவ்வதிகாரத்தில்

பத்துநா லாயிரத்து நானூறு காலுமே
நித்தம் பிரியா நிலை.

என்ற குறள் அதிகபாடமாக ஓலைச்சுவடிப் பிரதியிற் காணப் படுகின்றது.

---

# முப்பதா மதிகாரம்

## ஏகாந்தம்

ஞான நிலை எய்திய ஆன்மா, ஏனைச் சாதனங்களைப் பயில்வதற்குத் தனிமையே சிறந்ததாகலின், அத்தனிமையை யுரைக்கின்றார். ஏகாந்தம் - தனிமை. இது சிந்தை மொழி செயல் மூன்று மடங்கியது. இதுவும் முதற் குறட் குறிப் பாய்ப் பெயர் வந்தது.

இது 'ஞானம் பிரியாமை' என்ற தலைப்புடன் 28 - ஆம் அதிகாரமாக அச்சுப் பிரதியிற் றோன்றுகிறது.

**291.** சாகா திருந்தநல மௌன மதுவேஏ
யேகாந்த மாகி யிரு.

(இ - ள்.) சாகாது இருந்த நலம் - உடலும் உயிரும் அழியாதபடி தவத்தை யொத்த பலன்தருவது, மௌனம் - மௌனநிலையாகிய குண்டலினி பதம், ஏகாந்தம் அதுவே ஆகி

இரு - அதனையே ஏகாந்தத்தில் அனுபவிக்கும் பொருளாகிப் பொருந்தியிரு எ - று.

இஃது ஏகாந்தமடையும் வழி கூறியது. குண்டலியே தவமும், ஏகாந்தமும். அக் குண்டலி யோகத்தில் அமிர்தம் பெருக்கி மனம் வாக்குக் காயம் அழிந்து சூனிய பதவியில் மௌனமாய்ப் பொருந்தி யிருப்பதே ஏகாந்தம் என்றபடி.

**292. பிறந்திட மாலிடம் பேரா திருப்பி
விறந்திடம் வன்னி யிடம்.**

(இ - ள்.) மால் இடம் - திருமாலிடமெனத் தகும் நாபி யாகிய மணிபூரகமே, பிறந்த இடம் - அக் குண்டலியின் ஒளி பிறந்த இடம், பேராது இருப்பின் - அதனைப் பயன் காணாது, ஆங்கே யிருந்திவிட்டால், இறந்த இடம் வன்னி யிடம் - கடந்துபோய் நிற்குமிடம் அக்கினி குண்டமாகிய விசுத்தியாம்.

இஃது ஏகாந்தம் பயிலுதல் உறும் இன்னல்கள் குறித் தது. ஆறு ஆதாரங்களையும் கடக்குங்கால் நெருப்பாறுபோன்ற விசுத்தியை குண்டலி கடப்பது அரிது என்பதாம்.

**293. வெளியி னடுவில் விளைந்த விளாங்கனிபோ
லொளியி லொளியா யுறும்.**

(இ - ள்.) வெளியில் நடுவிலும் - வெளியோட்டிலும் நடுவிலுள்ள பழத்திலும், விளைந்த - பொருந்திய (தொடர்பை

யுடைய) விளாங்கனிபோல் - விளாம்பழத்தைப்போல், ஒளியில் ஒளியாம் - ஒளிக்குள், ஒளியாக உறும் - குண்டலிசக்தி ஈசுரவெளியில் பொருந்தும்.

இஃது ஈசுர குண்டலி சம்பந்த முரைத்தது. ஒன்றுக்கொன்று பட்டும் படாததுமாய் ஒன்றிலொன்று அடங்கிய துணர்த்துகிறது.

**294.** மறவா நினைவா மவுனத் திருக்கிற்
பிறவா ரிறவார் பிறகு.

(இ - ள்.) மறவா நினைவாம் - மறதியும் நினைவும் இல்லாத நிலையாகிய மௌனத்து, இருக்கின் - மௌனமெனும் குண்டலியோகத்திருந்தால், பிறகு - பிறவார் இறவார், பின்னர் பிறக்கவுமாட்டார் இறக்கவுமாட்டார் எ - று.

இது குண்டலியோகப் பெருமை யுரைத்தது. அவ்யோகத்திருப்பவர் சாக்கிராதா சொப்பன நிலைகளைக் கடந்தவராம் எ - று.

**295.** குருவாம் பரனந்தி கூடல் குறித்தாங்
கிருபோது நீங்கா திரு.

(இ - ள்.) குருவாம் பரனந்தி - குருமூர்த்தியாகிய பரமசிவன், கூடல் குறித்து - குண்டலியோகத்தில் சேருவதைக் கருதி, இருபோதும் - இரண்டுபொழுதிலும், நீங்காது இரு - அவ்யோகத்தை விட்டு நீங்காமல் ஒழுகுக எ - று.

ஈசன் குருவாகுநிலை பேசாவெழுத்துடன் (குறள் 289 என்னுங் குறளிற் கூறப்பட்டது. சிவன் குருவாக விளங் கும்வரை, ஏகாந்தம் விடாதே என்றபடி.

**296. சுந்தரச் சோதி துலங்கு மிடமது**
**மந்திரச் சக்கரமு மாம்.**

(இ - ள்.) சுந்தரச் சோதி - வெகு அழகிய ஒளி, துலங் கும் இடம் அது - விளங்குகின்ற இடமாகிய உந்திக்கமல மாகிய, மந்திரச் சக்கரம் ஆம் - ஷட்சக்கர மந்திர நிலையும் ஆகும் எ - று.

இடம் குண்டலியுமாம். அதுவே ஷட்சக்கர (6 ஆதா ரத்துச் சக்கரம்) வடிவுடையது என்பது. இதன் விவரம் பாந்தநூலுட் காண்க.

**297. தூராதி தூரநா செல்லத் தொலையாது**
**பாராப் பராபரத்தைப் பார்.**

(இ - ள்.) தூராதி தூரம் - வெகு தொலைவில், நா செல் லத் தொலையாது - நாவினால் உரைத்துக் காணமுடியாது. ஆகையால், பாரா பராபரத்தை - கண்ணாலும் பார்க்கலாகா ஈசனை, பார் - குண்டலியின் மகிமையாற் காண்க.

வாக்குக்கும் எட்டாப் பொருளைச் சூக்குமத்தாலறிக. நாசெல்லல் - புகழ்தலுமாம். பராபரம். ஈசன், இனிப் பர அபர வித்தைக ளெனினுமாம்.

**298.** ஏரொளி யீதென் னிறைவ னுறைந்ததே
யீரொளி மீதி னிலை.

(இ - ள்.) ஏர் ஒளி ஈது என்று - சிறந்த ஒளி யிதுதா னென்று கருதி, இறைவன் உறைந்தது - ஈசான் தங்கி யிருந்தது, ஈர் ஒளி மீதில் நிலை - நாதவிந்து இயக்கத்து ஒளி யின் இருப்பிடமாகிய குண்டலியாம்.

குண்டலியே முச்சுடரினும் ஒளிமிக்கது என்றது தெரிய லாம்.

**299.** அந்தமு மாதியு மில்லா வரும்பொருள்
சுந்தர ஞானச் சுடர்.

(இ - ள்.) சுந்தர ஞானச்சுடர் - அழகிய அறிவை விளக்கும் சுடராகிய குண்டலி சக்தியே, அந்தமும் ஆதியும் இல்லா அரும்பொருள் - முடிவும் தொடக்கமும் இல்லாத அரிய பொருளாகிய பரமன் போன்றதாம். எ - று.

இதுவுமது. " கடவுளே சுடர் என்றுரைப்பில் அது விளங்கிய பொருளாதலின் விசேடமின்மை யறிக்.

**300.** இதுமுத்தி சாதன மிப்படி யெனநூல்
பதிவைத் தனன் குருவைப் பார்.

(இ - ள்.) இது முத்தி சாதனம் இப்படி - இது முத்தி யாகும், அதை யடையும் சாதனம் - இம் முறையால், என நூல் பதிவைத்தனன் - என் நூலைப்போல் மனதிற் பதிய

வைக்கும் திறனுடையான் ஆகிய, குருவைப்பரம் - ஆசானாகிய குண்டலியைத் தேடி அடைக.

ஈண்டு ஆசான், ஞானகுருவை மட்டிலல்ல, குண்டலிக்குள் எழும் ஞானச்சுடர் என்பது கொள்ளப்படும்.

---

# முப்பத்தோரா மதிகாரம்

## மெய்ந்நெறி

எல்லாவகையினும் சித்தியடைந்து குண்டலி யோகத்தின் பயனும் முற்றுப்பெற்ற சீவான்மா அவ்வுண்மை நெறியிலேயே ஒழுகவேண்டிய நியதி கூறுகின்றது. முன்னதிகாரத்துக்கும் புறனடையாம்.

இஃது அச்சுப்பிரதியில் 29 - ம் அதிகாரமாக அமைந்துளது. இதுவே யீற்றதிகாரமென்பது கடைசிக் குறளாலறியலாம்.

**301.** **செல்ல னிகழல் வருங்கால மூன்றினையுஞ்**
**சொல்லு மவுனத் தொழில்.**

(இ - ள்.) செல்லல், நிகழல், வருங்கால மூன்றினையும் - இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்கால மென்ற முக் காலத்தையும், மவுனத்தொழில் சொல்லும் - மவுன நிலையிலே அறிந்து கொள்ளச் செய்யும் எ - று.

மௌனம் என்பது ஈண்டு, முன்னுரைத்ததுபோல, குண்டலியால் கபாலத்திற் சமாதி யிருத்தல். "கற்கலாம் கேட்கலாம்" (குறள்) என்றதன் உரையும் ஈண்டு உணரற்பாலது.

**302.** பஞ்சிற் படுபொறி போலப் பரந்திருந்து
துஞ்சாது ஞானச் சுடர்.

(இ - ள்.) ஞானச்சுடர் - மூலாக்கினி, பஞ்சில்படு பொறி போல - பஞ்சுப் பொதியில் படும் தீப்பொறியைப்போல, பரந்து இருந்து - தேக முழுவதும் பரவித் தீக்குணங்களை எரித்துத் தங்கியிருந்து, துஞ்சாது - அவியாது எ - று.

இது மூலாக்கினியின் றன்மை யுரைத்தது பஞ்சிற் பொறி யென்ற வுவமையால் சஞ்சிதப் பொதியும் கொள்க.

**303.** இமைப்பினிற் பந்தங் கெடுக்கு மின்போல
நமக்குச் சிவன்செய லால்.

(இ - ள்.) மின்போல - மின்னல் தோன்றி மாறுவது போல், இமைப்பில் - இமைக்கும் நேரத்தில், சிவன் செயலால் - உள்ளெழும் சக்தியின் செயலால், நமக்குப் பந்தம் கெடுக்கும் - நமக்கு உள்ள இலௌகிக கட்டுக்கள் அழிந்து விடும் எ - று.

இதுவுமது. சிவன் ஈண்டுக் குண்டலி சக்தி கெடும் என்பது கெடுக்கும் நிச்சயத்தைக் காட்டியது.

**304.** குவித்து மனத்தைக் குறித்துள்ளே நோக்கிற்
செவித்துப் பெறுவ தேவன்.

(இ - ள்.) மனத்தைக் குவித்து - அந்தரான்மாவை அடக்கி, உள்ளே குறித்துநோக்கில் - குண்டலியினுள்ளிடத்தே சக்தி எழும் விதத்தைக் கருதிப்பார்த்தால், செவித்துப் பெறுவது எவன் - மந்திரங்கள் உருவேற்றிப் பெறத்தகும் வேறு பயன் யாது எ - று.

இதுவுமது. உள்ளே - குண்டலியினுள்.

**305.** காலுந் தலையு மொன்றாய்க் கலந்திடி
னாலா நிலையென நாடு.

(இ - ள்.) காலும் - மூலாதாரமும், தலையும் - உச்சி நிலையாகிய கபாலமும், ஒன்றாய்க் கலந்திடில் - ஒன்று படும்படிக் குண்டலிசக்தியால் கலந்துவிட்டால், நாலாம் நிலை என நாடு - நாலாவது நிலையாகிய சாயுச்சிய பதவி என்பதை அறிக எ-று.

மேற் காலுந் தலையும் (குறள்) என்றதும் இதுவே. கால் மண்ணாகவும், தலை ஆகாயமாகவும் கொண்டு பரியாயமாக மூலாதாரம் கபாலம் என உரைப்பர் எ - று.

நாலாம் நிலை - சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்ற நான்கனுட் கடைசிநிலை. சாலோகம் - கடவுள் சிருட்டித்த வண்ணமிருத்தல், சாமீபம் - கடவுளை நினைந்து தியானித்திருத்தல், சாரூபம் - காமாதி குணங்களை நீக்கிச்

சத்துவகுண மேலிட்டிருத்தல், சாயுச்சியம், தான் என்பது அற்றுக் கடவுளொடு வசித்தல். இவை விரிக்கிற் பெருகும்.

இனித் துரியநிலை என்பாருமுளர்.

**306.** மூல நிலமிசை மூன்று நிலத்தினி
லால மருந்துஞ் சிவம்.

(இ - ள்.) மூல நில மிசை - மூலாதாரத்தில் அமர்ந்து, மூன்றும் நிலத்தினில் - சாரூபப் பதவியிலிருந்து, சிவம் - குண்டலிசக்தி, ஆலம் அருந்தும் - சிவன் அருந்திய விடத்தைப்போல், காமாதிய விடய விடங்களை நசிக்கப் புசிக்கும் எ - று.

இதுவுமது. மூன்றுநிலம் - சாரூப்பம், அது காம முதலிய தீக்குணங்களை ஒழித்த நிலையாதலின் அக்குணங்களைக் குண்டலி சக்தி அழிக்கும் என்றது. சிவன் ஆலமருந்திய உவமை முகத்தான் விளக்கப்பட்டது. சிவம் - ஈண்டுக் குண்டலி சக்தி.

**307.** எழிலுறு முச்சியின் மேன்மனம் வைக்கிற்
றொழிலொன் றிலாத சுடர்.

(இ - ள்.) எழில் உறும் உச்சியின்மேல் - அழகு தரும் குண்டலி சக்தியின் உச்சியின்மேல், மனம் வைக்கின் - கருத்தினை யிருத்தவும், தொழில் ஒன்று இலாத - அசைதல்

முதலிய் இல்லாத (மௌன நிலையாகிய) சுடர் - ஞானச் சுடர் தோன்றும் எ - று.

இதுவும் குண்டலியின் சிறப்புணர்த்திற்று. தொழில் இல்லாத என்றதால் மௌனநிலை கொள்க.

**308.** அடைத்திட்ட வாசலின் மேன்மனம் வைத்துப்
படைத்தவன் றன்னையே பார்.

(இ - ள்.) அடைத்திட்ட - சர்ப்பம்போன்ற தலையால் முத்திரை யிட்டதுபோல் மூடப்பட்டுள்ள, வாசலின்மேல் - குண்டலியின் மேலிடத்து, மனம்வைத்து - மனம் சுவாச முதலிய எல்லாச் சக்திகளையும் பொருத்தி, படைத்தவன் றன்னையே பார் - உலகைப் படைத்த பரமனையே உள் ளிடத்துப் பிரத்தியக்ஷமாகக் காண்க எ - று.

இதுவுமது. குண்டலியின் உருவம் முன்னர் உரைக்கப் பட்டது. சர்ப்பம்போன்ற மூடியை மூலக்கனலால் எழுப்பும் தந்திரம் அறிந்தபின்னரே ஏனைச் சாதனங்கள் அமையும்; அது செய்யக் கடவுளையே கண்கூடாகக் காணலாம் என்றபடி.

**309.** அறுபத்தொ டாறு வருட மிதானு
முறுதியி தாக வுணர்.

(இ - ள்.) அறுபத்தொடு - பத்தொடும் ஆறு ஆகிய பதினாறு கலைகளின், ஆறு - வழியாகவே, வருடம்தோறும் -

இம்முறையே ஒரு வருட காலத்திலும், உறுதி யிது ஆக உணர் - இதனை உறுதியாக அடையலாம் என்பதை அறிக எ - று.

இவ்வகை முயற்சியால் ஒரு வருடத்திலும் பயன் காணலாம் என்றது. அறுபத்து என்பதை பத்தொடு ஆறு என்று சந்திரகலை யெனப் பரியாயமாகக் கொள்க.

**310. முத்துநகை யௌவைசொன் முந்நூற்றுப் பந்துமுன்**
**சித்தத்தில் வைத்துத் தெளி.**

(இ - ள்.) முத்து நகை - முத்துப்போன்ற நகையுடைய, ஒளவை - ஒளவையர் சொல் அருளிச்செய்த, முந்நூற்றுப் பத்தும் - முந்நூற்றுப் பத்து ஆகிய இக்குறள்களை, உன் சித்தத்தில் - உன் உள்ளத்தில் வைத்து நிறுத்தி, தெளி - அனுபவ முகத்தான் அறிந்துகொள் எ - று.

இது காந்தியுரை. ஒளவையார் அருளிச்செய்த நூல் கற்றால் நற்கதி யடையும் வழியை அறிந்தநாம்.

ஒளவையார் அருளிச்செய்த
குறள் முந்நூற்றுப் பத்து
மூலமும் உரையும் முற்றிற்று.

---

